# சோமனின் உடுக்கை



சிவராம காரந்த்

தமிழில் :

**தி.சு.சதாசிவம்**

# சோமனின் உடுக்கை


கே.சிவராம காரந்த்

தமிழில்: தி.சு.சதாசிவம்



ராஜராஜன் பதிப்பகம்

19 கண்ணதாசன் சாலை

தி.நகர், சென்னை - 17

Rs. 40-00

SOMANIN UDUKKAI

by

Dr. K. SHIVARAM KARANTH

Tamil Translated: T.S. SADHASIVAM

First Edition : 2002

Published by:

RAJARAJAN PATHIPPAGAM

19 Kannadhasan Salai

T.Nagar Chennai - 600 017.

Typeset:

Oviyam

Chennai - 600 020

Printed at:

Sakthi Printers

Chennai - 21.

# அறிமுகம்

இக்கன்னட நாவலின் மூல ஆசிரியர் டாக்டர் திரு.கே. சிவராம காரந்த் அவர்கள் இளமையில் தான் தொகுப்பாசிரியராகப் பணியாற்றிய ஒரு இதழின் பக்கங்களை நிரப்புவதற்காக ஒரு துப்பறியும் கதை எழுதும் எழுத்தாளராகத்தான் தன் எழுத்துப் பணியைத் தொடங்கினார். ஆனால், விரைவிலேயே எழுத்துப் பணியை மிகவும் ஆத்மார்த்தமாக எடுத்துக் கொண்டு சமூக சீர்திருத்தத்திற்கான கருவியாக எழுத்து ஊடகத்தைப் பயன்படுத்தத் தொடங்கினார். படிப்படியாக அவரது இலக்கியப் பார்வை என்பது, சமூகக் காரணங்களுக்காக என்பதிலிருந்து, வாழ்க்கையை, அதில் பெற்ற பட்டறிவை, மனிதனின் எதார்த்த நிலையை மிகவும் துல்லியமாக அசலாகப் படம்பிடித்துக் காட்டுவதுதான் என்பதாக மாறியது.

இக்கண்ணோட்டத்தின் அடிப்படையில்தான் 1931ஆம் ஆண்டில் ''சோமன துடி'' - நாவலைப் படைத்து நவீன இலக்கிய உலகில் தன் முதல் முத்திரையைப் பதித்தார். இந்நாவல், திரைப்படமாக உருவானபோது அதன் சிறப்பு நாடெங்கும் அறியப்பட்டதோடு மிகச் சிறந்த இலக்கியப் படைப்பாகவும் பாராட்டப்பட்டு பெரும் புகழ்பெற்றது. கன்னடத்தில் இதுவரை 14 பதிப்புகளைக் கண்ட இந்நாவல் அனேகமாக எல்லா இந்திய மொழிகளிலும் பல ஆண்டுகளுக்கு முன்பே மொழிபெயர்க்கப் பட்டுவிட்டது. நமது பெருமைமிக்க தமிழில் மட்டும் இந்நாவல் இதுவரை வராமலிருந்தது வருத்தம் தரக்கூடியது. என்றாலும் இப்போதாவது தமிழ் இலக்கிய ஆர்வலர்களுக்கு நூல் வடிவில் தர முடிகிறதே என்று எண்ணி மகிழலாம். இதற்கு வழிவகை செய்த ராஜராஜன் பதிப்பக பொறுப்பாளர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி.

மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும் இடைப்பட்ட கருநாடக மாநிலத்தின் கரையோர மாவட்டமான தென் கன்னடத்தின் 'கோட்டா' என்னும் சிற்றூரில் 1902ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 10ஆம் நாள் பிறந்த டாக்டர் கே.சிவராம காரந்த் அவர்கள், அந்நிலப் பகுதி சார்ந்த ஏழை எளிய மக்களின் வாழ்க்கையோடு, மலைசார்ந்த மண்ணின் மக்களான அவர்களின் வாழ்க்கையோடு இரண்டறக் கலந்து வாழ்ந்து பெற்ற பட்டறிவுகள் அவரது உணர்வோடு கலந்து போயிருந்தன. அவர்களின் இன்ப - துன்பம், ஆற்றல் - பலவீனம், கனவு - யதார்த்த நடைமுறை, எதிர்பார்ப்புகள் - ஏமாற்றங்கள் எல்லாவற்றைப் பற்றியும் எழுதினார்; அத்தனையும் வாழ்க்கையிலிருந்து நேரடியாகப் பெற்ற அனுபவங்கள் - உண்மையானவை - ஆதாரபூர்வமானவை. இவையே காரந்தை மிகப் பெரும் படைப்பாளராகச் செய்தன. அதன் முதல் படிதான் இந்த 'சோமன துடி'.

உழைப்பதற்கு' மட்டுமே என்று ஒதுக்கப்பட்டு, ஒடுக்கப்பட்ட சாதியிலேயே மிகவும் கீழ்ச்சாதியில் பிறந்தவன் சோம. தலைமுறைகளாக கொத்தடிமைகளாக, உயர் சாதிப் பண்ணையாரிடம் கூலியடிமையாக மட்டுமே உழன்று உயிர் வாழவேண்டிய நிலையிலிருக்கும் அவனுக்குள்ளும் ஒரு ஆசை. காடான, ஒரு கையளவு - ஒரு துண்டு நிலத்தையாவது தனக்கென்று பெற்று உழுது பயிர் செய்து தான் ஒரு விவசாயியாக வேண்டுமென்று. சமூக அமைப்பு விதித்திருக்கும் பல்வேறு தடைகளையும் மீறி, அவனது நிழல்கூட தம்மீது பட்டுவிடக் கூடாது என்று அவனைத் தள்ளி வைத்திருக்கும் சமூகக் கட்டாயத்தையும் மீறி, தன் அடங்காத ஆசையை நிறைவேற்றிக் கொள்ளக் கனவு காண்கிறான். அந்தக் கனவு, கனவு நிலையிலேயே கருகிப் போகும் முன் அவன் குடும்பமே குலைந்து போகின்றது. இறுதியில் எஞ்சியிருப்பது...? அவனும் அவனது உடுக்கையும்தான்!

இதில் வரும் கதை மாந்தர்கள், அவர்களின் பழக்க வழக்கங்கள், மனப்போக்குகள், வாழ்க்கை நடைமுறைகள், பேச்சு வழக்கு, குணப் பண்புகள், அல்லது கதையோட்டத்தை ஆழமாக்கும் நடப்புகள் எல்லாமே மிகைப்படுத்தப் படாதவை, வலிந்து மெருகேற்றப்படாதவை, ஒளிவட்டங் களை இணைத்துக் கொள்ளாதவை; மொத்தத்தில் மிக இயல்பானவை.

இந்த இயல்பான எளிமையான எழுத்தாற்றல்தான் இவரை மற்ற படைப்பாளர்களிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றது. இதுதான் அவருக்கு சாகித்ய அகாதமி விருதையும் (1959ல் 'யக்சகான - பயலாடா') ஞான பீடம் விருதையும் (1978ல் 'மூகஜ்ஜிய கனசுகளு') இன்னும் பல பட்டங்களையும் பதவிகளையும் பெற்றுத் தந்தது. கன்னட இலக்கிய உலகின் மைல் கற்களாகக் கருதப்படும் இவரது படைப்புகளில் குறிப்பிடத்தக்க மேலும் இரண்டு நாவல்கள் ''அளித மேலெ' (அழிந்த பிறகு), 'மறளி மண்ணிகே' (மீண்டும் மண்ணுக்கே - 1942). தன் படைப்புத் திறனுக்காகவே சங்கீத நாடக அகாடமி, சாகித்ய அகாடமி ஆகியவற்றின் ஃபெலோஷிப் பெற்றவர். கருநாடகத்தின் கூத்து வடிவமான 'யக்சகான' கலையின் மேம்பாட்டுக்காக உழைத்த இவரை அழைத்து ஸ்வீடன் நாட்டிய அகாடமி மரியாதை செலுத்தியது. மூன்று இந்தியப் பல்கலைக் கழகங்கள் இவருக்கு D.Litt. பட்டங்களை வழங்கிக் கவுரவித்தன. 1975ஆம் ஆண்டு, அரசு நெருக்கடி நிலையைக் கொண்டு வந்தபோது அதை எதிர்த்து தனக்கு அளிக்கப்பட்டிருந்த 'பத்மபூஷன்' விருதையும் அரசிடமே திருப்பிக் கொடுத்து விட்ட நேர்மைமிக்க ஒரு சில படைப்பாளிகளில் இவரும் ஒருவர்.

இந்த 'ஆயிரங்கால் பூதம்' அக்கறை காட்டாத சங்கதிகளில்லை; ஈடுபடாத துறைகளில்லை. 40 நாவல்கள்,

40 நாடகங்கள் அவற்றிற்குக் குறையாமல், குழந்தை இலக்கியம், பாமரனுக்கான அறிவியல், இந்தியக் கலைகள், கட்டிடக் கலை, நாட்டுப்புறக் கலைகள், பயண நூல்கள், தன் வரலாறு, சிற்பக்கலை, ஓவியம், நாட்டியம் முதலானவை பற்றிய பெருந்தொகை நூல்களை தன் வாழ்நாளின் இறுதிமூச்சு விடும்வரை படைத்துக் கொண்டேயிருந்தார்.

மனிதனையும், இயற்கையையும் ஒரு சேர நேசித்த இம் மாமனிதர், 1997ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 9ஆம் நாள் இயற்கையெய்தினார்.

கருநாடகத்தில் 60-70களில் 'தலித்' மற்றும் 'தலித் இலக்கிய'ச் சிந்தனைகள் தோன்றி மலர்வதற்கு 30, 35 ஆண்டுகளுக்கு முன்பே ஒடுக்கப்பட்டோர் நிலை குறித்து வெகுவாகப் பேசப்பட்டு வெளிவந்த முதல் 'தலித்' இலக்கியப் படைப்பு என்று 'சோமன துடி'யைக் குறிப்பிட்டால் அது மிகையாகாது. இவ்வரிய படைப்பை தமிழில் வெளியிடுவதில் பெரிதும் ஆர்வம் காட்டி நல்ல முறையில் வெளியிடும் ராஜராஜன் பதிப்பகப் பொறுப்பாளர்களுக்கும், இதற்காக உழைத்த எல்லா நண்பர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

**தி.சு. சதாசிவம்**
மொழி பெயர்ப்பாளர்

# சோமனின் உடுக்கை

## 1

இருட்டென்றால் இருட்டு, அப்படியொரு இருட்டு. கண்ணோடு கண் வைத்துப் பார்த்தாலும் எதையும் காண முடியாத இருட்டு. நிலவு வருவதற்கு இன்னும் இரண்டு நாழிகை நேரமாவது ஆகும். காடுமேடுகளின் பயங்கர இருளைக் கிழித்துப் போட்டு, ஒருமுறையாவது உயிர்களின் அடையாளத்தைக் காட்டுவதற்கு மின்மினிப் பூச்சிகளும் கூட மின்னிப் பறக்கவில்லை. ஓசையா? ஓசையின் முணுமுணுப்புக்கூட இல்லை. அடர்த்தியான காடு; அதையொட்டிய மலையடிவாரம். இருந்தும் ஒரு சிறு இலை அசைந்த ஓசையையும்கூடக் கேட்க முடியவில்லை. தரையின்மீது காய்ந்த சருகுகள் குவியல் குவியலாக விழுந்திருந்தும், ஒரு புழு பூச்சியின் நடமாட்டம் கூட இல்லாததால் மெல்லிய ஒலியுங்கூடக் கேட்கவில்லை. காற்று வீசுவது முதலிலேயே நின்று போயிருந்தது. மூங்கில் புதர்களிலிருந்து காய்ந்த இலைகளும் கூட உதிரவில்லை. மூங்கில் தண்டுகள் ஒன்றோடொன்று ஒட்டி உராய்ந்து 'கிர்ர்ர்ம்' என்று உயிருள்ள விலங்குகளின் கத்தல்களைத் தூண்டிவிடவும் இல்லை.

இந்த ஊரின் பெயர் போகனஹள்ளி! நேரமோ இரவு பத்து மணி; மீறிப் போனால் பதினொன்றாகியிருக்கலாம். ஆனால், ஒரு வீட்டிலிருந்தும் கூட விளக்கு வெளிச்சமே தெரியவில்லை. போகனஹள்ளி, அடர்ந்த காட்டுப் பகுதியிலுள்ள கிராமம். கிராமம் முழுக்க 50 - 60 வீடுகள்

இருக்கலாம். அத்தனை வீடுகளிலும் சேர்ந்து சுமார் நூறு இருநூறு பேர்தான் இருப்பார்கள். இருந்தும் இந்த நேரத்தில் எங்கேயும் மனித வாடையே இருப்பதாகத் தெரியவில்லை. காட்டு மிருகங்களின் நடமாட்டம்? அவைகளுக்கென்னவாயிற்று? அவைகளும் ஏகாதசி விரதம் இருக்கின்றனவா என்ன? யாருக்குத் தெரியும்? இரவுதோறும் ஏதோ ஒரு மூலையிலிருந்து கேட்டுக் கொண்டிருக்கும் புலிகளின் உறுமலும் கூட இன்று முழுவதுமாக அடங்கிப் போயிருந்தது. நடு இரவின் அமைதியைக் கலைத்துக் கூவும் ஆந்தையின் அலறலையும் கூடக் கேட்க முடியவில்லை. அதுமட்டுமல்ல, காது கிழிந்து போகும்படியாக கொஞ்சம் கூட கருணை யில்லாமல், பகலென்றும் இரவென்றும் பாராமல் இரைச்சலிட்டுக் கொண்டிருக்கும் சில்வண்டுகளும் கூடச் சோர்ந்து போய் மௌனம் பூண்டிருக்க வேண்டும்.

இவ்வாறெல்லாம் சோர்வு தரும் அடையாளங் களையும் சுடுகாட்டு அமைதியையும் பார்த்த பிறகு, இம்மாதிரியான போகனஹள்ளி இருந்தால்தான் என்ன, போனால்தான் என்ன என்று நீங்கள் நினைக்கலாம். அதனால்தானோ என்னவோ அவ்வப்போது விட்டுவிட்டு, இந்த கமுக்கமான அமைதியைக் கிழித்துச் சுக்கு நூறாக்கும் ஒரு விந்தையான ஒலி கேட்டுக் கொண்டேயிருந்தது! எங்கிருந்து வருகிறது என்று அந்த ஒலியின் அடையாளத்தை வைத்துச் சொல்லும்படியாக இல்லை. போகனஹள்ளியோ குக்கிராமம். ஒரு நூறுமார் தொலைவுக்குப் பார்வையை ஓட்டிப் பார்க்கும்படியான தட்டையான சம நிலமே இல்லை. அத்தகைய குப்பைக்காட்டில் இவ்வொலி, குன்றிலிருந்து குன்றுக்குத் தாவி ஒன்று இரண்டாகி, இரண்டு நான்காகி எதிரொலித்துத் திரும்பி வந்து காதைத் துளைத்தது. முதல் ஒலி எது? எதிரொலி எதுவென்று கூடத் தெரிந்து கொள்ள முடியாத அளவுக்கு ஒன்றோடொன்று கலந்து போயிருந்தது. பத்துப் பனிரெண்டு நிமிடங்களுக்கு இவ்விசித்திரமான ஒலி, 'டமடம்ம... டமடக்க...' என்று

முழங்கிப் பாய்ந்து அதிர்ந்தால், அடுத்து அதேயளவு நேரத்திற்கு ஓசையெழாமல் அடங்கிப் போய்க் கிடக்கும். இவ்வூரைப் பற்றித் தெரியாத வழிப்போக்கன் எவனாவது இந்த இருட்டில் அந்த வழியாக வர நேர்ந்தால் அவன் உண்மையிலேயே இச்சத்தத்தைக் கேட்டு திடுக்கிட்டுத் திக்குத் திசை தெரியாமல் ஓடியே போய் விடுவான். ஒருமுறை இந்த 'ஸ்வர'ங்களின் வேகம் மிகுதியாகித் தாவி வந்து துள்ளிப் பாய்ந்து உயிரை விட்டுக் கொண்டிருக்கும் விலங்கொன்றின் இதயத் துடிப்புக்களைப் போலக் கேட்கும். மறுமுறை அது மிகவும் மந்தகதியில் வரும்போது, ஈயம் பூசுபவனின் தாளம் தவறாத சுத்தியடியைப் போலக் கேட்கும். எதிரொலியோடு அது முட்டி மோதி முறிந்து விழும்போது, பிரளயத்திற்கு இன்னும் ஒரு விநாடி கூட இல்லையென்பதைப் போலத் தோன்றும். அது வெறும் ஓசை போன்றில்லை; எந்திரத்தனமாக, வெறும் உயிருள்ள பிரபஞ்சத்தின் கட்டுத் திட்டங்களுக்கு ஆட்பட்டு நைந்து போகும் ஓசையாக இல்லை; அது உயிரற்ற ஒரு கருவியிலிருந்து வருகிறது என்பது என்னவோ, உண்மைதான். அதன் பின்னால் அந்த ஒலியை முழங்க வைக்கும் அற்புத சக்தியொன்று இருப்பதாகத் தெரிகின்றது. வெறும் ஊகத்தினால் அந்த சக்தி இப்படிப்பட்டதுதான் என்று சொல்லிவிட முடியாது.

இன்றைக்குப் போகனஹள்ளியின் பக்கத்து கிராமத்தில் ஒரு திருவிழா! ஆண்டுக்கு ஒருமுறை வரும் திருவிழா என்றால் கேட்க வேண்டுமா! அந்தக் காட்டுப் பகுதியில் வேறு எந்த விழாதான் உண்டு? ஊரெல்லாம் கூடும் சந்தையும்கூட அங்கேயில்லை. சுற்றுமுற்றும் ஏழெட்டு கிராமங்களுக்கு என்று இருப்பது அந்த ஒரேயொரு திருவிழாதான். ஊருக்கு ஊரே திரண்டு, சுற்றுமுற்றுமுள்ள கிராமத்தவர்களும் அதற்குத்தான் போயிருப்பார்கள். போகனஹள்ளி கிராமத்தாருக்கு மட்டும் அந்த உற்சாகம் இருக்காதா என்ன? அவர்கள் எப்படி விட்டு விடுவார்கள்?

சூரியன் முளைத்து இரண்டு நாழிகைக்குள் தேர் புறப்பாடு இருக்கிறதென்று கேட்டு பொழுது புலர்வதற்கு முன்பே புறப்பட்டுப் போனவர்களும் உண்டு. காலை உணவைப் பற்றிய கவலையே யாருக்கும் இல்லை; பகல் சாப்பாட்டைக் கோவிலிலேயே முடித்துக் கொள்ளலாம். அப்புறம், இரவுச் சாப்பாட்டைப் பற்றிய கவலையா? திருவிழா நாளில் யாராவது அதைப் பற்றிக் கவலைப்படுவார்களா? கோவிலின் சமபந்திச் சாப்பாட்டிற்கும் வாய்ப்பில்லாதவர்கள் 'இரவுக்கு சாப்பாடு இல்லை' என்பதை நினைவு வைத்துக் கொண்டேதான் பகல் உணவுக்கு உட்காருவார்கள்... மற்றவர்கள், கோவிலுக்குப் பின்புறமுள்ள மடுவின் மேட்டுப் பகுதியில் சமையலுக்கான ஏற்பாடுகளைத் தவறாமல் செய்து கொள்வார்கள். சொல்லப் போனால் திருவிழா நாளில், சாப்பிடும் நாக்கிற்குச் சுவையறியும் சக்தியே கிடையாது. நினைப்பெல்லாம் சாமி ஊர்வலம், அலங்கார ஜோடிப்பு, வாத்தியங்கள், உறவினர் - சுற்றத்தார், சந்தை - கடைகள், தேரோட்டம், உடுத்தியிருக்கும் உடை, அணிந்திருக்கும் நகை நட்டுகள் - இப்படி எவ்வளவோ இருக்க, தினமும் சாப்பிடும் சாப்பாட்டைப் பற்றியா இருக்கும்? போகனஹள்ளி கிராமத்தவர்க்கும் அப்படித்தான்.

வழக்கப்படியே போகனஹள்ளிக்காரர்களும் ஒருவர் தவறாமல் திருவிழாவுக்குப் புறப்பட்டுப் போயிருந்தனர். நடந்துவர முடியாமல் வீட்டிலேயே தங்கிவிட்ட முதியவர்களின் நினைப்பையெல்லாம் மறந்துவிட்டுப் போயிருக்கின்றனர். மீண்டும் திரும்புவது, இரவு, திருவிழா முடிந்து சாமி கோயிலுக்கு வந்து மங்களார்த்தி முடிந்து நீராட்டு முடிந்து பிரசாதம், பானகங்கள் தொண்டைக்குள் இறங்கி, தூக்கக் கலக்கத்தில் தலைதங்காமல் தோளின் மேல் சாயும் நிலை வரும்போதுதான்.

இப்போது அந்த நேரமும் வந்தது. நடுஇரவும் கழிந்து பூசாரிக்கும் உற்சவமூர்த்தியைச் சுமந்தவர்களுக்கம் உறக்க மயக்கம் வந்து ''சீக்கிரமாய் இந்தக் கலாட்டா முடிஞ்சா போதும்'' என்றாகிவிட்டது. ''உம்... நாதஸ்வரம் ஊதட்டும், மங்களார்த்தி... மங்களாரத்தி... எங்கே... யாரு?... பிரசாதத்தக் குடுக்கக் கூடாதா?... பானகம்.... ஊம்... ஊம்...'' என்று தடபுடல் எழுப்பி, பகலெல்லாம் பூஜித்துக் கொண்டு களைத்தப் போன கடவுளை உறங்கும் தொட்டிலுக்குக் கொண்டு சென்று சேர்த்தனர். களைத்த மக்களும் கொட்டாவி விட்டுக் கொண்டு கோவிலை விட்டு வெளியே வந்தனர். ஊர், வீடு, நிலம் - நீச்சு, பசு, கன்று, விட்டு வந்த வயதானவர்கள் என்னும் எண்ணங்கள் இப்போது வரத் துவங்கின. சிலரோ, அதுவும் இல்லாதவர்களாய்த் தரையென்றால் தரை, திண்ணையென்றால் திண்ணை, கல்லென்றால் கல், மண்ணென்றால் மண், அங்கே, இங்கே என்று கிடைத்த இடங்களில் படுத்து விட்டனர். நாளையைப் பற்றிய எண்ணமுள்ள விவசாயிகளும் வீட்டுப் பெண்களும், 'அய்யோ, அப்போதே பொறப்பட்டிருக்கலாமே' என்று யாரையோ திட்டிக் கொண்டே புறப்பட்டனர். கோவிலைச் சுற்றிலும் விழுந்து கிடந்த குப்பை - கூளங்களையெல்லாம் சேர்த்து, தீப்பந்தமாக்கிக் கொண்டனர். பலர், வரும்போதே முன்னெச்சரிக்கையாகச் செய்து எடுத்துக் கொண்டு வந்து பாதுகாத்து வைத்திருந்த பந்தங்களை வெளியே எடுத்து கொளுத்திப் பிடித்துக் கொண்டனர். கோயிலின் வாழைமட்டை விளக்குகள் எண்ணெய்த் திரியில்லாமல் ஒளிமங்கி அணைந்து கொண்டிருந்தபோது கிராமவாசிகளின் பத்துப் பன்னிரெண்டு தீப்பந்தங்கள்தான் ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன. சரி... தீப்பந்த வெளிச்சத்தில் ஒவ்வொருவரும் மற்றவர்களை அடையாளம் கண்டு, தத்தம் கிராமத்தவர்களைத் தேடிப்பிடித்து சேர்த்துக் கொண்டு புறப்பட்டனர். அப்படிப் புறப்பட்டவர்களோடு போகனஹள்ளி கிராமத்தவர்களும் சேர்ந்து கொண்டனர்.

வழிநீளத்திற்கும் அதுவும் இதுவுமாகப் பல கதைகளைப் பேசிக் கொண்டே நடந்து சென்றனர். ''இன்னைக்கி அவன் மேளம் ரொம்ப நல்லாயிருந்தது; உற்சவ மூர்த்திய தூக்கினு ஆடினது ரொம்ப சிறப்பா இருந்திச்சு!'' ''அந்தக் கெழப் பூசாரி மந்திரத்துல முக்கால் பாகத்த முழுங்கிட்டான் போலத் தெரியுது'' என்று சிலர் தாங்கள் கண்டதையும் கேட்டதையும் பேசிக் கொண்டு வந்தனர். அவ்வளவு நெருங்கிய அறிமுகம் இல்லாதவர்கள் 'இன்னைக்கு சந்தை முழுக்கச் சுத்தியும் நல்ல பொரியே கெடைக்கலியே?' 'அய்யோ, இன்னைக்கு கொசவஞ் செட்டிக்கு என்னா வெல தெரியுமா?' 'ஆனா சாமந்திப்பூ மட்டும் ரொம்பக் கொறஞ்ச வெலதான்.' 'நான் இன்னைக்கி ரெண்டு கண்ணாடி வளையல் போட்டுகிட்டேன்' என்றும் இதுபோன்ற நூற்றுக்கணக்கான செய்திகளைப் பேசிக் கொண்டும் தீப்பந்த ஒளியில் ஊர்நோக்கிச் சென்று கொண்டிருந்தனர். உறக்க மயக்கத்தில் வாய்தான் எவ்வளவு என்று பேசமுடியும்? அறிவுதான் வேலை செய்யுமா? சொல்லுகிறவர்களுக்கும் சோர்வு, கேட்கிறவர்களுக்கும் சோர்வு - எல்லோரும் மூச்சைப் பிடித்து நடந்து சென்றனர்.

போகனஹள்ளி ரிசர்வ் காடு வந்தது. 'பாரஸ்ட்டு காடு' என்பது கிராமத்தவர்கள் அதற்கு வைத்த பெயர். ஒருவேளை, 'காடுவ (தொல்லைதரும்) ஃபாரஸ்ட்' என்பதால் அப்படி அழைக்கிறார்களோ என்னவோ! காட்டின் அமைதி, திருவிழாவிலிருந்து திரும்புகிறவர் களின் காலடி ஓசையினால் கலைந்தது. இருளின் கனம் அலை பாயும் தீப்பந்தக் கொழுந்துகளினால் சிறிதளவாவது கரைந்தது. அந்த ஒளியில் திருவிழாவிலிருந்து போகனஹள்ளிக்குத் திரும்பும் முதலாவது குழுவைச் சற்று அலசிப் பார்க்கலாமா?

முன்னால் தீப்பந்தத்தைப் பிடித்திருந்தவன், கிராமத்தைச் சேர்ந்த ஒரு ஏழைக் குடியானவன். அவன் பின்னால் வருவது சங்கப்பய்யா பண்ணையார் அவர்கள்.

அவரது முகம் மட்டும் வெளிச்சத்தில் தெளிவாகத் தெரிந்தது. அவருக்குப் பின்னாலிருந்த ஏழெட்டு ஆண் - பெண்களின் முகங்களைத் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. சங்கப்பய்யா, ஊரின் முக்கியப் பெரும் நிலக்கிழார்களில் ஒருவர். அவர் தீப்பந்த ஒளியில் கால்களை முன்னால் தள்ளியவாறு நடந்துக் கொண்டிருந்தார். அவருக்கு மிகவும் களைப்பாக இருந்தது. வீட்டிற்கு எப்போது போய்ச் சேருவோம் என்ற சிந்தனை அவருக்கு. அதிலேயே அவர் முழுகிப் போனவரைப் போல காணப்பட்டார். அவரது சிந்தனை திடீரென்று தடைப்பட்டது. அப்படித் தடைபோட்டுக் கெடுத்தது, முன்பு சொன்ன அதே ஒலிதான் - 'டமடம்மா!... டமடக்கா!...' என்ற முழவின் ஒலி! தனது எதிரொலியின் தொடர்ச்சியோடு அது ஒரு நொடி முறிந்து வீழும் இடியைப் போன்று சடாரென்று அவரது காதில் வந்து பாய்ந்தது; அவர் திடுக்கிட்டு நின்றுவிட்டார். அவர் நிற்கவே, அவர் பின்னாலிருந்தவர்களும் நின்றனர். யாருக்கும் என்ன செய்வதென்று தெரியவில்லை. சங்கப்பய்யாவின் மனம் தடுமாறிய அதே நொடியில் அவரது கால்களும் தடுமாறின. ஆனால், ஒரே நிமிடத்தில் அந்தத் தடுமாற்றம் மறைந்து அவர் சிரிக்கத் தொடங்கினார். நாள்தோறும் கேட்டுக் கொண்டிருக்கும் அதே ஒலிதான்! புதியதொன்றும் இல்லையே! மனதின் சோர்வு, உடம்பின் களைப்பு, அந்தக் காட்டின் அமைதி கூடிய இருள் - எல்லாம் குழம்பிக் கலந்திருந்த நேரத்தில் அந்த ஒலி திடீரென்று கேட்டதால் சற்றுத் தடுமாறி நடுங்கிப் போக வேண்டியதாயிற்ற. அது என்ன ஒலி என்று தெரிந்து கொண்டதும், ''ஆங்... மொதல்ல இது என்னமோன்னு நெனச்சுட்டேன். இது நம்ம சோமனோட உடுக்க சத்தம்'' என்று சிரித்தார். மற்றவர்கள் நடந்து கொண்டேயிருந்தனர். அவரது சிரிப்பை அவர்கள் கவனித்ததாகவே தெரியவில்லை. அந்த அளவுக்கு அவர்கள் சோர்ந்து போயிருந்தனர். சங்கப்பய்யா நடந்து கொண்டே தமது சோர்வைத் தாமே போக்கிக் கொள்ள முயற்சிப்பவரைப் போல, ''இந்த புண்ணியவான் எந்த

வேளையில பொறந்தானோ தெரியல. அவனுக்குச் சாவும் ஒண்ணுதான், வாழ்வும் ஒண்ணுதான்; பகலும் ஒண்ணுதான், ராத்திரியும் ஒண்ணுதான். குடிக்க வேண்டியது; உடுக்கைய அடிக்க வேண்டியது'' என்றார். இப்படிப் பேசிக் கொண்டே மெதுவாக வீடு வந்து சேர்ந்தார். வந்தவுடன் படுத்து உறங்கியும் போனார். ஆனால், சோமனின் உடுக்கை ஒலி மட்டும் இன்னமும் அலையலையாக கேட்டுக் கொண்டேயிருந்தது.

சோமனின் உடுக்கையிலொன்றும் தனிச்சிறப்பு இல்லை. சோமனின் வாழ்க்கையில சிறப்பென்று ஏதாவது இருந்தால்தானே அவனது உடுக்கையிலுமிருக்கும்? சோம ஒரு புலையன்; சாதியில் மிகவும் தாழ்த்தப்பட்டவன். போகனஹள்ளிக் காட்டின் பொந்து ஒன்றில் அவனது என்று, ஒரு சிறிய 'குப்பம்'; குப்பம் என்றால் நூற்றுக்கணக்கான வீடுகள் கொண்டது இல்லை. ஒரேயொரு வீடு; வீடும் கூட இல்லை; மாட்டுக் கொட்டகை போன்ற ஒரு குடிசை. அதிலிருந்தவர்கள் சோமனும் அவனது ஐந்து மக்களும்; அப்புறம் நெருங்கிய உறவு என்றால் - ஒரு கருப்பு நாய் - சோணி; இரண்டு எருதுக் கன்றுகள். இது அவனது உறவு! சோமனுக்கு ஐம்பத்தைந்து வயது நடந்து கொண்டிருக்கலாம். அவனது வயது என்னவென்று அவ்வளவு சரியாகச் சொல்லிவிட முடியாது. சொல்வதென்றாலும் நாம்தான் சொல்ல வேண்டும்; பார்த்தவர்கள்தாம் சொல்ல வேண்டும். அவனைக் கேட்டால், ''என்னமோப்பா, அதெல்லாம் யாருக்குத் தெரியும்?'' என்பான். ''என்னா, ஒரு நூறு வயசு இருக்குமா?'' என்றாலும் கூட ''என்னமோப்பா இருக்கும்'' என்பான். அல்லது, ''இருவது இருக்குமா?'' என்று கேட்டால் அதற்கும் ''என்னமோ இருக்கும்'' என்றுதான் சொல்வான். எப்போதோ எங்கோ ஒரு முறை அவன், ''நம்ம சங்கப்பய்யா எசமானுக்கும் எம்மக(ன்) சனியனுக்கும் பத்து நாள் ஏறக்கொறய'' என்று சொன்னதாக நினைவு. இன்னொரு முறை, ''பெரிய எசமானுக்கும் எனக்கும் ஒரே

வயசுதானாம்'' என்று சொன்னதும் உண்டு. பெரிய எசமான் என்றால் சங்கப்பய்யாவின் தகப்பனார். இதையெல்லாம் வைத்துப் பார்க்கும் போது அவனுக்கு ஐம்பத்தைந்துக்கும் மீறி வயசாயிருக்கும் என்று ஒரு ஊகம்தான். கட்டுமுட்டான உடம்பு; இருந்தும் முதுமையின் சாயல் வந்து ஒட்டிக் கொண்டிருந்தது. மீசை முழுவதும் நரைக்காவிட்டாலும் பாதி வெளுத்துப் போயிருந்தது. சோமனையே கேட்டால், ''நானு இன்னும் நூறு வருசம் பொழச்சிருக்க மாட்டனா?'' என்பான். அவனுக்கு 'நூறு' என்றால் எவ்வளவு என்று தெரிந்திருந்தால்தானே! அவன் மனைவி - மனைவி யென்றால் மரியாதைக்குரிய சொல்லாயிற்றே - அவனது புலைச்சி இறந்து போய் ஐந்து ஆண்டுகள் ஆயிற்று. 'குளிக'னின் (ரத்தக் காட்டேறி போன்ற ஒரு பேய்) தொல்லையினால் ரத்தம் கல்கி செத்துப் போனாளாம்! இப்போது மீந்திருக்கும் உறவு என்றால் அது அவனது ஐந்து மக்கள்தான். பெரியவனுக்கு சங்கப்பய்யாவின் வயது - அதாவது ஏறக்குறைய இருபத்தைந்து வயது. பெயரைத்தான் முன்பே சொல்லியிருக்கிறோமே - ''சனிய'' என்று. சனியனின் தம்பி ''குருவ''. குருவனுக்குத் தம்பியில்லை; தங்கைதான் - பெள்ளி; அவள் சோமனின் உயிர்! அவளுக்கு இளையவர்களென்றால் எட்டு வயது ''காள'' ஒருவன்; ஓரிரண்டு ஆண்டு இடைவெளியில் ''நீல'' இன்னொருவன் - இவ்வளவு பேர்களும் சேர்ந்திருக்கும் குடும்பம் அது.

சோமனின் குடும்பத்தவர்களுக்கிடையில் பூவிதழ்க் கிடையிலிருக்கும் நெருக்கமான பாசமும் உறவும் இருந்தது. இறந்துபோன அந்த புலைச்சி இருந்திருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும். அதை விடுங்கள்; இறந்தவர்களெல்லாம் உயிரோடு இருந்திருந்தால் உலகமே எப்படி இருந்திருக்குமோ! இந்த சோம சங்கப்பய்யாவின் மூலப் புலையன்; பண்ணையடிமை. மூலப்புலைய னென்றால் பண்ணையாரின் ஒப்புதலில்லாமல் இன்னொரு பண்ணைய்யாரின் ஆதரவை லாபத்திற்காகட்டும்

நஷ்டத்திற்காகட்டும் இவனகாட்டும் இவனது தலைமுறையினராகட்டும் தேடிப் போக முடியாது. பண்ணையார்தானாகட்டும் - கடன் இருக்கட்டும் இல்லாமலிருக்கட்டும், அவர் உயிரோடிருக்கும் வரையில் இவனையும் இவனது மக்களையும் ஆதரித்து வழி நடத்திக் கொண்டு போக வேண்டும்.

இந்தச் சோமனும் திருவிழாவுக்குத் தன் குடும்பத்தோடு போயிருந்தான். காலையிலிருந்து மாலைவரை அவனும் அவனது பிள்ளைகளும் நிறையவே அலைந்து திரிந்து ஆடிப்பாடி சோர்ந்து போயிருந்தனர். பகலில் மட்டுமில்லாமல் இரவையும் அங்கேயேதான் கழிக்க வேண்டுமென்று எண்ணித்தான் வந்திருந்தனர். ஆனால், மாலையில் வானத்துச் செந்நிறம் மறைவதற்குள் தமது குடிசைக்குத் திரும்பி வந்து சேரும்படியாகி விட்டது. நிலைமை இதுதான் - சோமனின் குடிசையில் அன்றைக்கு அடுப்பு எரியவில்லை; சாப்பிட எதுவுமில்லை. நான்கு நாட்களுக்கு முன்பு உறவினர்கள் வந்தார்களென்று ஆறு நாட்களுக்கான கூலியை பண்ணையாரிடமிருந்து கெஞ்சிக் கேட்டு வாங்கி வந்திருந்தான். அந்த உறவினர்களோ வந்தோம் போனோம் என்றில்லாமல், இருந்ததை யெல்லாம் தின்று தீர்த்துவிட்டுப் போனார்கள். இன்றோ பண்டிகை நாள்; சாப்பிடுவதற்கு எதுவும் மீந்திருக்க வில்லை. முதல் நாள் அவசரத்தில் பண்ணையாரிடம் 'பண்டிகைக்கு ஏதாவது' என்று கேட்க மறந்து போயிற்று. திருவிழாவன்று போனால், அவன் போவதற்கு முன்பே அவர் திருவிழாவுக்குப் புறப்பட்டுப் போய்விட்டிருந்தார். மீண்டும் சந்தித்தது திருவிழாவில்தான். அங்கே பண்ணையாரைப் பார்க்காமலில்லை; பார்க்கத்தான் செய்தான். பார்த்து உடல் முழுவதும் வளைய விழுந்து வணங்கினான். சிரிப்பின் கீற்றை கண், உதடு இரண்டிலும் வழியவிட்டான். ஆனால், அதன் அர்த்தத்தைத்தான் அவரால் புரிந்துகொள்ள முடியவில்லை. வாய்விட்டுக் கேட்கும் துணிவும் சோமனுக்கு வரவில்லை. சரி, மாலை

வரையில் பாடி - ஆடியாயிற்று. பிள்ளைகளுக்கு திண்பதற்கு எதுவும் இல்லை; அவனுக்கு முதலிலேயே இல்லை. அவனுக்குத் தெரிந்தவர்கள், கிடைத்த சில்லறைக் காசுகளை கையில் பிடித்தபடி கள்ளுக் கடைக்குள் நுழைந்தனர். ஒன்றிரண்டு பேர் சோமனை கூடவே அழைக்கவும் செய்தனர். ஆனால், பாவம் சோம, 'எங்கிட்ட இல்லேன்னிட்டு அவங்ககிட்ட பிச்சை வாங்கலாமா?' என்று யோசித்துவிட்டு ''என்னுது ஆயிடுச்சி'' என்று மழுப்பிவிட்டான். அவர்களும் அதிகமாக வற்புறுத்தி உபசரிக்கவில்லை. இவன், குடிசைக்கு அப்படியே திரும்பினான். பெரிய பிள்ளைகள் அந்த ரகசியத்தைப் புரிந்து கொண்டு மௌனமாக இருந்து விட்டனர்; முணுமுணுப்பும் கூட காட்டாமல் படுத்து விட்டனர். ஆனால், சின்னவர்கள் நீலனும் காளனும் மட்டும் அதிகப் பசியினாலும் திருவிழாவிலிருந்து பாதியிலேயே திரும்ப வேண்டி வந்ததினாலும் அழத் தொடங்கினர். சரி, அவர்களின் முதுகில் இரண்டு சாத்து சாத்திவிட்டு வீட்டிற்கு அழைத்து வந்தான். எல்லோரும் சோர்வினால் சுருண்டு படுத்துவிட்டனர். பெள்ளி மட்டும் தகப்பனின் முகத்தைப் பார்த்தபடியே உட்கார்ந்து விட்டாள். இதெல்லாம் அவளுக்கு ஒன்றும் பெரியதாகத் தெரியவில்லை. சோமனுக்கும் பெரியதாகப் படவில்லை; தினம் படுகிற பாடுதானே! சோம தனது சோர்வையும் வேதனையையும் போக்கிக் கொள்ள உடுக்கையை எடுத்துக் கொண்டான்; பெள்ளி, ''லே... லேலே...'' என்று பாடத் தொடங்கினாள். பாட்டின் தாளத்திற்கு ஏற்ப காலடி போட்டு, மேளம் வைக்க வேண்டிய பிள்ளைகள் எல்லாம் படுத்துவிட்டிருந்தனர். அதனால் பெள்ளிக்கும் உற்சாகம் குறைந்து போய், உட்கார்ந்த இடத்திலேயே உறங்கிவிழத் தொடங்கி விட்டாள். அதனால் என்ன? சோம, உடுக்கையை அடித்துக் கொண்டேயிருந்தான்! அவனுக்கும் உறக்கம் வந்து தலை தள்ளாடத் தொடங்கிற்று. அவனையும் மீறி உறக்கம் அவனைத் தள்ளும்போது அவனது உடுக்கை ஒலி அடங்கும். விழிப்பு வந்ததும் மீண்டும் பத்து மடங்கு

ஆவேசத்துடன் உடுக்கையை வாசிப்பான். ''டமடம்மா... டமடக்கா...'' சிவன் கையில் இருந்த உடுக்கையைப் போலவேதான் சோமனின் கையிலிருந்த இந்த உடுக்கையும்.

## 2

**சோ**மனின் குடும்பத்தில் நீலனும் காளனும் எப்போதும் படுத்தப் படுக்கையாகவே கிடப்பார்கள் என்று சொன்னாலும் பொருந்தும். சில நாட்களுக்கு உடம்புக்கு முடியாமல் ஏதாவது நோயால் படுத்துக் கிடப்பார்கள். மற்ற நாட்களில் சோர்ந்து போய் படுத்துக் கிடப்பார்கள். தாய் இறந்து போன நாளிலிருந்தே அந்த சிறுபிள்ளைகளுக்கு நோய் உடம்போடு கெட்டியாக ஒட்டிக் கொண்டு விட்டது. நான்கைந்து நாட்களுக்கு ஒருமுறை குளிர்காய்ச்சல் வரும். குளிர்காய்ச்சல் என்பது போகனஹள்ளிக்கு புதியதொன்றுமில்லை. ஆனால், அந்த இரண்டு பிள்ளைகளுக்கும் அதுவே போதும் போதுமென்றாகி விடும். காய்ச்சல் மட்டும் வராமலிருந்தால் அந்த இரண்டு பேராலும் சோமனின் குடும்பத்துக்கு கொஞ்சம் வருவாயும் வரும். ஊரிலுள்ள மாடு கன்றுகளையெல்லாம் மேய்க்கின்ற வேலையையாவது அவர்கள் செய்வார்களே! ஆனால், இப்போது சோமனின் பெரிய பிள்ளைகளில் யாராவது ஒருவன் மாடு மேய்க்கப் போக வேண்டியுள்ளது.

வீட்டிலுள்ளவர்களில் மகள் பெள்ளி முன்பெல்லாம் தினமும் வெளிவேலைக்குப் போவாள். ஆனால், இப்போது மாலைவரை வீட்டை விட்டு வெளியே போக அவளால் முடிவதில்லை. சமையல் வேலை, சிறுவர்களைப் பார்த்துக் கொள்வது எல்லாவற்றையும் அவள்தானே கவனித்துக் கொள்ள வேண்டும். அதனால், அவள் காலையில் விடியும் முன்பே எழுந்து காட்டுக்குப் போய், ஒருசுமை புல்லை அல்லது இலை தழைகளை பசுக்களுக்குத் தீவனமாக

அறுத்து சுமந்து வந்து, பண்ணையார் வீட்டுத் தொழுவத்தில் போட்டு விட்டாளென்றால், அன்றைய பெரிய வேலையொன்று முடிந்ததாக எண்ணிக் கொள்வாள். அவளுடைய அண்ணன்கள் இருவரும் அதே வேலைக்காக காட்டிற்குப் போவார்கள். காடு என்னவோ மிகவும் கிட்டத்திலேதான் உள்ளது. வேண்டுமளவுக்கு இலை தழைகளை அறுத்துக் கொண்டு வருவது எளிதான வேலைதான். ஆனால், அது அரசாங்கத்தின் காடாயிற்றே! அப்படியெல்லாம் சுலபத்தில் அவர்களின் கத்தி வரிசையையெல்லாம் அங்கு காட்டிவிட முடியாது. ஆகையினால் தொலைவிலிருக்கும் காடுகளில்லாத குன்றுகளுக்குப் போய் புதராக மண்டிக் கிடக்கும் தீவனத்துக்கான இலை - தழைகளைத் தேடி அறுத்தெடுத்து, இரண்டிரண்டு சுமைகளாகக் கட்டிக் கொண்டு வந்து போடும் போது நடுப்பகல் தாண்டி இரண்டு மூன்று மணியாகியிருக்கும். இன்னும் இருப்பவனென்றால் சோம மட்டும்தான். அவனது வேலை இதுதான் என்று திட்டவட்டமாக எதுவுமில்லை. பண்ணை எசமான், தம் வீட்டு முற்றத்தில் நின்றுகொண்டு, 'ஓ சோம' என்றால் இவன் எல்லாவற்றிற்கும் தயாராக அவர் முன்பு நிற்க வேண்டும். உடனடியாக இவன் ''இதோ வந்தேன்'' என்று குரல் கொடுத்துவிட வேண்டும். இல்லையென்றால், ''அவன் வீடு நாசமாகப் போக... எந்த கள்ளுக்கடை முன்னால குடிச்சிட்டு விழுந்து கெடக்கிறானோ'' என்று அவர் தீர்மானமே செய்து விடுவார். சோமனுக்கு ஊரின் கள்ளுக்கடைகளில் பாதி குத்தகைபாத்தியமே உண்டு என்பதாக அவருக்கு ஒரு நம்பிக்கை. சோம என்னவோ பண்ணை வீட்டு முன்னால் எப்போதும் இருந்தே இருப்பான். அந்த வேலை இந்த வேலையென்று செய்தால், அன்று நான்கு ஆழாக்கு அரிசி கிடைக்கும். அது காலையிலிருந்து சாயுங்காலம் வரையிலும் வெட்டுவது, கொத்துவது என்று எந்த வேலையாக வேண்டுமானாலும் இருக்கும். ஆனால், அவனது கூலியில் மட்டும் மாற்றமே இருக்காது.

வீட்டிலுள்ளவர்கள் எல்லோரும் ஒன்றாகப் பாடுபட்டு, உழைத்தால் அரைபடி அரிசியும் ஒன்றேகால் படி நெல்லும் கிடைக்கும். அந்த நெல்லை வீட்டிலேயே குத்திப் புடைத்து எடுத்தால் அரைப்படி அரிசிக்கு மேல் கிடைக்காது. இந்த ஒரு படி அரிசியில் அந்த ஆறு பேரின் வயிற்றுப் பாடும் நிறைவேறியாக வேண்டும். சரியாக கிடைக்கும் நாட்களில் காலையில் அரைப்படி அரிசியை உலையிலிட்டு, பெள்ளி ஒருமாதிரியான கஞ்சியைக் காய்ச்சுவாள். அதைக் குடித்துவிட்டு வேலைக்குப் போனால் இரண்டாவது சாப்பாடு, சாயுங்காலம் பொழுது சாய்வதற்குள்ளாகவே முடிந்து விடும். பொழுந்து சாய்ந்த பின்னால் சோமனின் குடிசையில் விளக்கு எரிவதேயில்லை. விளக்கு எரிய அது என்ன அரண்மனையா? இல்லை அவர்கள் தான் பொன்னிலும் மணியிலும் புரள்கின்றவர்களா?

அந்த வருவாயிலேயே சோமனுக்கு கள்ளும் குடித்தாக வேண்டும். கள்ளுகுடி என்றைக்கு தப்புகிறதோ அன்றைக்கே தன் உயிர்ப்பறவை பறந்தே போய்விடும் என்பது அவனது அசைக்க முடியாத நம்பிக்கை. மழைக் காலத்தில் பாதையிலிருக்கும் குண்டுகுழிகளிலும் பள்ளங்களிலும் நீர் நிறைந்திருக்கும் போது, அவனால் கள்ளுக் கடையின் முகத்தைக்கூட சில நாட்களுக்குப் பார்க்க முடியாமல் போவதுமுண்டு. இருந்தாலும் கள்ளு கிடைக்கா விட்டால் தான் செத்து மடிவதே சரி - என்பது அவனது தீர்மானம். பண்ணையார் வீட்டில் அவன் பெற்ற அந்த அரைப்படி அரிசி நேராக கள்ளுக்கடைக்குப் போகும். அதற்கு ஈடாக எவ்வளவு கள்ளு கிடைக்குமோ தெரியாது. ஆனாலும் கள்ளுக்கடையின் பிருமபூசாரி, இவனது திருப்திக்காக, தண்ணீரைக் கலந்தாவது ஒரு புட்டி நிறைய கள்ளை ஊற்றிக் கொடுப்பான். இன்னொரு பக்கம், பெள்ளி, நேரம் கிடைக்கும் போதும் சந்தர்ப்பம் வாய்க்கும் போதும் ஒன்றிரண்டு கூடைகளை முடைந்து வைத்திருந்தால், அவைகளை எடுத்துப் போய் பிருமனிடம்

கொடுத்து, கிடைத்தவரை கள்ளை இன்னும் கொஞ்சம் குடித்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி வருவது சோமனின் வாடிக்கை. அவன் தினமும் கள்ளு குடிப்பதென்னமோ உண்மைதான். ஆனால், போதை தலைக்கேறும் அளவுக்குக் குடிக்கின்றானா என்பதைச் சொல்ல முடியாது. சோமனின் பிள்ளைகளுக்கும் குடிக்கும் பழக்கம் உண்டு என்று ஊரார் பேசிக் கொள்வார்கள். அதில் யாருக்கும் ஆச்சரியம் இல்லை. நீல - காளனைப் போன்ற சிறு பிள்ளைகளையும் கூட கள்ளுக்கடைக்கு கூட்டிக் கொண்டு போவது அவன் சாதியினருக்கு அதிசயமான செய்தியில்லை. ஆனால், சோம அதை ஒப்புக் கொள்ள மாட்டான். ''வேல செஞ்சி செஞ்சி களைச்சிப் போன ஒடம்புக்கு கள்ளுன்னு ஒரே ஒரு சொட்டாவது ஊத்தலேன்னா எல்லாமே வீணுதான்'' என்பது அவனது நினைப்பு. அவன் பிள்ளைகளை கள்ளுக் கடைக்குக் கூட்டிப் போகாமலிருப்பது ஒரே காரணத்தினால்தான்; தன்னைப் போலவே அவர்களும் குடித்தால் வீட்டில் அரிசிமணி ஒன்று கூட மிச்சமிருக்காது என்பதால்தான். தன் பெரிய பிள்ளைகள் சனியனும் குருவனும் தன்னைப் போல குடிகாரர்கள் இல்லை என்பது சோமனின் நம்பிக்கை.

இந்தக் குடும்பம்தான் சோமனுடையது. இந்த குடும்பத்தின் இன்ப துன்பங்களின் ஏற்ற - இறக்கங்கள் எப்படியிருக்கும் என்பதை நீங்களே எண்ணிப் பார்த்துக் கொள்ளலாம். அவனுக்குக் கடன் - உடன் இருக்கிறதா என்று அலசிப் பார்க்கலாமா? குடிசை இருக்கும் குன்றின் எல்லைதான், எவ்வளவோ தலைமுறைகளாக அவனது முன்னோர்கள் வாழ்ந்து வந்த இடம். அதற்கென்று தீர்வையேதும் கட்ட வேண்டியதில்லை. அவன் குடிசை அவனுக்கே சொந்தமானது. அவனில்லா விட்டால் அது காற்று மழைகளுக்கே சொந்தம். குடிசையென்றால், ஏழெட்டுப் பேர் கால் நீட்டி படுக்கும் அளவுக்கு விசாலமான இடிந்துபோன வீடு. வீட்டுக்குக் கூரை உண்டு சுவர்கள் இல்லை. சுவருக்குப் பதிலாக மூங்கில்த் தட்டிகள்

இருக்கின்றன; எப்போதும் உள்பக்கம் ஒரே பகுதிதான். சமையலறை, படுக்கும் அறை, வரவேற்பறை என்னும் எந்த உள் வேறுபாடோ செல்வச் சிறப்போ இல்லாத சாதாரண குடிசை. கோடைக் காலமோ குளிர் காலமோ, அவர்கள், வீட்டு முன்னாலிருக்கும் வாசலில்தான் படுத்துத் தூங்குவார்கள். மழைக்காலம் வந்துவிட்டால் அதிகத் தொல்லைதான். ஒன்றிரண்டு சமயங்களில் பலத்த மழை பெய்து, தூக்கம் கெட்டு சிறிய பிள்ளைகளுக்கு குளிர், சளி பிடித்து வாட்டத் தொடங்கிய பிறகே, தன் வீட்டுக் கூரையை எதைக் கொண்டாவது மூடி வீட்டுக்குள் சற்று வெதுவெதுப்பாக இருக்கச் செய்வான். அப்புறம் கடன் - உடன் தொல்லைகள் பற்றி அவனுக்குக் கவலையே இல்லை. சொத்து - பத்து, வீடு, நிலம் - நீச்சு என்று இருப்பவர்களை நம்பி, யாரும் கடன் கொடுப்பார்கள். சோமனுக்கு எந்த ஆதாரத்தின் பேரில் யார் கடன் கொடுப்பார்கள்? அவன் கடன் பாக்கி கொடுக்க வேண்டுமென்றால் அது சங்கப்பய்யாவுக்குத்தான் கொடுக்க வேண்டும். அது அவருக்கும் தெரிந்தது தானே. சோமனின் கடனை பிருமனின் கள்ளுக் கிடங்கில்தான் வசூலிக்க வேண்டுமென்று! இக்காரணத்தால், ஒன்றிரண்டு காசு கைதவறி அவரிடமிருந்து அவனுக்கு அதிகமாகப் போய் வீட்டிருந்தால் அது எள்ளுந்தண்ணியோடு சேர்த்து விட்டதாகத்தான் இருக்கும். இப்படியாக சோமனுக்கே ஒரு பெருமிதம் உண்டு, தான் மற்றவர்களைப் போல கடன்காரனில்லை என்று. அதோடுகூட இன்னொரு ஆசையும் அவனுக்கு உண்டு. தானே நிலத்தை உழுது சொந்தப் பயிர் செய்ய வேண்டுமென்று!

சொந்த விவசாயம் செய்ய வேண்டுமென்னும் வேட்கை அவனது உயிர் மூச்சாக இருந்தது. ஆனால், அவன் ஊரில், புலையன்* விவசாயம் பண்ணும் சாதியவனே

* 'புலையன்' - (பறையன்); மிகவும் ஒடுக்கப்பட்ட சாதியான புலையர் சாதியிலேயே மாரி, மேர, முண்டாள போன்ற பிரிவுகள் உண்டு. சோம, மாரி என்னும் பிரிவைச் சேர்ந்த புலையன்.

இல்லை. அப்படி ஆகவேண்டும் என்ற ஆசை பிடித்தாட்டினாலும் யாரையாவது, யாரையாவது என்ன சங்கப்பய்யா பண்ணையாரிடமே ''நாலு வெரப்பாடு நீளத்துக்கு ஒரு துண்டு நெலம் எனுக்கு குத்தகைக்கு குடுங்க'' என்று கேட்கும் துணிவு அவனுக்கு இல்லை. ஆனாலும், 'இன்னிக்கில்லேன்னாலும் என்னிக்காவது சொந்தத்துக்கு கலப்பைய புடிச்சி நடக்கத்தான் போறேன்' - என்ற ஆசைமட்டும் அப்படியே இருந்தது. அதனால்தான் மூன்று ஆண்டுகளாக இரண்டு கன்றுகளை வளர்த்து வருகின்றான். இப்போது அவைகளுக்கு மூன்று வயதாகிறது. கலப்பையைச் சுமக்கும் பக்குவத்துக்கு வந்துள்ளன. ஏற்கனவே ஊரைச் சேர்ந்த பணக்கார மாப்பிளா கசாயி ஒருத்தன் அவனிடம் வந்து ''உனக்கெதுக்கு சோம, இதுங்க? இந்த கன்னுகுட்டிங்கள எனுக்கு குடுத்துடு. பத்துப் பணம் தர்றேன்'' என்றான். பத்து ரூபாய் என்பது புதையல் போல! எப்பேர்ப் பட்டவர்களையும் வாயில் நீரூறச் செய்துவிடும். ஆனால், சோம சலனப்படாமல் உறுதியாக இருந்தான்; 'பத்தில்ல, நூறு ரூபா குடுத்தாலும் விக்க மாட்டேன்' என்று. நூறு இல்லாவிட்டாலும் முப்பது ரூபாயாவது திருடன் கூட அவைகளுக்காகக் கொடுப்பான். அவை சோமனின் கையிலிருப்பதால் மாப்பிளா மட்டும் பத்து ரூபாய்களுக்கு மேல் தரவே மாட்டான்.

இன்று உட்கார்ந்தபடியே சோம யோசனையில் ஆழ்ந்திருந்தான் - கன்றுகள் வளர்ந்து எருதுகளாகி விட்டிருக்கின்றன. இனிமேலும் வளர்ந்த அவைகளை வேலையில்லாமல் வெறுமே வைத்துக் கொண்டிருக்க முடியாது. எசமானிடம் போய் - ஒரு வரப்பாடு விளையும் பூமியையாவது தனக்குக் குத்தகைக்குக் கொடுக்கும்படி கேட்பது - என்று தீர்மானித்துக் கொண்டான். இதுவரையிலும் தான் மனதுக்குள் வைத்திருந்த தன் யோசனையை தன் பிள்ளைகளுக்கும் கூறினான். அவன் பேச்சுக்கு எதிராகப் பேசும் பிள்ளைகளில்லை. பேசினால்

பெள்ளி மட்டும்தான் பேசுவாள். பெள்ளி வாய் திறந்து பேசிவிட்டாள். ''நீ எசமாங்கிட்ட வாயத் தொறந்து கேட்டு மரியாதயக் கெடுத்துக்காதே'' என்றாள். இதுவரை சோமனின் முன்னோர்களில் யாரும் விவசாயம் செய்தவர்களில்லை. அவனது எசமானிடம் எந்தவொரு புலைக் குடியானவனும் இல்லை. 'புலையர்கள் கலப்பையைத் தொட்டாலே உலகத்தில் பிரளயமே வந்துவிடும்' - என்று எண்ணுபவர்கள் ஊர் மக்கள். எங்கோ, ஏதோ ஒரு ஊரில், யாரோ ஒரு புலையன் அரசாங்க நிலத்தை வசப்படுத்தி ஏதோ கொஞ்சம் பயிர் பச்சையைப் பார்த்து விட்டான் என்று கேள்விப்பட்டு, சோமனின் காது புடைத்து நாக்கு முன்னால் நீணடுவிட்டால் அவன் வாழ்க்கையே மேன்மையடைந்துவிடுமா? அதனால்தான் பெள்ளியும் ''வாணாம்'' என்றாள். சோமனின் கோபம் தலைக்கேறியது. மீறிவந்த கோபத்தினால் அவன் அழுதேவிட்டான். ''பொலச்சி இருக்கும்போதே கலப்பைய புடிக்கணும்னு ஆசப்பட்டேன். அவுளுக்குக் குடுத்து வைக்கல அதப்பாக்க. சாவறதுக்குள்ள எனக்காவது அந்த பாக்கியம் கெடைக்கட்டும் - என் புள்ளைங்களாவது அதப் பாக்கட்டும்னு - ஆசப்பட்டா, நீ என் ஆசையிலயே மண்ணப் போடறியே!'' என்று புலம்பத் தொடங்கினான். அப்பனின் கண்ணிலிருந்து மழையாக சொரிந்த கண்ணீரைப் பார்த்த பிறகு பெள்ளியால் இனியும் ஏதாவது பேச முடியுமா? அவளுடைய தாய் இறந்த அன்று அவன் கதறி அழுததை அவள் பார்த்து பதறியவள் தானே! இப்போது அப்பனை சமாதானப்படுத்தும் வகையறியாமல், அவள் உடுக்கையின் அருகில் சென்று அதை விரலால் வருடியவாறு உட்கார்ந்திருந்தாள். சோமனின் கண்ணிலும் அந்த உடுக்கை பட்டது. எழுந்துபோய் அதைப் பிடுங்கிக் கொண்டு ஆவேசத்துடன் அதை வாசித்தவாறே உட்கார்ந்தான். அதன் பிறகு பெள்ளியின் மனதும் சமாதானமடைந்தது.

உடுக்கையின் முதல் அடியே, தம்முடைய வீட்டுத் திண்ணையின் திம்புமீது சாய்ந்து உட்கார்ந்திருந்

சங்கப்பய்யாவின் காதை முட்டி மோதியது. ''ஊம்...! அரைப்படி அரிசி இவ்வளவு சீக்கிரமா பிருமனுக்குப் போயி ரசீதும் வந்து சேந்துட்டிருக்கு!'' என்று சிரித்துக் கொண்டே சொன்னார்.

சோம இன்னமும் உடுக்கையை வாசித்துக் கொண்டேயிருந்தான். பாடுகிறவர் ஆடுகிறவர் யாருமே இல்லை. பெள்ளி உள்ளே கஞ்சி காய்ச்சிக் கொண்டிருந்தாள். பொழுது சாய்வதற்குள் சாப்பாட்டுக் கடையை முடித்தாக வேண்டுமே! பெரிய பிள்ளைகள் காட்டிற்குப் போனவர்கள் இன்னமும் திரும்பி வரவில்லை. சோம தன்னை மறந்து உடுக்கையை அடித்துக் கொண்டிருந்தான். அது எப்படிப்பட்ட வாத்தியமோ நமக்குத் தெரியாது. வெறும் ஒரு தோல் கருவி. சிறிய மரக்குச்சியொன்றைப் பிடித்துக் கொண்டு 'டமடம்ம டமடக்க' என்று அடித்தால் போதும். புதிய ஓசையில்லை. புதிய தாளமில்லை. ஆனாலும் சோமனின் மனதிற்குள் தானொரு மிருதங்கத்தை வாசிக்கும் வித்வான் என்பதைப் போன்ற பரவசம். வாசித்துக் கொண்டிருக்கிறான். ''டமடம்ம... டமடக்க'' என்று.

இவ்வளவும் நடந்து கொண்டிருந்தது வீட்டு வாசலின் எதிரில். இப்படியே வாசித்துக் கொண்டிருக்கும்போது யாரோ வெளியூர் ஆள் ஒருவன் அவன் எதிரில் வந்து நின்றான். சோமனின் வாசிக்கும் கை சட்டென்று நின்றது. வந்தவனின் முகத்தைப் பார்த்தவாறு உட்கார்ந்தான். எழுந்து நிற்க வேண்டுமென்ற அறிவும் அவனுக்குத் தோன்றவில்லை. வந்த ஆள் தொண்டையைக் கணைத்துக் கொண்டு ''நீதானே சோம?'' என்றான். அந்த தோரணை, குரல் ஆகியவற்றைக் கேட்டு ஒருமுறை சோம பதறி எழுந்து நின்று, தாழ குனிந்து வணங்கி ''ஆமாஞ்சாமி'' என்றான். ''தோட்டத்து தொரை அந்த இருவது ரூபாய் உனக்கு தானமாவா கொடுத்தாங்க?'' என்று அங்கு வந்த ஆள் மிரட்டினான். முதலில் சோமனுக்கு அவன் பேசியதின்

அர்த்தம் சரியாகப் புரியவில்லை. தன் நினைவுகளை மீண்டுமொருமுறை திருப்பிப் போட்டதும், எல்லாம் ஒவ்வொன்றாக மனத்திரையில் தோன்றத் தொடங்கின.

சோம, தன் மனைவி இறந்த ஆண்டு, களசத்துக்குப் பக்கத்திலிருக்கும் காபித் தோட்டம் ஒன்றுக்கு கூலியாளாகப் போயிருந்தான். அதற்கும் சில ஆண்டுகளுக்கு முன்பும் கூட போய் வந்து கொண்டுதான் இருந்தான். அவனது புலைச்சி இறந்த பிறகு அவன் மறுபடியும் போகவில்லை. கடைசி முறையாகப் போய் வரும் போது கொஞ்சம் கடன் வாங்கி வந்திருக்க வேண்டும். எவ்வளவென்று அவன் நினைப்பிற்கு வரவில்லை. ஐந்து ஆண்டுகளாகி விட்டன. ஒருவேளை ஐந்தாறு ரூபாய் இருக்கலாம்; இருபது என்பது நிச்சயமாக இல்லை. புலையனின் எலும்பு துருத்திய உடம்பைப் பார்த்து அவ்வளவு ரூபாயை முன்பணமாக யாராவது கொடுப்பார்களா? அதற்குப் பிறகு யாரும் இவனை தோட்ட வேலைக்குக் கூப்பிட வரவில்லை. இவனும் போகவில்லை. கூப்பிடாமல் காபித் தோட்டத்திற்குத் தானாகவே போகும் ஆசை யாருக்காவது வருமா? இந்த ஆண்டு அங்கே கூலியாட்களின் எண்ணிக்கைக் குறைந்து போனதால் அவர்கள் இவனைத் தேடிக் கொண்டு வந்திருக்கிறார்கள். ஐந்து ஆண்டு இடைவெளியில் கடன் வாங்கிய நான்கு - ஐந்து ரூபாய்களைப் பெருக்கி இருபது ரூபாய்களாகச் செய்து, பெரியதாகப் பயங்காட்டுகிறார்கள். சோம, ''இருவது ரூவாயா?'' என்று வாயைத் திறந்து கேட்பதற்கு முன்பாகவே, வந்திருந்த தோட்டத்துக்கு கங்காணி கண் சிவந்துபோய், ''என்னாது... இருவது ரூபா இல்லையா! குடுத்த காசுக்கு வட்டிகிட்டி எதுவும் இல்லேன்னு நினைச்சுக்கிட்டியா? வாங்கினதத் திருப்பித் தர்ற எண்ணமே இல்லாத பேமானிங்க... ஊம்... சொல்லு, எப்போ தோட்டத்துக்கு பொறப்படறே?...'' என்றான். யோசிப்பதற்கு நேரமே இல்லை. பதில் சொல்வதற்கும் வாய்ப்பில்லை. சோமனுக்கு என்ன சொல்வதென்றே

தோன்றவில்லை. அவன் யோசித்துக் கொண்டு இருக்கும்போதே, வந்திருந்த கங்காணி மன்வேல் ஸோஜர் ''வர்ற சனிக்கிழம திரும்ப வர்றேன் - பொறப்படத் தயாரா இரு'' என்று உத்தரவிட்டுவிட்டுப் போனான்.

சனிக்கிழமைக்கு இன்னும் மூன்று நாட்கள்தான். மூன்று நாட்களில் எல்லாவற்றையும் விட்டுவிட்டு சோம காபித் தோட்டத்திற்குப் போயே ஆகவேண்டும். போகாவிட்டால் இருபது ரூபாய் கடனைத் தீர்ப்பது எப்படி? அந்த எண்ணம்கூட அவனுக்கு இருந்ததேயில்லை. எசமான் ஒருமுறை ''தோட்டத்திலே கடன் ஒண்ணும் பாக்கியில்லையே?'' என்று கேட்டபோது, ''ஊஉம்'' என்று கூறியிருந்தான். இப்போது அவர் எதிரில் போய் என்ன சொல்வது? அவருக்குச் சொல்லாமலே போய்விட்டால்? அத்தகைய துரோகம் செய்ய அவன் மனம் தடுமாறிக் கொண்டிருந்த நேரத்திற்குச் சரியாக மேய்ச்சலுக்குப் போயிருந்த எருதுகள் திரும்பி வந்தன. அவற்றைப் பார்த்ததும் சோமனுக்குத் தெளிவு வந்தது. இவையிரண்டையும் மாப்பிளாவுக்கு விற்று இருபது ரூபாய்க் கடனைத் தீர்த்து விடுவது என்று முடிவு செய்து கொண்டான். மறுவிநாடியே, விவசாயியாக வேண்டுமென்ற அவனது ஆசையும் குறுக்கே வந்தது. மறுபடியும் சிந்தனைப் பாதையே தடைபட்டுப் போயிற்று. குடிசைக்குள் வந்து உடுக்கையை எடுத்து அடிக்கத் தொடங்கினான். ''டமடம்ம... டமடக்க...'' இசையில் சோம மூழ்கிப் போனான்.

## 3

இன்று வெள்ளிக்கிழமை, நாளை வரவிருப்பது சனிக்கிழமை; மன்வேல் வரும் நாள். ஒன்று, அவன் கேட்கும் இருபது ரூபாயைக் கொடுக்க வேண்டும்; இல்லையென்றால், தோட்டத்துக்குப் புறப்பட வேண்டும்.

நியாயமான கடனோ, அநியாயமான கடனோ? யாருக்குத் தெரியும்? உலகம் மன்வேலனின் பேச்சை நம்புமே தவிர சோமனின் பேச்சுக்கே மதிப்பிருக்காது. சோமனிடம், பணமாகக் கொடுப்பதற்கு ஒரேயொரு சல்லிக் காசும் கிடையாது. எருதுகளை விற்று கடனைத் தீர்த்து விடலாம் என்னும் ஆசை ஒருபுறம். எருதுகளை விற்றுவிட்டால் இனி இந்தப் பிறவியில் தான் விவசாயியாகும் கொஞ்சநஞ்ச வாய்ப்பும் ஒரேயடியாக அற்றுப் போய்விடுமே என்னும் பயம் இன்னொரு புறம். எருதுகளை விற்றால் கிடைப்பது வரை லாபம்தான். ஏனென்றால், அவன் அவைகளைப் பணம் கொடுத்து வாங்கியதில்லையே! ஒருமுறை காட்டு வழியாக வந்து கொண்டிருந்தபோது இரு கன்றுகளும் எங்கிருந்தோ வழிதவறி வந்து கொண்டிருந்தன. அருகில் வேறெந்த ஊரும்கூட இல்லை. அங்கேயே அவைகளை விட்டுவிட்டுப் போனால் மாலை மங்கியவுடனே அவை புலிகளின் வாய்க்கு இரையாகப் போவதென்னமோ உறுதி. எனவே, இரக்கப்பட்டு அவைகளை ஓட்டி வந்து தன்னுடையதாக இல்லாவிட்டாலும் அவைகளை அக்கறையோடு வளர்த்து வந்தான். யாராவது சொந்தக்காரர்கள் வந்து தங்களுடையதென்று அப்போதே கேட்டிருந்தால் கொடுத்திருப்பானோ என்னமோ! ஆனால், இப்போது அவைகளின் மீது ஒரு ஒட்டுதல் உண்டாகிவிட்டது. சனியனும் குருவனும் அவைகளை விற்று விடும்படி பல முறை கூறிப் பார்த்துவிட்டனர். ஆனால், அவனுக்கு அவைகளை விற்க மனம் ஒப்பவில்லை. பெள்ளி சொன்னாள்: ''இதுங்கள எசமாங்கிட்டயே உட்டு, இருவது ரூபா வாங்கினு வந்து கடன குடுத்துடலாமே'' என்று. எங்கேயிருந்து பணம் வாங்கினாலும், வாங்கிய பணத்தைத் திருப்பித் தருவதற்கு தங்கள் வாழ்நாளில் வழியே இல்லையென்று சோமனுக்குத் தெரியாதா என்ன? அதனால்தான் அவன் அதற்கும் உடன்படவில்லை.

சரி, இன்னும் எஞ்சியிருக்கிற வழி என்றால் அது காபித் தோட்டத்திற்குப் போய், பட்ட கடன் தீரும் வரை பாடுபடுவதுதான். அதன் மர்மம் சோமனுக்குத் தெரியாமலில்லை; காபித் தோட்டங்களுக்குப் போனவர்களின் கடன் இதுவரை தீர்ந்ததேயில்லை. ஒவ்வொரு ஆண்டும் அவர்கள் கடன் வாங்கிக் கொணடே இருக்க வேண்டும் - வாங்கிய கடன் கொஞ்சமும் குறையாமல் நிலுவை இருந்துகொண்டே இருக்க வேண்டும். காபித் தோட்டத்தின் குளிர் காய்ச்சலும் கடனும் ஒன்றேதான்; பிடித்த பிறகு அவை விட்டு நீங்குவது ஒரே முறைதான்! அவன் சாகும்போது.

'சரி வேற வழியில்ல - எசமாங்கிட்ட போயி கடனாவது கேக்கறேன்' என்று தீர்மானித்தான். அவர் ஒப்பவில்லையென்றால்? 'ஒருத்தரோ ரெண்டு பேரோ தோட்டத்திற்குப் போய், மன்வேலனோட தொரைக்கு ஊழியம் பண்ணிட்டு வர்றது!' எந்தக் கோணத்திலிருந்து யோசித்தாலும் சோமனின் மனதிற்கு கடைசி யோசனையே மேலும் மேலும் வலுப்படத் தொடங்கியது. அவனுக்கு எதனாலேயோ தோட்ட வாழ்க்கை என்பது மனதிற்குப் பிடிக்காத ஒன்றாக இருந்தது. ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கான ஏழைகள் தோட்டங்களுக்குப் போகிறார்கள், வருகிறார்கள். இவனும் போயிருந்தான்; திரும்பி வந்தான். ஆனால், அங்கு வாழ்ந்த வாழ்க்கையின் மீது இவனுக்கு எந்த பிடிப்பும் ஏற்படவில்லை. போவது, உழைப்பது, மறுபடியும் ஊருக்குத் திரும்புவது. போகும்போது இருந்த அதே அளவு கையிருப்பு நிலைமைதான் திரும்பி வரும்போதும் இருக்கும். அங்கே போய் வந்தும் அதே வாழ்க்கைதான் கண்ட பலன் என்றால், இங்கேயே, ஊரிலேயே கிடைத்த வேலையைச் செய்து கொண்டு, வந்ததை அனுபவித்துக் கொண்டிருக்கலாமே! இதெல்லாம் வெறும் வேதாந்தம்தானோ? நாளைக்கு மன்வேல் எமதூதனைப் போல வந்து நின்றால், அவனெதிரில். வேலைக்கு உதவாத யோசனைகள்

இவையெல்லாம்! அதனால், அவன், மகளை அழைத்து ''பெள்ளி நாம யோசன பண்ணி ஆவப்போற தொண்ணுமில்ல... போயி நாலு மாசம் இருந்துட்டு வர்றேன்'' என்றான். பெள்ளிக்கு அது இடி விழுந்தது போலிருந்தது. வயதான தகப்பன் இந்த வயதில் காபித் தோட்டத்தில் பாடுபட்டு உழைப்பது என்பது அவளுக்குச் சரியாகப் படவில்லை. ஒருவேளை அவனே போனாலும் தான் என்ன லாபம்? கைக்கு ரொக்கமாகக் கிடைக்கும் சில்லரைக் காசு எதுவும் கடனை அடைக்க உதவப் போவதில்லை. காபித் தோட்டங்களின் பக்கத்திலும் கள்ளுக் கடைகள் இருந்தே இருக்குமே!

அவள் பேசாமலிருப்பதைப் பார்த்து சோம சொன்னான். ''ஆமா, போகாம வேற வழியிருக்குதா என்னா? இல்லன்னா சனிய - குருவ ரெண்டு பேரையும் அனுப்பி வெக்கணும். அவங்க பாவம் அறியாத பசங்க.''

சனிய, குருவ இருவரும் இன்னும் அறியாத பிள்ளைகளாம்! உண்மைதான், தகப்பனின் பார்வையில் அவர்கள் என்றென்றைக்கும் சிறுவர்கள்தான். ஆனால், பிள்ளைகள் மனதில் மட்டும் - 'மீசை மொளச்ச பின்னால நாங்க பெரியவககயில்லையா?' - என்ற நினைப்பு. தங்கள் விருப்பம்போல் தனியாக வாழ்க்கை நடத்த வேண்டுமென்ற ஆசை அவர்களுக்கும் வந்துள்ளது. தோட்டத்து பேச்சைக் கேட்டவுடன் சோமனுக்கு அச்சமேற்பட்டாலும் அவர்களுக்கு அது கவர்ச்சியாகவே இருந்தது. மாதத்திற்கு பத்துப் பதினைந்து ரூபாய் ரொக்கக் கூலி கிடைக்கிறது. அப்படியிருக்க அதை விட்டுவிட்டு, ஊரிலுள்ள வீடுகளுக்குப் போய் நாள்தோறும் அரைப்படி நெல்லுக்காக மாடாய் உழைப்பது என்ன நியாயம்? என்பது அவர்களின் வாதம். பெள்ளி ''யப்பா... இந்த வயசுல நீ இந்த சின்ன பசங்கள உட்டுட்டு ஊடுவாசல உட்டுட்டு அங்கெல்லாம் போவக் கூடாது. காள - நீலனுங்க கதி என்னாவும்? எல்லாரையம் கூட்டிக்கினு இங்கேருந்து

வேற எங்கியும் குடிபோகத்தான் முடியுமா? அதுவும் இல்ல... எசமானோட ரொணத்தத்தான் அதனால தீக்க முடியுமா? அதுவும் இல்ல....''

சோமனின் முகம் மிகவும் வாடிப் போய்விட்டது. அதுவும் உண்மைதான். எசமானின் மனதை நோகடிக்காமல் வேறு வழியில்லை. அவர், சிறிய பிள்ளைகளை நம்பி அவனைப் போகவிட மாட்டார். அப்படியிருக்கும்போது எஞ்சியிருப்பது ஒரே வழி, பெரிய பிள்ளைகள் இருவரையும் காபித் தோட்டத்துக்கு அனுப்பி வைப்பதுதான். ஒருவனை மட்டும் நம்பி அனுப்பி வைக்கலாமென்றால் துணிவு போதாது. அங்கே ஏதாவது நோய் - நொடி ஏற்பட்டுவிட்டால்? இருவரையும் சேர்த்து அனுப்புவதிலும் ஒரு ஆபத்து உண்டு. இருவரும் அங்கேயுள்ளவர்களோடு பழகி, குடிக்கக் கற்றுக் கொண்டு, கடனைத் தீர்ப்பதற்கு மாறாக அதிகப்படுத்திக் கொண்டு வந்தால்!

பெரிய மகன்கள் ஊரிலிருக்கும் போதே வீட்டில் கொஞ்சமாகத் திருடி குடித்துக் கொண்டுதான் இருக்கிறார்கள் என்பது கிழச் சோமனுக்கு எப்படித் தெரியும்? எப்படியோ பெள்ளி ஆறுதலாகச் சொன்னாள்: ''யப்பா, அவுங்க என்னா இன்னும் சின்ன பசங்களா? அவுங்களும் பொறுப்பு தெரிஞ்சி குடும்பம் தொடங்க வாணாமா? அவுங்களுக்கிப்போ கல்யாணம் கட்ற வயசாவுது. இனிக்கோ நாளிக்கோ பொலச்சிங்களோட சேந்திருக்க ணேடியவங்கள ஊட்லயே ஒக்கார வச்சினுருக்கிறது சரியா?'' சோமனின் சிந்தனை ஒன்றிலிருந்து ஒன்றுக்குத் தாவியது. பெரிய மகன் சனியனுக்கு இன்னும் மணம் செய்யவில்லை. அவனது சம வயது எசமான் சங்கப்பய்யனுக்கு மணமாகி நான்காண்டுகளாகின்றன. தான் ஏழை என்பதால் மகனுக்கு மணம் செய்து வைக்க மறந்து விடலாமா? மகனுக்கு உடனே திருமணம் செய்துவிட வேண்டும் என்று

தீர்மானித்துக் கொண்டான். அப்படி திருமணம் செய்துதான் தோட்டத்திற்கு அனுப்ப வேண்டுமென்ற எண்ணம் அவனுக்கு. 'ஆனால், நாளைக்கே மன்வேல் வருவானே!' எப்படியோ மகனிடம் திருமண ஆசையை உருவாக்கி விட்டால் அவன் நான்கு காசுகளை மீதம் பிடித்து சேர்ப்பான் என்ற நம்பிக்கை சோமனுக்கு. மகனுக்குத் திருமணம் என்ற எண்ணம் வந்தவுடன் மகள் பெள்ளியைப் பற்றிய நினைவும் வந்தது. அவளுக்கும் திருமண வயது மீறிப் போய்விட்டது. ஆனால், மணமானால் மகளை மருமகனுடன் அனுப்பியாக வேண்டுமே என்ற பயத்தினால் அதைப் பற்றிய பேச்சையே சோம எடுக்க மாட்டான்; யாராவது கேட்டாலும், 'இன்னும் சின்னவ, அவசரம் என்னா?' என்பதே அவனது தற்போதைய பதில்.

பேசிக் கொண்டிருந்ததில் நிறைய நேரம் கடந்து விட்டதென்று, சோம விழுந்தடித்து ஓடி பண்ணையார் வீட்டுக்குப் போகும் பாதையில் காலடி வைத்தான். பெள்ளி தம்பிகளுக்குக் கஞ்சி வடித்து, புல் அறுத்துவர என்று காட்டுக்குப் போனாள். சோம நூறு அடி தூரங்கூட போயிருக்க மாட்டான். பண்ணையார் வீட்டிலிருந்து 'சோமாாரா...' என்று கூப்பிடுவது கேட்டது. அவர் அவனுக்காகக் காத்திருந்தார்.

சோம அவர் வீட்டு வாசலில் நுழையும்போது அவர் கண்களை உருட்டிக் கொண்டு நின்றிருந்தார். மற்ற கூலியாட்கள், கடப்பாரை, கூடைகளைப் பிடித்துக் கொண்டு அவன் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். சோமனுக்கு, வந்தவுடன் பண்ணையாரின் எண்ணம் புரிந்தது. எதுவும் பேசாமல் அவசர அவசரமாக வேலைக்குப் புறப்பட்டான். கடந்த ஆண்டு மழைக் காலத்தில் பக்கத்திலிருந்த ஏரி நிரம்பி வழிந்து தடம்மாறி குன்று மண்ணையெல்லாம், விளைந்திருந்த வயலில் கொண்டு வந்து கொட்டியிருந்தது. இந்த ஆண்டு மழை பெய்வதற்கு முன்னால் அதையெல்லாம் வாரி எடுத்து

ஏரியின் கரையைக் கட்டாமல் போனால், சாகுபடி முழுவதையுமே இழக்க வேண்டியதாகிவிடும். அந்த வகையில் இன்னும் இரண்டு - மூன்று நாள் வேலை எஞ்சியிருந்தது. மழை ஏதாவது எதிர்பாராமல் வந்துவிடுமோ என்ற பயம் அவருக்கு.

சோம மிகவும் உற்சாகத்துடன், வயலில் படிந்திருந்த மண், மணலையெல்லாம் வாரிவாரி கூடைகளில் நிரப்பினான். அன்றைக்கு அவனை ஏதோ ஒரு ஆவி பிடித்தாட்டியதென்றே சொல்ல வேண்டும். மண் சுமக்கும் கூலிகள் அவனை வியப்போடு பார்த்தனர். இவ்வளவு நாட்கள், அரட்டையடித்து கொஞ்சமாவது நேரம் போக்கும் சோம, இன்று மூச்சுவிடக்கூட இடம் கொடுக்காமல் வேலை செய்து கொண்டிருந்தான். முழுநாள் வேலையும், பொழுது நெத்திக்கு நேராக வருவதற்குள் நடந்து முடிந்துவிட்டது. ஆட்கள் வேலை செய்வதைப் பார்க்க சங்கப்பய்யா அந்தப் பக்கம் வந்தார். சோமனின் நடவடிக்கைகளைப் பார்த்து அவருக்கு ஆச்சர்யம், ''கெழச்சோமனோட முதுகு நிமிர்ந்து போச்சா என்ன?'' என்று மகிழ்ந்துபோய் திரும்பிப் போனார். முற்பகல் வேலையை விடும்போது பொழுது நகர்ந்து இரண்டு நாழிகையாயிருந்தது. ஆட்கள் எல்லோரும் களைப்போடு பெருமூச்சு விட்டவாறு வந்து கொண்டிருந்தனர். சோம கைவிரல்களால் வேர்வையை வழித்தவாறே எசமான் வீட்டு வாசலின் முன்னால் சென்று 'உஸ்'ஸென்று உட்கார்ந்தான். அப்போதுதான் பண்ணையார் உணவை முடித்துக் கொண்டு வெளித்திண்ணையில் வந்து உட்கார்ந்தார். மலர்ந்த முகத்தினராய், வெற்றிலைப் பாக்கையும் ஒரு துண்டு புகையிலையையும் அவன் பக்கம் எறிந்தார். புகையிலையென்றால் சோமனுக்கு உயிர், கள்ளுக்கு அடுத்து. இன்றைக்கு சங்கப்பய்யா தான் பயன்படுத்தும் புகையிலையின் ஒரு துண்டையே அவன் பக்கமாக எறிந்திருந்தார். அதனால் சோமனுக்கும் உள்ளம் பூரித்துப் போய்விட்டது. வெற்றிலைப் பாக்கை மென்றவாறே புகையிலைத் துண்டின் முனையில் சுண்ணாம்பைத்

தடவியபடி உட்கார்ந்திருந்தான். சங்கப்பய்யா ஒருமுறை, ''ஏண்டா சோம, அந்த உன் எருதுகள தெய்வத்துக்கு விட்டிருக்கியா என்ன?'' என்று கேட்டார்.

சோம மௌனமாக சிரித்தான். சங்கப்பய்யா மறுபடியும் ''சோம, நம்ம வீட்டு எருதுங்க ரெண்டும் கெழமா ஆயிட்டதுங்க. அதுங்களை நம்பி இந்த வருசத்து மழகாலத்த கழிக்க முடியாது. உன்னோட அந்த எருதுங்க ரெண்டையும் ஏர்ல பூட்டிப் பாக்கலாமா?'' என்று கேட்டார்.

சோமனின் வாயிலிருந்து பேச்சே வரவில்லை.

''நீ அதுங்கள கிரயத்துக்கே கொடுத்தாலும் சரிதான்; இல்ல உன்னோடதுன்னு நம்ம வீட்டிலேயே விட்டு வச்சாலும் சரிதான்.''

சோமனுக்கு என்ன சொல்வதென்று எதுவும் தோன்றவில்லை; ''என்ன பேச்சே வரலே? அதுங்கள ஏர்ல பூட்றதில்லேன்னு வேண்டிக்கிட்டிருக்கிறயா?'' என்று மீண்டும் சங்கப்பய்யா கேட்டார்.

அப்போது சோம வேறு வழி தெரியாமலேயே ''ஏர்ல கட்டாம இருக்கிறதுக்கு நான் என்னா 'பூம்மாடு' காட்றவனா?'' என்றான்.

''அப்படின்னா அதுங்கள வர்ற மழைக்காலத்துல ஏர்ல பூட்டிடறியா? நான் வேற ஜோடிய தேட வேண்டாம் பாரு. ரொக்க வெலை வேணுமின்னாலும் கொடுக்கறேன்... வெலை என்ன ஆகும்னு நீ சொல்லு. இல்லேன்னா அதுங்கள பார்த்தவங்களாவது சொல்லட்டும்...''

''வெலைக்கி விக்ற மனசில்ல... அதுங்க எசமான் வேலைக்கு ஆகாததும் இல்ல.... என்னுமோ எம்மனசுக்குள்ள ஒரு ஆச... அத எசமான் நடத்திக் குடுத்தா போதும்...''

சங்கப்பய்யா பண்ணை சோமனின் மனதில் உள்ள அந்த ஆசை என்னவென்று தெரிந்துகொள்ள முயலவில்லை - அவர் ஏதோ வேலையாக உள்ளே போனவர் நீண்ட நேரமாகியும் வெளியே வரவேயில்லை. பிற்பகல் வேலைக்கு நேரமாயிற்று என்று சோம புறப்பட்டுப் போனான். காலையைப் போலவே விரைவாக வேலையை முடித்துவிட்டான். தொடங்கிய வேலை முழுவதும் முடித்த பிறகே திரும்பி வந்தான். சங்கப்பய்யாவும் மகிழ்ந்து போனார். சோம மிகவும் நம்பிக்கைக்குரியவன் என்று அவருக்குத் தெரியும்.

இருள் கவிந்து வரும் நேரம், சங்கப்பய்யா கூலி ஆட்களுக்கு அரிசியை அளந்து போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். எல்லோரும் வீட்டிற்கு போனாலும் சோம மட்டும் அவருடன் பேசும் ஆசையில் உட்கார்ந்திருந்தான். என்னவோ கேட்க சோம காத்திருக்கிறான் என்பது அவருக்குப் புரிந்தது. அதனால் அவர் மெதுவாக சிரித்துக் கொண்டே, ''என்ன சோமனோட சவாரி இன்னைக்கி கள்ளுகடைக்குப் போகப் போறது இல்லையா?'' என்று கேலியாகக் கேட்டார். சோமனுக்கு கள்ளுக்கடை மறந்து போகுமா என்ன? வேறு ஆசை எதுவோ இன்று அவனைத் தடுத்து நிறுத்தியிருக்கிறது.

''இன்னிக்குப் போவமாட்டேன்...''

''அப்படின்னா எதுக்கு உக்காந்திட்டே? வீட்டுக்குப் போய் உடுக்கையையாவது வாசிக்கலாமில்ல... இந்த கிராமத்தில யாரும் கொஞ்சங்கூட தூங்கிடக் கூடாதுன்ற எண்ணமாச்சே உன்னோடது!'' சோம எசமானின் கேலிப் பேச்சைக் கேட்டுச் சிரித்தான். என்றுமில்லாமல் சங்கப்பய்யா எதற்காகவோ அவனை பேசவைக்க முயற்சி செய்வதாகத் தெரிந்தது.

''அப்போ எதுக்கு உக்காந்திருக்கே?'' என்றார்.

''ஒண்ணுமில்ல, அந்த ரெண்டு எருதுங்களப் பத்தியும்...''

''என்ன சொல்லணுமோ சொல்லு... தயங்காதே...''

''வேற ஒண்ணுமில்ல... எசமான் தயவுல எவ்வளவோ குடியானவ ஆளுங்க இருக்கிறாங்க. இந்த சோமனுக்கும் ஒரு ஒதவாத குப்பமோடா பாத்து குத்தகைக்கு குடுத்தா உங்க பேரச் சொல்லி பொழச்சிக்குவேன்.''

சோமனின் பேச்சைக் கேட்டு சங்கப்பய்யாவுக்கு வியப்பேற்பட்டது.

புலையன் விவசாயியாவதா? என்று தோன்றியது. ஆனால், அவரிடம் பாழாய்க் கிடக்கும் பூமி எவ்வளவோ இருந்தது. அதில் கொஞ்சத்தை அவன்தான் உழுது பயிரிட்டு சரியாக்கட்டுமே என்று அவருக்கும் தோன்றியதால், அதைப்பற்றி தன் தாயிடம் பேசுவதற்காக உள்ளே சென்றார். சோம ஆவலோடு வெளியே காத்து உட்கார்ந்திருந்தான். தான் விவசாயியாகும் நல்லநாள் வந்துவிட்டது என்ற பூரிப்பில் இதயம் படபடவென அடித்துக் கொண்டது. காபித் தோட்டம் மறந்தே போய்விட்டது. பண்ணையார் திரும்பி வந்து, ''சோம... இதுவரைக்கும் நம்ம பெரியவங்க உங்க ஆளுங்களுக்கு குத்தகைக்கு நெலம் கொடுத்ததில்ல. இப்பவும் அப்படி கொடுக்கிறதுக்கு வழி ஒண்ணும் இல்லையே'' என்றார். இந்த பேச்சுக்கு மறுபேச்சு இல்லை. பிரச்சனை அத்துடன் தீர்ந்தது. வீட்டுக்குள்ளிருந்து சங்கப்பய்யாவின் தாய் ''அப்பா...! இந்தப் பொலயனுக்கு வந்த திமிரைப் பாரேன்'' என்று திட்டிக் கொண்டிருந்தாள். சோம ஏமாற்றத்துடன் வீட்டுக்குத் திரும்ப எண்ணி எழப்போனான். அவனுடைய கெட்டகாலம் அவன் அங்கிருந்து எழுந்து புறப்படுவதற்குள்ளாக மன்வேல் சங்கப்பய்யாவைத் தேடி வந்தான்.

வந்தவன், அபசகுனம் மாதிரி ''ஐயா, இந்த உங்க பண்ணையாளுது ஒரு இருபது ரூபா பாக்கி நமக்கு வரவேண்டியிருக்குது! எந்த யுகத்தில வருமோ தெரியலே'' என்றான். சங்கப்பய்யா எசமான் கோபத்தில் ''சோம, என்னண்ட நீ 'கடன் எதுவுமில்லே'ன்னு சொன்னியே?'' என்று கத்தினார். சோமனின் முகம் விழுந்து போயிற்று. மன்வேல் அங்கேயே இரவு உணவுக்கு நின்றான். சோம உடலை இழுத்துக் கொண்டு புறப்பட்டான். தன் வீட்டுக்கல்ல; பிருமபூசாரியின் கள்ளுக்கடைக்கு.

## 4

சங்கப்பய்யாவின் வீட்டிலிருந்து பிருமபூசாரியின் கள்ளுக்கடைக்கு ஒன்றரை மணி தொலைவிருக்கும். சோம நடந்து கொண்டேயிருந்தான். வழிநெடுகிலும், என்ன வந்தது யாரெல்லாம் எதிர்பட்டார்கள் என்ற உணர்வே அவனுக்கு இல்லை. அவன் மனது உணர்ச்சிக் கொந்தளிப்பில் தத்தளித்தது. தன் தலையில் சொந்த விவசாயத்துக்குக் கலப்பைப் பிடிக்கும் பாக்கியம் எழுதியிருக்க வில்லையென்று அவன் நொந்து கொண்டான். யாரோ ஒரு அதிகாரி ஊருக்கு வந்து அவனை அழைத்துப் போய் அவன் நிலையை முன்னேற்றுவதாக எப்போதோ அவனிடம் கூறியிருந்தார். போகனஹள்ளிக்கு வெளியே இருந்த ஒரு துண்டு இடத்தை அவனுக்கு அரசாங்கத்திடமிருந்து பெற்றுத் தருவதாகக் கூறியிருந்தார். அவர் அப்படிச் செய்திருந்தால் - இதற்குள்ளாக வெட்டியோ, கொத்தியோ அவனுடையது என்று ஒரு கையகல நிலமாவது அவன் பெருமையைக் காக்க இருந்திருக்கும். ஆனால், அவனே அந்த பேச்சைப் பொருட்படுத்தவில்லை அப்போது. பொருட்படுத்தி யிருந்தாலும் தன் வாழ்க்கை மகிழ்ச்சியுள்ளதாகியிருக்கும் என்ற நம்பிக்கை அவனுக்கு இருக்கவில்லை.

வாழ்க்கையில் முன்னும் பின்னும் என்று எதுவுமில்லாத அவன் படியளக்கும் சங்கப்பய்யாவின் ஆதரவை அறுத்துக் கொண்டு ஊருக்கு வெளியிலிருக்கும் பொட்டலில் போய் 'பங்களா' கட்டிக் கொண்டா வாழ்ந்துவிட முடியும்? இப்போதாவது அரைப்படி அரிசியோ நெல்லோ கூலியாக கிடைக்கிறது; அங்கே போய் நின்றால் அதுவும் கிடைக்காது! அவன் மனதில் இத்தகைய நூற்றுக்கணக்கான எண்ணங்கள் வந்து போவதற்குள் கள்ளுக்கடை வந்துவிட்டது. பிருமபூசாரி கடைக் கதவைச் சாத்திக் கொண்டு புறப்பட்டுப் போக இருந்தான். இவனைக் கண்டவுடன் சற்றுத் தயங்கி நின்றான். உள்ளே சிறிதளவே கள்ளு மீந்திருந்தது. சோம வருவான் என்று அவனது பங்குக் கள்ளை எடுத்து வைத்து காத்திருக்கவா முடியும்?

வந்த சோம காலை மடக்கி கடைக்கு முன்னால் உட்கார்ந்தான். எதுவும் பேசவில்லை. துண்டில் முடித்து வைத்திருந்த ஒருபடி அரிசியை - இரண்டு நாள் உழைப்பை தன் முன்னால் அவிழ்த்துக் கொட்டினான். பூசாரி வந்து முதலில் அரிசியை அளந்துப் பார்த்து உள்ளே எடுத்துக் கொண்டு போனான். போகும்போது "என்ன முக்காரிக்கா படிதான் இருக்குது. பாத்தியா?" என்று சொல்லிவிட்டுப் போனான். எப்படியோ, சங்கப்பய்யா கொடுக்கும் படிக்கும், பிருமன் வாங்கும் படிக்கும் இடையில் ஆழாக்கு அரிசி மாயமாகியிருந்தது. உள்ளே எடுத்துக் கொண்டு போன அரிசிக்கு ஒரு புட்டி கள்ளை கப்பரையில் நிரப்பிக் கொண்டு வந்து கொடுத்தான். அந்த அளவுக்கு நல்ல கள்ளு இல்லைதான்; தண்ணியைக் கலந்து ஒரு புட்டி கள்ளு ஆக்க வேண்டியிருந்தது.

சோமனுக்கு ஒரு புட்டி என்றால் ஒரே முழுக்கு. "வாய்க்கு தொட்டுக்க எதுனா இருக்குதா?" என்று கேட்டான். அந்த நேரத்தில் என்ன மீந்திருக்கப் போகிறது? விரலைத்தான் கடித்துக் கொள்ள வேண்டும்?

''இவ்வளவுதானா முக்காரிக்கா படிக்கு?'' என்று சோம கேட்டான்.

''கொஞ்சங்கூட தண்ணி கலக்காம குடுத்திருக்கு. தெரியுமா?'' என்றான் பிரும. இருந்தும், சோமனோடு தகராறு செய்து பயனில்லை என்று தெரியும். அதனால் உள்ளே மீந்திருக்கிற, அதாவது கள்ளுப் பானையில் ஒட்டிக் கொண்டிருக்கிற கள்ளில் மீண்டும் நீரைக் கலந்து இன்னொரு புட்டியை நிரப்பிக் கொண்டு வந்து தந்தான். சோம ஒரே நிமிடத்தில் இரண்டாவதையும் எடுத்து குடித்து முடித்தான். ''இன்னும்...'' என்று கேட்பதற்குள் பிரும பூசாரி கடையின் கதவை மூடி, தன் வீட்டை நோக்கி நடக்கத் துவங்கி விட்டான். சோமனுக்குக் கோபம் தலைக்கேறியது. அங்கேயே ''யே... டே...'' என்று கூவத் தொடங்கினான். வாயிலிருந்து என்னென்னவோ பாட்டுக்கள் உளறலாக வெளிவந்தன. நீண்ட நேரம் வரை தன்னை மறந்து எழுந்து ஆடியாடி தரையில் சாய்ந்தான். அவனுக்கு சரியாக விழிப்பு வந்தபோது நடு இரவாகியிருந்தது. திடீரென்று பெய்த மழை அவன் உடலை தொப்பலாக நனைந்திருந்தது.

எழுந்து நின்று, சொல்லாமல் கொள்ளாமல் வந்த மழையைத் திட்டியவாறே வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான். மழை பெய்து கொண்டேயிருந்தது. அவ்வப்போது இடி மின்னல்கள் வேறு. அந்த மின்னல் ஒளியில், கால்கள் தட்டுத் தடுமாற தன் குடிசைக்குப் போகும் பாதையில் அடி எடுத்து வைத்தான். இப்போது எசமான் பற்றிய எண்ணம், விவசாயம் செய்யும் எண்ணம் எதுவுமே அவனுக்கு இல்லை; மழை மற்றும் பூசாரியின் மீதான ஆத்திரம் மட்டுமே.

மழையில் நனைந்து வழியில் வழுக்கி விழுந்து அவன் குடிசையை அடைய ஒரு மணி நேரமாவது ஆகியிருக்கும். சோமனுக்கு ஏது நேரம் பற்றிய சிந்தனை? வந்து குடிசையின் முன்னால் நின்று, ''பெள்ளி...'' என்று

கத்தினான். பெள்ளியும் அதுவரை தூங்கியிருக்கவில்லை. தகப்பனைப் பற்றிய கவலையில் அவள் மூழ்கிப் போயிருந்தாள். அவன் குரலைக் கேட்டுத் தடுக்கிக் கதவைத் திறந்தாள். காற்றும் சோமனும் ஒன்றாகவே வீட்டுக்குள் நுழைந்தனர். மீண்டும் கதவை அடைந்தாள். இருள் கவிந்த உலகம் அது.

பெள்ளி, கொஞ்சம் வெளிச்சம் உண்டாக்கலாமே என்று அடுப்பருகில் நகர்ந்து சென்று மூச்சையெல்லாம் சேர்த்து ஊதினாள்: முகமெங்கும் சாம்பல்தான் அப்பியது. வேறு வழி தெரியாமல் கஞ்சி வடித்திருந்த குடுவையைக் கொண்டு வந்து தகப்பனுக்குக் கொடுத்தாள். ''உனக்கெங்கே?'' என்று கேட்டான் சோம. அவள் குடித்து முடித்திருந்தாள். சோம ஒரே மூச்சில் அதிலிருந்ததையெல்லாம் குடித்துத் தீர்த்தான். கள்ளின் மேலிருந்த வஞ்சத்தை கஞ்சியின் மீது தீர்த்துக் கொண்டான். வெளியே மழை பெய்து கொண்டேயிருந்தது. சோமனின் மனக் கொந்தளிப்பு அடங்குவதாக இல்லை. அதனால் உடுக்கையைத் தேடத் துவங்கினான். பெள்ளி, ''என்னாத்தப்பா தேடற?'' என்று கேட்டாள். ''என்னத்தன்னா...!'' என்றவாறே தான் தேடுவதைத் தொடர்ந்தான். பெள்ளி அவனை இழுத்து நிறுத்தி ''புள்ளைங்கள இருட்டுல மெதிச்சிடாதே...'' என்றாள். ''எனுக்கு என்னா கண்ணில்லியா?'' என்று கத்தினான். கடைசியில் உடுக்கை கைக்குக் கிடைத்தேவிட்டது. கிடைத்தவுடனே ஆவேசத்தோடு இரண்டு அடி அடித்தான். அந்த சப்தத்திற்கு தூங்கிக் கொண்டிருந்த பிள்ளைகள் விழித்துக் கொள்வார்களே என்று பெள்ளி, அவசரமாக அதைப் பிடுங்கி வைத்துக் கொண்டாள். அவனை சரமாரியாகத் திட்டித் தீர்த்தாள். ''நடு ராத்திரி ஆச்சி - நீ எங்கனா குடிச்சிட்டு வந்து, புள்ளைங்கள போட்டு அடிக்கிறது; இப்போ புள்ளைங்க தூங்கக் கூடாதுன்னு உடுக்கைய அடிக்கப் போறியா?'' என்று அதட்டினாள். எப்போதோ ஒரு முறை வரும் துணிவு இது. தகப்பன்

மேலிருந்த பாசமே இப்போது ஆத்திரமாக வெடித்து வந்தது. சோம அவளின் உரத்த குரலின் வேகத்தைக் கேட்டு பயந்தான். திக்குமுக்காடிப் போனான். பெள்ளி அவன் எதையும் யோசிப்பதற்கே இடம் கொடுக்காமல், ''ஊம்... வா... இப்பிடி சும்மா படுத்துக்கெட... நாளைக்கு கங்காணி வருவாருன்றத மறந்துட்டியா?'' என்று கூறி அவனை இழுத்துக் கொண்டு வந்து படுக்க வைத்தாள். அவன் நிறைய குடித்திருக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டாள். தனக்குப் போதையேறிப் போயிருப்பதாக சோமனும் எண்ணிக் கொண்டான். இவ்வளவிற்கும், வயிற்றுக்குள் போனது வெறும் அரை புட்டி சாதாரண கள்ளு - மற்றதெல்லாம் வெறும் தண்ணிதானே!

சோமனும் அப்படியே படுத்துவிட்டான். பெள்ளியும் படுத்தாள். தூங்கினார்களா இல்லையா தெரியாது. எப்படியோ பொழுது விடிந்தது. காலைக் கதிரவன் கண் திறந்தவுடன் சோம ஒருவனைத் தவிர மற்றவர்களெல்லாம் எழுந்து விட்டனர். பெள்ளி அவசரமாக நெருப்பைப் பற்ற வைக்கப் போனாள். அடுப்பில் கனல் அவிந்து போயிருந்தது. நெருப்புப் பெட்டி எப்போதுமே இருந்ததில்லை. பண்ணை எசமான் வீட்டுக்குப் போய் நான்கு நெருப்புக் கட்டிகளை வேண்டி வாங்கி வந்தாள். வரும்போது அந்த வீட்டு வாசலில் காபித் தோட்டத்துத் தூதுவன் நின்றிருந்தது கண்ணில் பட்டது. அவசரமாக ஓடிச் சென்று குடிசைக்குள் நுழைந்து, தகப்பனை எழுப்பலாமென்று உடம்பைப் பிடித்து அசைத்தாள். அவன் இன்னமும் ஆழ்ந்த தூக்கத்திலிருந்தான்! உடம்பு காய்ச்சலில் கொதித்தது. பயந்துபோய் பேசாமல் விட்டுவிட்டு, தன் அன்றாட வேலையில் இறங்கினாள். அண்ணன்களிடம், வேகமாகப் போய் நான்கு கட்டு இலை - தழை தீவனத்தை அறுத்துக் கொண்டு வந்து பண்ணையார் வீட்டுத் தொழுவத்தில் போடும்படிக் கூறினாள். அவர்களும் கூட கஞ்சித் தண்ணிக்காகக் காத்திருக்கவில்லை. கத்தியை எடுத்துக் கொண்டு

காட்டிற்குச் சென்றனர். நீல, காள இருவரும் வெளியே வந்து பார்த்தனர் - எருதுகள் இரண்டும் கட்டியிருந்த மரத்தின் கீழே நடுங்கிக் கொண்டு நின்றிருந்தன. அவைகளுக்காகக் கட்டிய பந்தல் விழுந்து கிடந்தது. புதிதாகக் கட்ட முடியாமல் போனதால் அப்படியே இருந்தது. அக்காவிடம் போய் ''யக்கா... ரெண்டு மாடுங்களும் ராத்திரியெல்லாம் மளைல நனைஞ்சி போயிருக்கணும் பாவம்'' என்றனர். பெள்ளிக்கு, மழையில் அந்த எருதுகள் நனைந்து போகுமே என்ற நினைவு எப்படி வரும்? வயதான தகப்பனின் எண்ணம், மன்வேலனின் கடன் பற்றிய எண்ணம் ஆகியவைகளின் நடுவில் வேறு எதைப் பற்றிய நினைவும் அவளுக்கு ஏற்படவில்லை. இப்போது வெளியே வந்து, எருதுகளை கழுத்துக் கயிற்றை அவிழ்ந்து மேய்ச்சலுக்கு விரட்டி விட்டு குடிசைக்குத் திரும்பினாள். திரும்பும்போது, ''எருதுங்க ரெண்டும் நம்ம நெலமைக்கு அதிகந்தான்'' என்று முணகிக் கொண்டாள்.

நனைந்த மீளாறுகளைப் பொறுக்கி எடுத்து வந்து நெருப்பைப் பற்ற வைத்து, கஞ்சியைக் காய்ச்சி கீழே இறக்கியது, சோம எழுந்தது, குடிசையின் முன்னால் மன்வேல் வந்து நின்றது எல்லாம் ஒரே நேரத்தில் நடந்தன. ''சோமாாாரா....'' என்று மன்வேல் அழைத்தான். சோம உள்ளேயிருந்து ''யாரு அது?'' என்று மெதுவாகக் கேட்டான். பெள்ளி அவனுக்கு நிலைமையைத் தெளிவுபடுத்தினாள். ''நீ படுத்துக்கோ, உனுக்குக் காச்சலாருக்குது. மளைல நனைஞ்சா காச்சலு வராம இருக்குமா?'' என்றாள். அவனை எழவிடாமல், தானே வெளியே வந்து, ''எங்கப்பனுக்குக் காச்சலு வந்து படுத்துருக்கிறாங்க; அப்புறமா வாங்க'' என்றாள். மன்வேல் கோபத்தில் குதித்தான். ''காய்ச்சலா! காய்ச்சல் வர்றதுக்கு என்னா காரணம்? நேத்து சாயங்காலம் அவன் பண்ணையார் ஊட்டுக்கு வந்திருந்தானே? அப்போ நல்லாதானே பேசிக்கிட்டு இருந்தான். இப்போ நான் வர்றேன்னதும் காய்ச்சல் வந்திடுச்சா?'' என்றான்.

பெள்ளிக்கு கோபம் வந்தது. உண்மையைச் சொன்னாலும் நம்ப மறுக்கிறார்களே என்று எண்ணினாள். அவனுக்கு பதில் சொல்லாமலிருந்தால்தான் என்ன என்று பேசாமலிருந்தாள். அவன் மட்டுமே ஆத்திரத்தில் என்னென்னமோ திட்டித் தீர்த்துக் கொண்டிருந்தான்! என்ன இருந்தாலும் கடன் கொடுத்தவனில்லையா? அவனே கொடுக்கவில்லையென்றாலும், தன் துரைகளான மிங்கேலரிடமிருந்து கொடுக்க வைத்தவன். அவன் பேச்சின் அதிகாரத்தொனி உச்சகட்டத்திற்கு வரவும், சோம தன் பொறுமையை அடியோடு இழந்தவனாய், நடுங்கிக் கொண்டே, தட்டுத் தடுமாறி அடியெடுத்து வைத்து குடிசையின் கதவருகில் வந்து ''காச்சல் இருக்குதா இல்லியான்னு என் ஒடம்பத் தொட்டுப் பாருங்க!'' என்றான். அவன் பேச்சிலிருந்த நடுக்கம், உண்மை நிலைமையை மன்வேலனுக்குச் சுட்டிக் காட்டியது. அதனால் அவன் சற்று அமைதியாக, ''அப்படியில்ல சோம, இன்னைக்கு என்னெ வரச் சொன்னியே! நான் நேத்தே வந்து, உன்னப் பத்தி விவரமா பேசிட்டேன். உங்க எசமானும் உன் பழைய கடன தீக்கறதுக்கு ஒப்பலயே...'' என்றான்.

''அய்யோ, எசமாங்கிட்ட எங்கடன தீக்கச் சொல்லி நீங்க ஏன் கேட்டீங்க?''

''கேக்காம எப்பிடி? நீ தோட்டத்துக்கு வரமுடியலேன்னும்போது எங்க பணத்துக்கு ஏதாவதொரு ஜவாப்தாரி வேணாமா?''

''உங்க பணத்த நான் முளுங்கிப்புடுவேன்னு உங்களுக்கு யாரு சொன்னாங்க?''

''இந்த அஞ்சு வருச காலத்துல அதுல கொஞ்சமாவது நீ குடுத்திருக்கிறயா? உனக்கும் இப்போ ரொம்ப வயசாயிடிச்சி உன்னால வரமுடியலேன்னா - உன் அந்த ரெண்டு எருதுங்களையும் பண்ணையாருக்கு வித்துட்டு...''

''என் ரெண்டு எருதுங்களையும் நான் விக்கறேன் - விக்கலே.... அதெல்லாம் உங்களுக்கு எதுக்கு? உங்க பணம்... உங்க அந்த இருவது ரூபா - அந்தக் கடன அடைச்சா போதுமில்ல... என்னால வரமுடியாத நெலம... என்ரெண்டு பசங்க இருக்கிறாங்க... அவங்கள கூப்புட்னு போங்க...''

அதே நேரத்தில் குருவ, சனிய இருவரும் தீவனச் சுமைகளைச் சுமந்தபடி வீட்டுக்கு வந்தனர். அவர்களைக் காட்டி-

''பாருங்க உங்களுக்கு ஒண்ணும் அதபத்தி பயம் வாணாம். ரெண்டு பேரும் ரெண்டு இரும்பு துண்டு கணக்கா இருக்கிறாங்க. கூப்புட்டுனு போங்க.... உங்க கடன் தீர்ற வரைக்கும் அவங்க கையில ஒரு சல்லி காசக் குடுக்காதீங்க. சாப்பாட்டுக்கு எவ்ளோ ஒணமோ அதமட்டும் குடுங்க... உங்க கடன் தீர்ற வரைக்கும் நாலு மாசமோ ஆறு மாசமோ, வேல வாங்கிக்கினு அவங்கள திருப்பி அனுப்பிடுங்க...''

குருவ, சனிய இருவருக்கும் எல்லா விவரமும் முன்பே தெரிந்திருந்தது. அவர்கள் போவதற்குத் தயாராகவே இருந்தனர். பெள்ளி அவர்கள் இருவரையும் அழைத்து கஞ்சியை வடித்து, பாசத்தோடு பேசினாள். இருவரும் உணவு முடிந்து வெளியே வந்தனர். மன்வேல் கங்காணிக்கு உள்ளுக்குள் மகிழ்ச்சி. ஒரு ஆளுக்கு ஈடாக இரண்டு பேர் வருகிறார்களே.

அந்த இருவரும் வெளியே வந்ததும், சோம அவர்களிடம் தோட்ட வேலைக்கு மன்வேலனுடன் புறப்படத் தயாராகும்படி சொன்னான். அவர்களுக்கென்ன பெரிய தயாரிப்பு? இருந்த உடுப்புடனேயே அவர்கள் புறப்பட்டு விடுவார்கள். இருந்தாலும் தகப்பன் அவர்களுக்கு என்னென்ன தேவைப்படும் என்று எண்ணிப் பார்த்து, காட்டுக் கொடியில் முடைந்த ஒரு பெட்டி, தன்னுடைய கம்பளி, ஒன்றிரண்டு கிழிந்த துண்டுத்

துணிகள் ஆகியவற்றைத் தேடி எடுத்துக் கொடுத்தான். இப்போது அவர்கள் தோட்டத்துப் பயணத்துக்குத் தயார். பாவம், போகனஹள்ளியை விட்டு பத்துப் பதினைந்து மைல் தொலைவுக்குக் கூட போய் அறியாத இரு பிள்ளைகளும் இப்போது வயதான தகப்பனை விட்டுத் தொலை தூரத்திற்கு போவதென்றால் வேதனை இருக்காதா? தகப்பனையும் தங்கையையும் பார்த்து கண்ணீராகச் சொரிந்தனர். சோம அவர்களை அருகில் அழைத்து ''சனிய... கடன் கிடன் பண்ணினு வராத... எப்பிடியோ பாடுபட்டு அவுங்க கடன தீத்துட்டா, அதுக்கப்பால நீங்க தோட்டத்துப் பக்கமே போவவாணாம்... குருவ... அது வெளியூரு. ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். நீ ஆத்திரக்காரன், மூக்குமேலேயே கோவம் வரும். தொரைகிட்டயோ கங்காணிக்கிட்டயோ எப்பவும் துடுக்காப் பேசிப்புடாத. ரெண்டு பேரும் அங்கிருக்கிறவங்களோட சினேகம் வச்சிக்கினு கள்ளுக்கட பக்கமா போயிடாதீங்க. நான் ஒருத்தன் கத்துகினது போதும். என் காலம் பூரா... கையேந்தியே கழிஞ்சி போச்சி... நீங்க இனிமே கல்யாணம் கட்டிகினு, ஊடு, வாசல், பொழப்புன்னு இருக்க வேண்டிய புள்ளைங்க...'' என்றான். அவனாலும் துக்கத்தை அடக்க முடியவில்லை. கடைசியில் சனியனைத் தழுவிக் கொண்டு, தன் விரலிலிருந்த வெள்ளி மோதிரம் ஒன்றை அவன் விரலில் பூட்டி, ''மானம் போற சமயத்துல இத வித்து சாப்புட்டுக்குங்க... சனிய, சீக்கிரமா கடன தீத்துட்டு வா. வர்ற மளகாலத்துக்குள்ள ஒரு சம்பந்தம் பாத்து வைக்கிறேன்!'' என்றான்.

அதன் பிறகு அதிகமாக யாரும் பேசவில்லை...! ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து கண்ணீர் விடுவது மட்டும் தொடர்ந்தது. சற்று நேரம் அப்படியே கழிந்த பிறகு அந்த பிள்ளைகள் தகப்பனை விட்டுப் பிரிந்து பயணம் சென்றனர்.

## 5

**ச**னியனும் குருவனும் வீட்டை விட்டு மனம் நிறைந்த கனவுகளோடும் உற்சாகத்தோடும் காபித் தோட்டம் போகும் பாதையில் நடந்தனர். மன்வேலனின் பின்னால் அவர்கள் மட்டுமே புறப்பட்டாலும் அன்று மாலைக்குள் பத்து பேர் கொண்ட சிறிய குழுவொன்றே சேர்ந்து கொண்டது. இரண்டு நாள் பயணத்திற்குப் பிறகு மன்வேலனுடன் வந்த ஆட்கள் பெள்தங்கடியை அடைந்தனர். அங்கு, பத்தாகயிருந்த அவர்கள் படை நூறாகப் பெருகியது. அப்போது மன்வேலனின் உற்சாகமே உற்சாகம்! சில கூலியாட்களுக்கு இனி தாங்கள் எந்த வழியாகப் போவோம் - என்றுகூடத் தெரியாது. தோட்டத்திற்குப் போவதற்கு மோட்டார்களின் வசதி பெள்தங்கடியிலிருந்து உண்டு. ஆனால் கால்நடையாகவே களசத்தை சேரும் வேறொரு வழியும் உண்டு. சிலருக்கு மோட்டாரில் போகும் ஆசை. சிலருக்கு நடந்தே போகலாமே என்னும் எண்ணம். 'மோட்டாருக்கு குடுக்கிற காச ஈச்சங்கள்ளுக்குக் குடுத்துட்டுப் போவலாமே!' என்னும் வேதாந்தம் சிலருடையது. மன்வேலனின் மனதில் என்ன ஓடிக் கொண்டிருக்கிறது என்று அவர்களில் ஒருவருக்கும் தெரியாது. அவன், அழைத்துவந்த அனைவரையும் ஆற்றங்கரையில் கூட்டி வைத்து யார் யார் வந்திருக்கிறார்கள், என்ன, எப்படி என்னும் விவரங்களை எழுதிக் கொண்டான். அது முடிந்ததும் தலை ஒன்றுக்கு எட்டு அணா வீதம் செலவுக்குக் காசைக் கொடுத்துட்டு, அவசரமாகப் புறப்பட்டுப் போனான். அதனால் ஆட்களெல்லோரும் ஆற்றோரமே இறங்கி உள்வழியாக எளநீரு கணவாயைக் கடந்து பயணத்தைத் தொடர்வது என்று முடிவாயிற்று.

அன்று இரவு, கொண்டு வந்த கட்டுச் சோற்றை உண்டு எல்லோரும் ஆற்றங்கரையில் படுத்துக் கொண்டனர். இரவு

கழிந்தது. காலை எல்லோரும் பயணத்திற்கு தயாராயினர். சேர்ந்திருந்த நூற்றுக்கும் மேற்பட்ட ஆட்களில் 'கார்கள'த்தவர்கள், 'பண்டாள'த்தவர்கள், 'பஞ்ஜ'த்தவர்கள் என்று நான்கைந்து ஊர்களிலிருந்து வந்தவர்களிருந்தனர். அவர்களில் பலர் முதலிலேயே ஒன்றாக வேலை செய்தவர்களாதலால், சேர்ந்து பேசிக் கொண்டே புறப்பட்டனர். சனியனுக்கும் குருவனுக்கும் எல்லாம் புதிய முகங்களே, வழியில் போகப் போக சிலர் நண்பர்களாக வந்து சேர்ந்து கொண்டனர். இந்த புதிய ஆட்களைக் கண்டு பழைய ஆட்களுக்கு ஒரு வகையான கருணையும் வருத்தமும் ஏற்பட்டது. புதியவர்கள் கற்பனையில் சுமந்து வந்த எதிர்காலக் கனவுகள் சிலவற்றை பழையவர்கள் அங்கேயே உடைத்துப்போட முயன்றனர். ஆனாலும் இளைய இதயங்களின் உற்சாகம்! காப்பித் தோட்டம் உலகத்திற்கெல்லாம் இருள் நிறைந்ததாகத் தெரிந்தாலும், தாங்கள் மட்டும் பால் நிலவை அங்கே பார்க்கப் போகிறோம் - என்ற பெரிய ஆசை. எனவே, அவர்கள் தங்கள் நண்பர்களுடன் உற்சாகமாகப் பேசிக் கொண்டே வழிநடந்தனர்.

காலை வெயில் காயத் தொடங்கியது. இரண்டு நாள் பயணத்தினால் சோர்ந்துபோன ஆட்கள் தத்தம் கால்களை இழுத்தவாறு நடக்கத் தொடங்கினர். அவர்களில் பெண்கள், குழந்தைகள் மிகுந்த சிரமத்தோடு அடிவைத்து நடந்தனர். பெண்களின் சோர்வு நீங்கும்வரை ஆண்கள் நிற்க வேண்டும்; குழந்தைகள் வரும்வரை பெண்கள் நிற்க வேண்டும். இப்படி மணிக்கு இரண்டு மைல்களுக்கு மேல் வழி மாளவில்லை. போதாததற்கு அவரவர் குடும்பச் சுமைகளை வேறு தலைமேல் சுமந்து கொண்டிருந்தனர். குழந்தையை இடும் தொட்டிலிலிருந்து மண்ணாலான, குவளை - குடுவை, பாய், கம்பளி, கோழி - கோழிக்குஞ்சு - எல்லாம் செம்மண் படிந்திருந்தன. தலை முடியோ செம்புக் கம்பிகளாகியிருந்தன. எட்டு மைல் காட்டுவழி கடந்ததும் எல்லோரும் 'உஸ்'ஸென்று உட்கார்ந்து

விட்டனர். கட்டிக் கொண்டு வந்த அவலையோ பொரியையோ தின்றனர். தின்றதும் தாகமெடுத்தது. ஆனால், அங்கே தண்ணீரின் தடமே தெரியவில்லை? இன்னும் ஒன்றிரண்டு மைல் தொலைவு நடந்து தம் வழியில் குறுக்காக ஓடிக் கொண்டிருந்த ஓடை ஒன்றின் நீரைக் கடகடவென்று குடித்தனர். கடுமையான தாகமெடுத்தாலும் மாடு - கன்றுகள் கூட அதைக் குடிக்க அஞ்சும். அது ஒன்றும் வினோதமான செய்தியில்லை. அவசரத்திற்கு வேறென்ன செய்வது? அதே நீரில் முகங்களைக் கழுவிக் கொண்டு மீண்டும் நடந்தனர். காலைப் பயணத்தை முடிக்க இன்னும் மூன்று மைல் தொலைவாவது நடக்க வேண்டும்; நடந்தனர். சூரியன் தலைக்குமேல் வரும்போது, 'பங்கட'த்தில் புறப்பட்டவர்கள் கில்லூரு ஆற்றங்கரையைச் சென்றடைந்தனர். பார்ப்பதற்கு ஆறு மிகவும் அழகாக இருந்தது. அடுத்தே ஹிரிமரிகுப்பேயின் மலைத்தொடர்! அதன் மீது மிதக்கும் மேகங்கள். கீழே கற்கள் - மணல் மீது கலகலவென்று சிரிப்பதைப்போல் ஓடிக் கொண்டிருக்கும் ஆறு, கவிகள் எழுந்துபோக மனம் வராத அழகான காட்சிதான். ஆனால், அந்த கூலியாட்களின் வாழ்க்கையில், மேகம், மலை, அழகிய ஆறுகள் எல்லாம் வந்து நிதானமாகக் கவிதை பாடிக் கொண்டிருக்குமா, என்ன?

கூட்டத்தில் ஒருவன் குருவனை அழைத்து ''தோ... பாரு... அந்த ஒசரமான மலமோடு தெரியுதில்ல... அதுக்கு அப்பால தெரியுதே மங்கலா இன்னொரு மல... அதத்தொட்டுத்தான் 'எளநீரு' மடுவு இருக்குது. அதத் தாண்டித்தான் நாம போவணும்'' என்றான். கட்டுமுட்டான ஆள் நம்ம குருவ. இளரத்தம் - கொஞ்சமும் சளைக்காத இளமை. மலையைப் பாய்ந்து தாண்டும் உற்சாகம்...! ஆனால் இரண்டரை நாள் பயணத்தினால் உற்சாகமெல்லாம் கரைந்து போயிருந்தது. மலைமுகட்டின் எழிலைக் கண்டு ''ஆஹா! என்ன அழகு! - எழிற்கொஞ்சும் இயற்கையின் மாடம்'' என்று ஆனந்தக் கூத்தாடுவதற்கு மாறாக ''என்னா? அங்கபோயி அதையும் தாண்டினாத்தான் களசமா!?'' என்று

உற்சாகமிழந்து ஏதோ பேசினான். அதற்குள்ளாக, பின்னடைந்தவர்கள், பெண்கள், குழந்தைகள் எல்லோரும் அங்கே வந்து சேர்ந்தனர். குழந்தைகள் பசியினால் அழுது அரட்டிக் கொண்டிருந்தனர். எத்தனையோ சிறுவர் - சிறுமிகளின் கால்கள் நடந்து நடந்து ஊதிப் போயிருந்தன. ஓடிவந்து, வெய்யிலில் வெந்து போன கால்களை ஆற்று நீரில் அழுத்தி வைக்காமல் அவர்களால் இனி அடியெடுத்து வைக்க முடியாத நிலை.

இப்போது சமையல் ஆகவேண்டும். சமையல் என்ற பெரிய பெயர் அதற்குத் தேவையில்லைதான். கஞ்சி காய்ச்சும் வேலையாக வேண்டும். ஆற்றில் நீர் உள்ளது. சுமந்து வந்த மண்பாண்டங்கள் இருக்கின்றன. மரச்சுள்ளிகளை விறகுக்காகச் சுமந்து கொண்டு வந்த சிலரும் இருந்தனர். மற்றவர்கள் அங்குமிங்குமாக அலைந்து நொடிக்குள்ளாக சுள்ளிகளைத் திரட்டி வந்தனர். மூன்று மூன்று கற்களை வைத்து அங்கங்கே அவரவர் அடுப்பை மூட்டி சட்டிகளில் கஞ்சியைக் காய்ச்சி வடித்தாயிற்று. குருவனும் சனியனும் ஒரு அடுப்பைப் பற்ற வைத்தனர். கொண்டு வந்த கொஞ்ச அரிசியிலேயே இரண்டு மூன்று பிடிகளை எடுத்துப் போட்டு கஞ்சியை வேக வைத்தனர். அங்கேயேயிருந்த இன்னொரு கல்லின் மீது நான்கு உப்புக் கல்லையும் இரண்டு உலர்ந்த மிளகாயையும் வைத்து அரைத்தனர். துவையல் ஆயிற்று! இன்னுமென்ன அரிசி வெந்தவுடன் சாப்பிடுவதுதான்!

அந்த சாப்பாடும் முடிந்தது. எல்லோரும் அளவுக்கு மீறி சோர்ந்து போயிருந்த காரணத்தால், அடுத்து நடக்க வேண்டியதைப் பற்றி எண்ணமேயில்லாமல் படுத்து விட்டனர். கண்ணை மூடுவதற்குள்ளாக உறக்கமும் வந்துவிட்டது. சிலர் வெயிலிலேயே படுத்திருந்தனர்; சிலர் நடுவழியில்; சிலர் நிழலில் படுத்து எழும்போது வெயிலில் எழுந்தனர். அவர்களுக்கு வெயிலென்ன? நிழலென்ன?

மாலைச் சூரியன் மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்னாலிருந்து எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான். இப்போது உண்மையிலேயே மேற்குக் கணவாயின் மேற்கில் சூரியன் மாலையின் விளையாட்டை ஆடிக் கொண்டிருந்தான். மேகங்கள் அவனை அவ்வப்போது மறைத்துக் கொண்டிருந்தன. வெயிலின் தாக்கம் இன்னும் குறைந்தபாடில்லை. படுத்து உறங்கிப்போனவர்களில் சிலர் விழித்தெழுந்தனர். பொழுது சாயும் வேளையாயிற்றென்று அறிந்து பயத்தினால் மற்றவர்களை எழுப்பத் தொடங்கினர். சிலர் சட்டென்று எழுந்தனர். சிலர் கண்ணைக் கசக்கிக் கொண்டு திரும்பிப் படுத்துக் கொண்டனர். முதலில் எழுந்தவர்களில் குருவனும் சனியனும் இருந்தனர். அவர்களின் அருகிலேயே 'கார்கள' ஊரைச் சேர்ந்த ஒரு வயதான புலையனிருந்தான். விழிப்பு வந்தவுடனே அவனுக்கு தன் நிலையைக் கண்டு ஆச்சரியமாகி, ''ஆங்...!'' என்றான். இவர்களுக்கு அது எதற்காக என்று தெரியவில்லை. ''என்னா?'' என்று கேட்டனர். அவன் எதுவும் பேசாமல் அவர்களிருவரின் கைகளையும் பிடித்து, நான்கு அடி முன்னால் நடந்தான். சற்று தொலைவிலேயே இருந்தது கள்ளுக்கடை! தான் இவ்வளவு நேரம் குடிக்காமல் படுத்திருந்து விட்டோமே! என்று அந்த கிழவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. குருவ, சனிய இருவருக்கும் கடையின் முன்னால் நிற்பதற்குத் துணிவு வரவில்லை. ஊரிலிருக்கும்போது அவர்கள் அங்கே இங்கே திருடி, மறைவாகக் குடிக்காமலில்லை; வீட்டை விட்டுப் புறப்படும்போது தகப்பன் சொன்னது இன்னமும் மறந்து போகாமலிருந்ததால் - என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போதே சிரட்டை, மண் குவளைகள் அவர்களின் எதிரில் வந்தன. கிழவன் அவர்களை உட்கார வைத்து புட்டியை வெளியே எடுத்தே விட்டான். இவர்களின் குழப்பம் மறுவிநாடியே மறைந்து போயிற்று. குடித்து எழும்போது நான்கணா பணம் ஒவ்வொருவர் பங்கிற்கும் தண்டமாக விழுந்தது. குடித்தது அதிகமா, கடைக்காரனின் கணக்கு அதிகமா யாருக்குத்

தெரியும்? இவர்கள் எழுவதற்குள் இவர்களின் கூட்டத்தில் இன்னும் பலர் வந்து சேர்ந்து கொண்டனர். முடிந்தவர்கள் சிறிய பிள்ளைகளையும் கூட அழைத்து வந்து அவர்களுக்கும் கொஞ்சம் குடிக்கக் கொடுத்தனர். மாலைச் சூரியன் மறைந்து போனான். அடுத்த பயணத்தைப் பற்றி எண்ணம் எழுந்தது.

இனி காபித் தோட்டத்தை அடையும் வரையிலும் சாப்பிட எதுவும் கிடைக்காது என்பதால், இரண்டொரு நாளைக்கு வேண்டிய அளவுக்கு வயிற்றுப் பாட்டிற்கானப் பொருட்களை வாங்க ஏற்பாடு செய்து கொண்டனர். கள்ளுக்கடையின் பக்கத்திலேயே ஒரு மாப்பிளா கடையும் இருந்தது. அதில் அவல், அரிசி முதலானவைகளுமிருந்தன. அவல் என்பது கொஞ்சமும் உருவ வேறுபாடு இல்லாமல் நெல்லிலிருந்து வெளியே வந்த அரிசியாகவே இருந்தது. அதைக் கொண்டு வந்து எத்தனை மாதங்களாயிற்றோ! அதையும் விலைக்கு வாங்கிக் கொண்டனர். ஊரெல்லாம் படிக்கு ஒன்றரையணா விலையென்றால் அந்தக் கடையில் மட்டும் மூன்றணா விலை. அதுவும் அளந்து போடும்போது படிக்கு முக்கால்படி மட்டும்தான் வரும். வாங்கினர், வாங்கியே தீரவேண்டுமே; வாங்கிக் கொண்டனர். எவ்வளவு என்று அளவில்லை. மன்வேல் கொடுத்த கைக்காசில் மீதியிருப்பதெல்லாம் கள்ளுக்கு, இல்லையென்றால் வயிற்றுக்குத் தானே?

இன்னும் ரெண்டு நாழிக்குள்ள நெலா வந்துடும். பொறப்புட்டு நடந்தா கணவாய் தொடக்கத்துக்குப் போயிடலாம்' என்று முடிவாயிற்று. கணவாய் நுழை முகத்திற்கு அங்கிருந்து இன்னும் நான்கைந்து மைல் தொலைவு இருந்தது. இரவானதால் வெயிலின் கொடுமையில்லை; மெதுவாகப் போனாலே போதும். குடித்த போதை இறங்காமல், ''தோட்டத்துக்குப் போனாலும் போவலாம். நம்ம ஊருக்கே போனாலும் போவலாம்!'' என்னும் வீரர்களும் இருந்தனர். குருவனும்

சனியனும் அடுத்தப் பயணத்திற்குத் தயாராக, புட்டியைப் பிடித்த கிழவனுடன் பேசியபடி நின்றிருந்தனர். கிழவன் சொர்க்கத்தில் மிதந்து கொண்டிருந்தான். ''தோட்டம் - கங்காணி மேஸ்த்திரி எசமான் தொரை - எல்லாம் நான்தான்; கூலி எவ்வளவு வேணுமுன்னாலும் குடுப்பேன். ஆனா வேலமட்டும் சரியா செய்யணும்; செய்யலேன்னா நாலு நாலு புட்டிக் கள்ளு அவராதம்'' என்று அபரிமிதமான யோசனைகளில் மூழ்கிப் போயிருந்தான். அப்போது அவர்கள் தங்கியிருந்த இடத்தின் ஒரு மூலையிலிருந்து வயதான ஒரு பெண்மணி கதறுவது கேட்டது. சிலர் ஓடிப்போய்ப் பார்த்தனர். குருவனும் சனியனும் கூட ஓடிப் போய் பார்க்க முயன்றனர். அதற்குள் அந்தக் கிழவன், ''அழுவறா, வேற வேலயில்ல அவளுக்கு'' என்றான். அழுதுக் கொண்டிருந்தவள் அவனது புலைச்சிதான். ஆனால், காரணமில்லாமல் அழவில்லை. அவளருகில் படுத்திருந்த எட்டு வயது சிறுமி எழவேயில்லை. என்ன செய்தும் எழவேயில்லை. அந்தக் கிழவனை மற்றவர்கள் அங்கு நடத்திச் சென்றனர்; என்றாலும் சிறுமி எழவேயில்லை. எழுகின்ற மாதிரியும் இருக்கவில்லை. கிழவனுக்கு போதை இறங்கியபோது அவனுடைய புலைச்சிக் கிழவி தலையைத் தலையை அடித்துக் கொண்டு கதறிக் கொண்டிருந்தாள். அவர்களுக்கிருந்த ஒரே பந்தம் அந்தச் சிறுமிதான். அது அந்தப் புலைச்சியின் மகள் இல்லை; அவளது இறந்துபோன மகளின் மகள் - பேத்தி; இறந்து கிடக்கிறது! நான்கு நாட்களாகவே காய்ச்சலிருந்ததாம். காய்ச்சலிலேயே பயணம் மேற்கொண்டனர். சிறுமியை நடக்க வைத்தே அழைத்து வந்தனர். ஊரிலேயே இருந்தால் பிழைப்பிற்கு எந்த வழியும் இல்லை. சிறுமியை விட்டுவிட்டு வருவதற்கும் வேறு துணையில்லை. காய்ச்சல் வருவது மிகவும் ஆபத்தான நிலைமை என்றும் அவர்களுக்குத் தெரியாது. என்னமோ உடம்பு சுடுகிறது என்று சாதாரணமாக எண்ணுபவர்கள் அவர்கள். இப்போது அந்த உடல் மிகவும் குளிர்ந்து போயிருந்தது. கிழவன் தேம்பித் தேம்பி அழத்

தொடங்கினான். மற்றவர்கள் சுற்றி நின்று அனுதாபம் தெரிவித்தனர். புலைச்சி, எப்போதோ இறந்துபோன தன் மகளை நினைத்துக் கொண்டு பேத்தியின் உடம்பை கண்ணீரினால் குளிப்பாட்டினாள். பேத்தி இறந்தது, ஊரில் அவர்களின் குடிசையின் முன்னாலிருக்கும் பஞ்சுர்லிபூதத்தின் சேட்டைதான் என்று எண்ணிக் கொண்டனர். காய்ச்சலினால்தான் குழந்தை இறந்தது என்று அவர்கள் எப்போதும் நம்புகிறவர்களில்லை. காய்ச்சல் இருக்கும்போது அவர்கள் உழைப்பதில்லையா? 'வெறும் சூடேறி சாவு வர அது என்ன கட்டையை எரிக்கும் நெருப்பா?'

அழுதாயிற்று. பஞ்சுர்லி பூதத்திற்கு வேண்டிக் கொண்டும் ஆயிற்று. மன்னிப்பு கேட்டாயிற்று. ஆனால், சிறுமியின் பாட்டி மட்டும் அவ்வளவு விரைவில் ஆறுதல் அடையும் நிலையில் இல்லை. அதற்காக அதுவரை பிணத்தை அப்படியே வைத்திருக்க முடியுமா? சிறுமியின் உடலை கிழவியின் கையிலிருந்து பிடுங்கி, சற்று தூரத்தில் மண்ணுக்குள் புதைத்துவிட்டு வந்தனர். நடுஇரவில் பயணம் துவங்கியது. நிலவு, இந்த ஏழைகளின் அவலத்தைக் கண்டும், நகைத்தபடியே நகர்ந்தது.

சனிய, குருவர்களின் எஞ்சியிருந்த ஆர்வமும் கரைந்து காணாமல் போவதற்கு இந்த ஒரு நிகழ்ச்சியே போதுமாயிருந்தது. அவர்களின் எதிர்காலத்திற்கும் சிறுமியின் சாவுக்கும் தொடர்பே இல்லைதான். வாழ்க்கை அவலத்தின் ஒரு பயங்கரக் காட்சி இப்போது அவர்களின் கண்ணெதிரில் நின்றது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு அவர்களின் தாய் இறந்து போனாள். இப்போது அதை ஓரளவிற்கு அவர்கள் மறந்தும் போயிருந்தனர். இந்தச் சிறுமியின் சாவு அதைவிட துயரமானது என்று தோன்றிற்று. இரண்டு நாள் பயணத்தில் மற்றவர்களும் தம்முடைய உறவினரே என்ற உணர்வு ஏற்பட்டிருந்தது. அந்த புதிய உறவுகளுடனான பயணத்தில், வந்துபோன இந்த நிகழ்ச்சி அவர்களை ஆழமாக பாதித்தது.

தோட்டத்துப் பயணத்தை இதற்கு மேலும் வர்ணிப்பது எப்படி? மலையிலும் சம வெளியிலும், வெயிலிலும் மழையிலும் அந்த கடினமான நீண்ட பயணத்தின் கதை எப்போதாவது மாறிவிடுமா என்ன? வெளிப்பார்வைக்கு சற்று மாறியதாகத் தோன்றலாம். அடித்தளத்திலிருக்கும் வேதனை மட்டும் ஒரே மாதிரியாகத்தான் இருந்து வருகின்றது. அதனால் மிகவும் சுலபமாக, மன்வேலனின் வாயிலிருந்து வரக்கூடிய வகையில் அதை வர்ணித்து முடிக்கலாம்!

''தொரைங்களே! கூலியாளுங்க 'பெள்தங்கடி'க்கு வெளியிலே முந்தா நாளே சேர்ந்திருந்தாங்க. தாலைக்கு எட்டணான்னு செலவுக்கு குடுத்திருந்தேன். வழியெல்லாம் குடிச்சி, தின்னு இன்னிக்கி காலையில வந்து சேந்திருக்காங்க. மனசு வச்சிருந்தா நேத்து சாயங்காலமே இங்க வந்து சேர்ந்திருக்கலாம்'' இடையிடையில் குடித்து, ஆடி மகிழ்ந்திருந்த தோட்டத்துச் சொந்தக்காரர்களிடம், ஒப்புக்காகவும்கூட சிறுமியின் சாவு எந்த முக்கியத்துவத்தையும் பெறவில்லை. ''என்னமோ, அந்த 'கார்கள'த்து கெழவன் ஃபொம்மனிருக்கானே, அவன் பேத்தி, குச்சி மாதிரி இருந்துதே! அந்த பொண்ணு, வர்ற வழியல காய்ச்சல்ல செத்துப் போயிடிச்சாம். அது இவ்ளோ நாளு பொழச்சிருந்ததே பெரிசு!'' என்று மன்வேல் தனக்குத்தானே என்பதைப் போலச் சொல்லிக் கொண்டான். ஒன்றிரண்டு வார்த்தைகளில் அதையும் வர்ணித்தாயிற்று.

## 6

பிள்ளைகளின் பிரிவைத் தாங்கிக் கொள்ள சோம இரண்டேயிரண்டு நாட்களில் பழகிவிட்டான். அவர்கள் கண்ணிலிருந்து மறைந்தாலும் 'இன்னும் என்னா, இன்னிக்கி இல்லேன்னா நாளைக்கி வேற போறவங்கதானே! கடவுளு அவங்கள காப்பாத்துனா

போதும்' என்று எண்ணிக் கொண்டான். ஒன்றுக்கு இரண்டாக வட்டியைச் சேர்த்து கணக்கை மாற்றிக் காட்டிய மன்வேலனைக் குறித்தும்கூட இப்போது அவன் மனம் ஆத்திரம் கொள்வதில்லை. அவனது உடலில் காய்ச்சல் இறங்காமல் அவன் இன்னமும் படுத்தபடியே இருந்தாலும், அவனுக்கு அது ஒன்றும் கவலைப்படும் சங்கதியாகவேத் தோன்றவில்லை. அதிகமாக எதற்கு! வீட்டில் பாடுபடும் இரண்டு உயிர்கள் வீட்டை விட்டுப் போய், வந்து கொண்டிருந்த வருவாய் குறைந்துபோன வருத்தமும் அவனுக்கு இல்லை... அவனது சிந்தனையில் இருப்பதெல்லாம் ஒன்றேதான் - தான் இனி என்றாவது விவசாயியாக முடியுமா? - என்பதுதான். எத்தனையோ ஆண்டுகளாக வளர்த்து வந்த கனவு அது. அதற்கு வலுவூட்டுவதைப் போல, காட்டில் இரண்டு கன்றுகள் கிடைத்தது; அவை இந்த மூன்றாண்டு காலத்தில், காட்டில் புலிகளுக்கு இறையாகாமல் நன்றாக வளர்ந்து, அவனது ஆசையை கிளறிவிட்டுக் கொண்டிருப்பது; 'இன்றைக்கோ நாளைக்கோ, என்றாவது ஒருநாள் தானொரு விவசாயியாவேன்' என்னும் கனவு மயக்கத்தில், நம்பிக்கை தந்த மகிழ்ச்சியில் அவனை உறுதியாக இருக்கச் செய்தது - எல்லாவற்றினுடைய எதிர்காலம் தான் என்ன?

ஒவ்வொரு நொடியும் முறைத்து நிற்கும் ஏர்க்கலப்பையின் உருவமே அவன் முன்பு தோன்றிக் கொண்டிருக்கும். சில நேரங்களில் - 'நானு எனுக்காக கலப்பைய புடிக்கக் கூடாதுன்னா, இன்னொருத்தருக்காக மட்டும் எதுக்குப் புடிக்கணும்?' என்று யோசிப்பான். ஆனால், 'சொந்த விவசாயியாகும் யோகம் தனக்கில்லா விட்டால், தனக்குச் சொந்தமில்லாத இன்னொருவரின் நிலத்து சேற்றில் உழன்றால் தான், தான் வாழ முடியும் என்ற நிலை ஏன்' என்று மட்டும் அவனுக்குப் புரியவில்லை. இத்தகைய சிந்தனைகளின் போராட்டமே எப்போதும் அவன் மூளைக்குள் நடந்து கொண்டிருக்கும். இதுவரையில் 'எசமான்' என்றவுடன் தாழ்ந்து வணங்கிய அவன் மனம்,

பணிவு - பணிவு என்ன? அடிமைப் புத்தி - இப்போது நிமிர்ந்து நிற்கப் போராடியது.

''எனக்கு யாரு எசமான்? என் ஆசைய நிறவேத்தாத எசமான் சங்காத்தமே எனக்கெதுக்கு?' என்கிறான். 'இனிமேல அந்த சர்க்காரு அதிகாரி ஒரு நாளு சொல்லிட்டுப்போன மாதிரியே, சொதந்தரமா ஊரு பொட்டல் தெடல்ல ஒரு குடிசய கட்டி, நேரா நானே சர்க்காருக்கு தீர்வய கட்டினு வந்தா என்னா?' என்று வாதம் செய்கிறான். 'அப்போ சாப்பாட்டக்கு என்ன பண்றது? எசமான் ஊட்டுக் கூலி வராமப் போயிடுமே? கஞ்சிக்கு என்னா பண்றது? - அப்படின்னா? காட்டுல காட்டுக் கொடி பொதரு இருக்குது; அங்கங்க கட்டைங்க உளுந்து கெடக்குதுங்க; ஊர சுத்தி தாளாம்பூ வனமே இருக்குது. விளுதுக்கொடிங்களையாவது தாளம்பூ ஒலையயாவது கொண்டார்றது; கிளிச்சி, பாயோ, கூடையோ மொடையறது; வித்துப் பொளைக்கிறது, எனுக்கு நானே ராசா!'

மிகவும் சுகமான கனவு! தனிக்காட்டு ராசாவாகும் கற்பனையின் உற்சாகத்தில் இன்று காலையிலேயே சோம உடுக்கையை பிடித்திருந்தான். வாசிக்க வேண்டிய கைகள் பலவீனத்தால் நடுங்கிக் கொண்டிருந்தாலும் மிகுந்த ஆவேசத்துடன் அடித்துக் கொண்டிருந்தான். குடிசையில் யாரும் இல்லை. பெள்ளி தன் தம்பிகளை அழைத்துக் கொண்டு கருக்கலிலேயே தீவனச்சுமை கொண்டுவரப் போயிருந்தாள். நாள்தோறும் பண்ணையார் வீட்டு பசுக்களுக்காகக் கொண்டு வந்து போடும் புல், இலைதழை தீவனங்களை கொண்டு வராவிட்டால், கை வாய்வரை போகும் வாய்ப்பு இருக்குமா? யாரும் இல்லாத குடிசையில், சோமனின் உற்சாகத்தைத் தடுப்பவர்கள் யார்? 'டமடம்ம, டமடக்க' என்று அவன் ஒரே அளவாக உடுக்கையை வாசித்துக் கொண்டிருந்தான். வெளியிலிருந்து யாரோ மூன்று நான்கு முறை ''சோம... சோம...'' என்று

அழைத்தும் அவன் அதை உணரவேயில்லை. கடைசியில் வெளியிலிருந்து மிகுந்த கோபமான குரலில் ''ஏ... செத்தவனே! செவிடா! உன் காது என்ன அடைஞ்சா போயிருக்குது?'' என்று உரக்கக் கத்தினதும், அது மட்டும் சோமனின் காதை எட்டியது. உடுக்கையை அடிக்கும் கோல் நழுவி விழுந்தது. திடீரென்று அவனது உற்சாகம் மறைந்து போய் நெஞ்சு 'திக்'கென்றது. வெளியிலிருந்து கூப்பிடுவது அவனுடைய எசமான். சங்கப்பய்யாவே குடிசையிலிருந்து சற்றுத் தொலைவில் நின்று கூப்பிட்டுக் கொண்டிருந்தார். பெள்ளி தகப்பனுக்குக் காய்ச்சல் என்று சொல்லிவிட்டு வந்திருந்தாள். அது, தாம் குத்தகைக்கு நிலம் கொடுக்க மறுத்ததால்தான் என்று அவருக்கு சந்தேகம் வந்திருந்தது. இப்போது உடுக்கையின் ஆர்பாட்டம் அவரது சந்தேகத்தை உறுதியாக்கிற்று. அவன் குடிசையிலிருந்து வெளியே முகத்தை நீட்டுவதற்குள்ளாகவே, ''காச்சலடிக்கிறவன் கை இவ்வளவு ஜோரா வாசிக்குமாடா?'' என்றார். அந்த ஒரேயொரு கேள்வி இடி விழுந்தாற்போல் தாக்கியது. சோமனின் புரட்சிக் கொந்தளிப்பு பண்ணையாரின் அந்தக் குரலைக் கேட்டவுடன் ஓசையில்லாமல் அடங்கிப் போயிற்று.

''என்ன, உங்க தரிசனம் வீட்டுப் பக்கமா காணவேயில்லை? பையனுங்க காபித் தோட்டத்துக்குப் போயிட்டாங்களாமே! வீட்டு முன்னால, அங்க இங்கன்னு சின்ன சின்ன வேலைங்களா ஏராளமா கெடக்குது. அதையெல்லாம் யாரு செய்வாங்க? இனிமே மழ எப்போ வரும்னு நிச்சயமில்ல... பெரியவங்க, மழகாலத்துலதான் வீட்டு வேலைக்கு வருவீங்களா? இல்ல... உடுக்கய வாசிச்சிண்டு இந்த பங்களாவிலேயே காலத்தைக் கழிக்கப் போறீங்களா?''

உடுக்கையின் ஓசை சங்கப்பய்யாவை குடிசைக்கே வரவழைத்தது. அவரை எதிர்த்து நிற்க சோமனால் முடியுமா? அவன் குனிந்து வணங்கி, ''கோவிச்சிக்காதிங்க

எசமான். ரெண்டு நாளா ஊட்லயே படுத்துக் கெடந்தது என்னுமோ மாதிரி இருந்தது. புள்ளைங்க தோட்டத்துக்கு போயிட்ட கவலவேற. ஏதோ நெம்மதிக்காக உடுக்கைய தொட்டேன்.''

''இல்ல... காலையிலேயே பிருமபூசாரி கச்சேரிக்குப் போயிருந்தியா?''

''எப்பிடி போறது எசமான்? கையில சல்லிக்காசில்லாம?''

''உனக்கென்னடா கொறவு? நாலு கூடைங்கள மொடைஞ்சியானா உன் கள்ளுக்கு ஏற்பாடு இருந்த எடத்துலயே ஆயிடுமே!''

இதுவரையிலும் ''கூடை, பாய்'' என்றாலே பெருமையடையும் மனசுக்கு சூடு போட்ட மாதிரியாயிற்று. நல்லகாலம் அவர் அதிகமாகப் பேசாமல், ''ஊம்... சும்மா ஊட்டுக்குள்ளவே களவாணி மாதிரி விழுந்து கெடக்காதே. வயலுக்கு வேலி கட்டணும்; வீட்டு அங்கணகுழிக்கு மூடி போடணும். அதுவுமில்லாம கொண்டு வந்து போட்ட மூங்கில் கட்டுங்க வெய்யில்ல ஒணந்துகிட்டிருக்கு. அதுக்கு ஏதாவது ஒரு வழி பண்ணணும்...'' என்று மழை வருவதற்குள்ளாக ஆகவேண்டிய வேலைகளின் பட்டியலையே சொல்லி முடித்து புறப்பட்டுப் போனார். சோம, நாளையிலிருந்து வேலைக்கு வருவதாகக் கூறி அவரை சமாதானப் படுத்தியிருந்தான்.

சங்கப்பய்யாவுக்குக் கோபம் வந்தாலும் ஒரே நொடியில் போய்விடும். அதுவுமில்லாமல் சோமனின் குணம் அவருக்குத் தெரியாததல்ல. அவரது தந்தை இருக்கும் போதும், இந்தச் சோமனென்றால் அவருக்கும் மிகவும் பெருமைதான். அதனால் அவன் நாளை வருவதாகச் சொன்னவுடன் கேட்டுக் கொண்டு பொறுமையாகப் புறப்பட்டுப் போனார்.

மறுநாள் சோம இடுப்பில் கத்தியைச் சொருகிக் கொண்டு, தலைக்கு பாக்குமட்டைக் குல்லாய் வைத்து பொழுது புலர்வதற்கு முன்பே எசமான் வீட்டுக்குப் போனான். எசமான், வீட்டு வாசலில் நின்றிருந்தார். அவனைப் பார்த்து சிரித்துவிட்டு ஒரு துண்டு புகையிலையை எறிந்து, ''எந்த வேலைய எடுத்துக்கிற சோம? வேற யாரும் வரலே... மூங்கில் போட்டு வைக்க பரண தயார் பண்ணு'' என்றார். சோம மலர்ந்த முகத்தோடு அந்த வேலையை முடிக்க புறப்பட்டுப் போனான்.

எட்டு நாட்கள் நகர்ந்தன. அவனது எசமானும் முன்போலவே இருந்தார். மழை காலத்துக்கு முந்தைய வேலைகள் முக்கால் பகுதி முடிந்தன. சோமனுக்கு எசமானின் முகத்தைப் பார்த்ததும் மறுபடியும் ஆசை முளைத்தது. 'அதிகமா வேணாம்... ஒரு பத்துபடி வெத வெதைக்கிற அளவு நெலமாவது கேக்கலாம்' என்னும் ஆசை மறுபடியும் துளிர்த்தது. ஏதோ ஒரு சாக்கு போக்கு வைத்துக் கொண்டு வாசலில் காத்திருந்து, தன் ஆசையை இரண்டாவது முறையாக வாய்விட்டுக் கூறினான். சங்கப்பய்யாவுக்கு அவன் முகத்தைப் பார்த்து இரக்கம் ஏற்பட்டது. திமிர் பிடித்தோ பெருமையடித்துக் கொள்ளவோ சோம அப்படிக் கேட்கவில்லை என்று அவருக்குத் தெரியும். 'அதுவும் பெரிய பையன்களிருவரும் தோட்டத்திற்குப் போய் விட்டதால் வருவாய் நின்று போய் விட்டது. இதாவது கிடைத்தால் நான்கு படி நெல்லாவது கைக்கு வருமே என்ற ஆசைதான்' என்று எண்ணிக் கொண்டார். இருந்தாலும் அவன் கோரிக்கைக்கு நேரடியாக 'ஆகட்டும்' என்று ஒப்புதல் கொடுப்பதைத் தவிர்த்து, ''சோம எதுக்கு அவசரப்படறே? ரெண்டொரு நாள்ல அம்மாவ கேட்டுச் சொல்றேன்'' என்றார். 'அவசரம்னா, மழை காலத்துக்கு இன்னும் ஒரு வாரமோ பத்து நாளோதான்.' இருந்தாலும் சோம, எசமானின் பேச்சை நம்பி நிறைந்த மனதுடன் வீட்டுக்குப் போனான்.

பெள்ளியிடம் தன் யோகத்தைப் பற்றி பெருமையடித்துக் கொண்டான். இரவெல்லாம் இரண்டு சிறிய பிள்ளைகளையும் ஆடவைத்து உடுக்கையை வாசித்தான்.

சங்கப்பய்யாவுக்கு என்னமோ, தம்முடைய கரம்பாகக் கிடக்கும் ஏராளமான நிலத்தில் ஒரு சிறிய துண்டு நிலத்தை சோமனுக்குத் தர எந்த ஆட்சேபணையும் இல்லைதான். ஒவ்வொரு ஆண்டும் குத்தகையைக் கொடுக்காமல் விழுங்கிவிடும் எவனெவனுக்கோ கொடுப்பதை ஏன் சோமனுக்கே கொடுக்கக் கூடாது என்ற எண்ணம் உண்டுதான். ஆனால், தாயின் ஒப்புதலைப் பெறுவது மிகவும் கடினமாயிற்றே! பழைய சம்பிரதாயத்தில் ஊறிய கிழவி அது. புலையர்கள் சொந்தமாக விவசாயம் செய்வது என்னும் புதிய யோசனை அவள் மனது ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்று. சுற்றுமுற்றிலும் மேல் சாதியினரின், ஏன் சாதாரண கிராமத்து மக்களின் யாருடைய மனதுக்கும் ஒப்பாத சங்கதி அது. ''அவங்க வெவசாயம் பண்ணி சொதந்தரமா இருக்க ஆரம்பிச்சா, நாளைக்கு நாமே இல்ல கலப்பைய புடிக்க வேண்டியிருக்கும்'' என்று நினைக்கும் மக்கள். இவ்வளவிருந்தாலும் சங்கப்பய்யா, ஏழை சோமனுக்காக தாயிடம் மெதுவாக பேசிப் பார்த்தார். மிகவும் வேண்டிக் கொண்டார். தாயின் பதில் மட்டும் ஒன்றே - ''வேற யாராவது அப்படி செய்திருக்காங்களா? செய்திருந்தா நீயும் நெலம் குடு. மொதமொதல்ல நீ பொலையன்களுக்கு நெலம் குடுக்கிறது வேண்டாம். நாளைக்கு உனக்குத்தான் கெட்டபேர் வரும்'' என்றாள். சங்கப்பய்யா அதன் விளைவுகளை எண்ணிப் பார்த்தார். சோமனை குத்தகைக் குடியானவனாகச் செய்வதினால் தனக்கு கெட்ட பெயர்தான் வரும் என்று முடிவு செய்து கொண்டார். வேறு வழியில்லாமல் இரண்டு நாள் வரை பேசாமலிருந்துவிட்டு பிறகு நிலைமையை அவனுக்கு விளக்கினார். விவரமாக எல்லாவற்றையும் அவனுக்கு எடுத்துக் கூறினார். சோமனின் கண்களில் கண்ணீர் தளும்பியதைக் கண்டு வேதனை அடைந்தார். ''சோம... நம்ம படுக்கை இருக்கிற நீளத்துக்குத்தான் நாம காலை

நீட்டணும - நம்ம தலையில எழுதாததுக்காக அழுது என்ன ஆகப்போகுது!'' என்றார். அவரது இந்தப் பேச்சு சோமனின் மனதுக்கு அப்போது எப்படித் தோன்றியதோ யாருக்குத் தெரியும்?

இப்போது அவன் மனது கொதித்துக் கொண்டிருந்தது...! தவறாமல் வேலைக்கு வந்து போய்க் கொண்டிருந்தான். பார்வைக்கு எப்போதும் சங்கப்பய்யாவின் எதிரில் சிரித்துக் கொண்டிருப்பவனைப் போலவே இருந்தான். ஆனால், உள்ளுக்குள் வெறுப்பு ஆத்திரம் கனன்று கொண்டிருந்தது. கிராமத்து எல்லா விவசாயிகள் மீதும் அவனுக்கு ஆத்திரம் வந்தது. அது ஒரே காரணத்தினால்தான்; தன்னை மட்டும் வாழ்நாளெல்லாம் கூலியாளாகவே வைத்துவிட்டு அவர்களெல்லோரும் விவசாயிகளாக இருப்பதனால். 'சொந்த விவசாயத்தினால் மற்றவர்களுக்கு என்ன சுவர்கமா கிடைக்கிறது?' என்பதற்கு அவனிடம் பதிலில்லை. ஆனால், 'அது சொர்கமோ, நரகமோ... எனுக்கும் ஏன் அது கெடைக்கக் கூடாது?' - என்பதுதான் அவனது வாதம்.

இது நடந்து இரண்டு நாட்களுக்குப் பிறகு, அவனுடைய எசமானனுக்காக கூலியில்லா வேலையாக பக்கத்துக் கிராமத்துக்குப் போயிருந்தான். இவன் போன வீடு ஒரு கிருத்துவனுடையது. அவனும் ஒரு குத்தகைக்கார குடியானவன்தான். அவனிடம் ''உங்க ஊர்ல குத்தகெக்கி நெலம் கெடைக்குமா?'' என்று விசாரித்தான். அவன் ''எங்க மாதாகோவில் சொத்துக்கு நெறய நெலம் குத்தகைக்கு கொடுக்காம அப்படியே இருக்கு. எங்க சாமியார கேட்டா கட்டாயம் கொடுப்பாங்க'' - என்று இவனுக்கு நம்பிக்கையூட்டினான். அன்று பாதிரியாரைப் பார்த்துவிட்டுப் போக நேரமில்லாமல் போனதால்,

எசமானின் வேலையை மட்டும் முடித்துக் கொண்டு அவன் குடிசைக்குத் திரும்பினான்.

மறுநாள் சங்கப்பய்யாவிடம் காய்ச்சலில் படுத்துக் கிடக்கும் தம் உறவினன் ஒருவனைப் பார்த்துவிட்டு வரவேண்டுமென்று அனுமதி பெற்று அடுத்த கிராமத்துக் கிருத்துவக் குடியானவன் வீட்டுக்குப் போனான். அவனும் சோமனை அழைத்துக் கொண்டு தம்முடைய பாதிரியாரிடம் போனான். சோமனின் மனதில் கற்பனைகள் பெருக்கெடுத்தன. கனவுகளாக மலர்ந்தன. ஊரிலுள்ள இந்துக்களைப் போல பாதிரியும் தன்னை கைவிட்டுவிட மாட்டார் என்பது அவனது நம்பிக்கை. அவர் தன் ஆட்களைத் தயங்காமல் தொட்டு பேசுகின்றாரே! பாதிரியாரின் மாதா கோயிலுக்கு இருவரும் சென்று அங்கே அவருக்காகக் காத்து உட்கார்ந்திருந்தனர். பாதிரியாரைச் சந்திக்க நீண்ட நேரமாகிவிட்டது. அவருக்கு எல்லா செய்தியும் தெரிந்தவுடன் மிகுந்த உற்சாகத்துடன் வெளியே வந்து, ''என்ன, சோமன்றதுதான் நீ தானா...? சோம..., குத்தகைக்குக் கொடுக்கிறதுக்கு நெலம் நெறைய இருக்கு; சாதாரண நெலம் இல்ல... நல்லா விளையற பூமியே இருக்கு. உங்க கிராமத்துக்கு ரொம்ப பக்கத்திலேயே இருக்கு. ஆனா, அதெல்லாம் மாதா கோயிலோட நிலங்க. எங்க ஆளுங்களைத் தவிர மத்தவங்களுக்குக் குத்தகைக்குக் கொடுக்கக் கூடாதுன்னு இருக்கு'' என்று இடைவெளிவிட்டு, ''அதனால... சோம... நீ வீணா மத்தவங்களுக்காக கூலி வேலை செய்துகிட்டிருக்கிறதுக்குப் பதிலா கிருஸ்துவனாயிட்டு சுதந்திரமா இருக்கலாமே...!'' என்றார்.

சோம பதிலேதும் பேசவில்லை. கோபத்தினால் கொதித்துப் போய், அங்கிருந்துப் புறப்பட்டு நேராக தன்

குடிசைக்கு வந்து, படுத்துக் கொண்டான். பெள்ளிக்கும் அன்று மாலைவரை எதையும் சொல்லவில்லை. மாலையில் உடுக்கையை எடுத்து வாசித்துத் தன் மனதிலிருந்த துக்கத்தையெல்லாம் களைய முயன்றான்.

## 7

மழைக்காலம் ஆரம்பமாயிற்று. கருணையேயில்லாமல் மழை இடைவிடாமல் பெய்து கொண்டேயிருந்தது. மழையிலேயே பெள்ளியும் அவன் தம்பிகளும் தீவனம் அறுத்துவர காட்டுக்குப் போய்வர வேண்டும். மழைக்காலத்தில் அவர்கள் தொலைவாக போக வேண்டியதில்லை; வீட்டைச் சுற்றி எங்கு கை வைத்தாலும் புல்லும் புதரும்தான். மற்றொரு பக்கம் நிலங்களில் தண்ணீர்த் தேங்கத் தொடங்கியுள்ளது. அந்த நிலங்களை உழுது வயல்களில் நாற்று நட ஏற்பாடுகளாக வேண்டும். எங்கு பார்த்தாலும் கூலியாட்களின் பரபரப்பு. ஏனென்றால், எல்லாருடைய விவசாய வேலைகளும் ஒரே நேரத்தில் நடந்தேறியாக வேண்டும். இவ்வளவு நாட்கள் வெயில் காய்ந்து திடீரென மழை பெய்யத் தொடங்கியதால், பெரும்பாலும் எல்லாருடைய வீட்டிலும் சளி, குளிர், காய்ச்சல் என்று நோயால் ஆட்கள் படுத்துவிட்டனர். நல்ல காலமோ கெட்டகாலமோ சோமனின் வீட்டில் மட்டும் நோய் என்று யாரும் இப்போது படுக்கவில்லை. எப்போதுமே படுத்துக் கிடக்கும் நீல - காளன்களும் கூட சுறுசுறுப்பாக நடமாடிக் கொண்டிருந்தனர். பெள்ளியின் நிலையோ சொல்லி மாளாது. புல் அறுத்து வருவது; சமையல் செய்வது, எசமான் வீட்டுக்கு ஓடுவது என்று ஏராளமான வேலை. நடவு வேலையும் தொடங்கியாயிற்று.

சோமனும் பரபரப்பாக ஓடியாடி வேலை செய்து கொண்டிருந்தான். அவனுக்கு சொந்தமான இரண்டு எருதுகளையும் முதல் முறையாக நுகத்தடியில்

பூட்டியிருந்தான். மழை பெய்து கொண்டிருந்தாலும் அதைப் பொருட்படுத்தாமல் தன் எசமானின் நிலத்தை உழுது கொண்டிருந்தான். அவனுடன் கூட இன்னும் சில ஆட்களையும் சேர்த்துக் கொண்டிருந்தான். அவர்களின் வாயிலிருந்து ''ஓ... ஓ...'' என்னும் ராகாலாபனை வந்து கொண்டிருந்தது. சோமனின் வாயிலிருந்து எந்த ராகமும் வெளிவரவில்லை. வெறும் எந்திரத்தைப் போல ஏர்க்காலைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான். கலப்பை நேராகப் போகிறதா குறுக்காகப் போகின்றதா என்று அவன் கவனித்ததாகத் தெரியவில்லை. அவன் எருதுகளை ஓட்டிச் செல்வதற்கு மாறாக எருதுகளே அவனை இழுத்துக் கொண்டுப் போவதைப் போலிருந்தது. தன் சொந்த விவசாயத்திற்குப் பயன்பட வேண்டுமென்று வளர்த்த எருதுகளை, தன் வாழ்க்கையின் லட்சியத்திற்கு குறுக்கே வந்திருக்கும் எசமானுக்காகக் கலப்பையில் பூட்டியிருக்கிறான். வேலை செய்ய மனது எப்படி வரும்? இருந்தாலும் அவன் கூலியாள்தானே? உலகமே புறக்கணித்த கூலியாள் மட்டுமே! கூலியாளின் வேலையைச் செய்து கொண்டிருக்கிறான். மழை பெய்து கொண்டிருக்கும் போது கூட பிடித்த ஏரை நிறுத்துவதில்லை. மழை நீரோடு தன் கண்ணீரையும் சேர்த்து வழிய விட்டு வேலை செய்கிறான். தன் எருதுகள் எசமான் நிலத்தில் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் தன் இதயத்தின் மீது வைக்கும் காலடியாகக் கனக்கிறது. 'தான் எந்த கெட்ட நேரத்தில் அந்தக் கன்றுகளைக் கொண்டு வந்து வளர்க்க முடிவு செய்தேனோ' என்று தன்னையே சபித்துக் கொள்கிறான். தான் அவைகளைக் கொண்டு வராமலிருந்தால் அவை காட்டுப் புலியின் வாய்க்கு இரையாகிப் போயிருக்குமே - என்ற எண்ணமும் வருகிறது. அவனது துர்பாக்கிய நிலை பற்றிய சிந்தனை, சில வேலைகளில் கோபமாக உருவெடுத்து எருதுகளின் முதுகில் விலாசல்களாக இறங்குவதுமுண்டு. அடியின் வலி தாங்காமல் அவைகள் பாய்ந்து ஓடுகின்றன. 'அவைகளின் நிலைமை தன் நிலைமையைவிட வேறாவதற்கு...'

அவனது மனவோட்டத்தை யாரோ தடுத்து நிறுத்தியதைப் போலிருந்தது. தான் அந்த எருதுகளை அடித்துக் கொண்டிருக்கின்றேனா! அவைகள் செய்த தப்பு என்ன? தான் ஒரு முட்டாள் - என்று எண்ணிக் கொள்கிறான்.

அவனது உழுகின்ற வேலை என்னவோ நடந்து கொண்டேயிருந்தது. உழுத சாலையே உழுது கொண்டு போவான்; அல்லது நான்கைந்து சால்கள் உழாமலே போவான். அவன் பின்னால் உழுது கொண்டிருந்தவர்கள், மறுபடியும் அவன் பின்னால் போகாமல் நுகத்தடியை அவிழ்த்துவிட்டு மாடுகளை ஓட்டிக் கொண்டு புறப்பட்டுப் போனார்கள். இவனைக் கூப்பிட்டுப் பார்த்துவிட்டுப் பேசாமல் போனார்கள். இவனது எண்ணமெல்லாம் எங்கேயோ இருந்தது. உழுது கொண்டேயிருந்தான். உழுவதிலேயே மாலையாயிற்று. எருதுகள் பெருமூச்சு விட்டு வாயிலிருந்து நுரைதள்ளி சோர்ந்து நின்றே விட்டன. இவனும் நின்றான். நின்றதைக்கூட அவன் உணரவில்லை. எவ்வளவு நேரம் நின்று கொண்டிருந்தானோ தெரியாது. இவன் கையிலிருந்த கலப்பையை இழுத்துக் கொண்டே எருதுகள் குடிசையை நோக்கி நடந்தன. அவை அந்த நிலையில் வீட்டுக்கு வந்ததைப் பார்த்து, பெள்ளிக்கு ஆச்சரியமாக இருந்தது. அவசர அவசரமாக அவைகளின் கயிற்றை அவிழ்த்து, கலப்பையைக் கழற்றி வாசலில் கிடத்தி, அந்த எருதுகளை அவைகளைக் கட்டும் கொட்டடிக்கு ஓட்டினாள். எருதுகளின் முதுகின் மீது, பட்ட அடியினால் வரிவரியாக தடித்துப்போன தழும்புகள். வாயிலிருந்து தள்ளிய நுரை இன்னும் ஒழுகிக் கொண்டிருந்தது. அனுதாபத்தோடு அவற்றின் உடம்பைத் தடவிக் கொடுத்து தீனி போட்டாள். அடுத்த விநாடியே அவள் மனது தந்தையின் மீது தாவியது. ''யப்பா...'' என்று வெளியில் இறங்கினாள். இருட்டு திட்டுத்திட்டாகப் படிந்திருந்தது. அப்பனிடமிருந்து பதிலையே காணோம். பதற்றத்தோடு மேலும் ஓடத் துவங்கினாள். வழியில்

எதையோ யாரையோ மிதித்து இடறி விழுந்தாள். ''அய்யோ'' என்று பயந்து போய், தரையிலிருந்து எழுந்து நின்று பார்த்தாள். எதிரில் சோம! நடுவயலிலிருந்து தள்ளாடி நடந்து வந்து வரப்பு மேட்டில் உட்கார்ந்திருந்தான். அப்போதுதான் அவனுக்கு உணர்வு வந்திருந்தது. ''இங்க என்னா பண்றே?'' என்று பெள்ளி கேட்டாள். ''எங்க?'' என்று அவனும் கேட்டான்.

என்னமோ சில நாட்களாகவே அவன் மனநிலை சரியில்லையென்று அவளுக்கும் தெரிந்திருந்தது. அதனால் ஒன்றும் பேசாமல், வீடு வரை அவனைக் கையைப் பிடித்து அழைத்து வந்தாள். சிறிய குழந்தை தாயைப் பின் தொடர்வதைப் போல அவள் பின்னாலேயே அவனும் வந்தான். குடிசை வந்தது. உள்ளே அழைத்துப் போனாள். அவள் விட்ட இடத்திலேயே உட்கார்ந்தான். வேகவேகமாக பெள்ளி ஒரு பானையில் சுடுநீர் காய்ச்சி ''யப்பா... ஒடம்புக்கு ஊத்திக்கிறயா?'' என்று கேட்டாள். ''ஏ(ன்)....?'' என்ற பதில்கேள்வி வந்தது. மழை விட்டிருந்ததினால் வெளிவாசலில் ஒரு மனையைப் போட்டு அவனை உட்காரவைத்து நான்கு சொம்பு நீரை ஊற்றினாள். நீலனை அழைத்து தகப்பனின் உடம்பை உருவி விடும்படி கூறினாள். எப்படியோ பிள்ளைகளைப் பொறுத்தவரையில், அவனைக் குளிப்பாட்டியாயிற்று. பிறகு பெள்ளி கஞ்சியைக் கொண்டு வந்து அவன் முன்னால் வைத்தாள். ''குடி...'' என்றாள். ''என்னா...?'' என்று கேட்கிறானே சோம!

சாப்பிட்டாயிற்று. படுப்பதற்குத் தரையில் அவனுக்காக ஒரு கிழிந்த பாயை விரித்தாள். மழையில் பாடுபட்டு உழைத்துவிட்டு வந்தவனுக்காக ஒரு கம்பளித் துண்டை போர்த்திவிடவும் வழியில்லை. தோட்டத்திற்குப் போன பிள்ளைகளுக்காக அதை அன்பளிப்பாக கொடுத்து விட்டிருந்தானே? தகப்பனைப் பாயின் மேல் உட்கார

வைத்து ''யப்பா... உன் ஒடம்புக்கு ஒண்ணுமில்லியே?'' என்று அக்கறையோடு பேச்சுக் கொடுத்தாள். பகலெல்லாம் பாடுபட்ட பிள்ளைகளிருவரும் படுத்ததும் உறங்கி விட்டனர். சோமனைப் பேச வைக்க அவள் எவ்வளவு முயன்றும் பலனில்லை. பெள்ளியே உடுக்கையை எடுத்து, அடுப்பு அனலில் சிறிது சூடுபிடித்து அவன் முன்னால் வைத்தாள். பேச்சு கொடுக்காமல், ''லே... லே... லே... லே... தன்னனா.... லே... லேலெலல்லேலா...'' என்று பாடத் தொடங்கினாள். சற்று நேரம் சோம மௌனமாகவே இருந்தான். மழைக்காலம் தொடங்கிய நாளிலிருந்து உடுக்கையைத் தொட்டுப் பார்த்ததுகூட இல்லை. இப்போது திடீரென்று உற்சாகம் பீரிட்டதைப் போல, அதை இறுகப் பற்றி வாசிக்கத் தொடங்கினான். பாட்டும் வளர்ந்தது. ''டமடக்க'வும் தொடர்ந்தது. உணர்ச்சி மேலிட்டு தகப்பன் - மகள் இருவரும் ஆடத் தொடங்கினர். மகள் தந்தையின் மேலிருந்த பாசத்தாலும் பரிவினாலும் ஆடினாள்; அவன் தனக்கே தெரியாமல் ஆடினான்.

நீண்ட நேரம் வரை இந்த 'லேலே' தொடர்ந்தது. கடைசியில் எல்லாவற்றையும் நிறுத்தி கிழவன் பாயின்மேல் உட்கார்ந்தான். மகள் அவன் பக்கத்திலேயே உட்கார்ந்து உடம்பை நீவிவிட்டபடியே மிகவும் மெதுவான குரலில் ''யப்பா... இன்னிக்கி என்னா, ஒன் ஒடம்பு சரியில்லையா!'' என்றாள். உடம்புக்கு என்றுதான் கேட்டாள்; மனதுக்கு என்று கேட்கவில்லை. சோம மெதுவாக ''எது நல்லாருந்தா என்னா? தலையெழுத்து நல்லாயில்லாதப்போ'' என்றான். பேச்சு ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குத் தாவிக் கொண்டிருந்தது. தான் பாதிரியிடம் போய்வந்த நாளிலிருந்து நடந்த எல்லாவற்றையும் மகளிடம் சொல்லிப் புலம்பினான். பெள்ளி புத்திசாலி, தங்களுடைய நிலைமையை அறிந்தவள். உலகம் சொல்வதைப் போல ''கருப்பு நாய்

வெள்ளையாக முடியாது'' என்று தெரிந்தவள். அதனால் ''யப்பா, நாம நம்ம யோக்கியதெக்கி மீறி ஆச வச்சா நடக்குமா? நாம வெவசாயம் பண்ணனும்னா, பாப்பாருங்களாவோ பண்ட*ருங்களாவோ கவுடருங் களாவோ பொறந்திருக்கணும்! பாளாப்போன பொலையரா பொறந்துட்டு வெவ்சாயம் பண்ணனும்னா ஆகுமா? எசமான்தான் என்னா பண்ண முடியும்? ஊரு கட்டுப்பாடுன்னு இல்லியா! அத அவுங்க மீறினா ஊரு பெரியவங்கதான் அவர சும்மா உட்டுடுவாங்களா? அவுங்க பேச்ச உடு; நாளக்கி நீ வெவசாயின்னே வச்சிக்கோ... அப்போ நம்ம எனத்து ஆளுங்களே உம்மேல எவ்ளோ ஆத்தரப்படுவாங்க இல்லியா? அது சரி. நமுக்கு இப்போ என்னா கொறவாருக்குது? ரெண்டு எருதுங்க இருக்குது; இந்த ஊர்ல வேற யாருகிட்ட எருது ஜோடி இருக்குது - நெலத்துல உளுதுங்க. அறுப்பு வேல என்னுமோ நமுக்கு தப்பிறதில்ல. பயிர் பண்ணிப் பாக்கிறதுல மட்டும் என்னா பெரிசா வந்துடப் போவுது? நாலுபடி நெல்லு கூட கெடைக்கலாம். மளயும் பயிரும் நல்லா வராமப் போனா? அந்த நாலுபடியும் போனாலும் போயிடும். இப்போ, எதுனா ஆயிப்போயிடுமேன்னு கவலயில்லியே? ஒடம்புல தெம்பு இருக்கிறவரைக்கும் பாடுபட்டு வேல செய்யறத வாணான்றவுங்க உண்டா? வேலைக்குன்னு போன அன்னிக்கி அரபடி அரிசியாவது கெடைக்குதே! ஏருகட்ட தொடங்கின நாள்ளேருந்து தெனமும் ஒருபடி அரிசியாவது கெடைக்குதுயில்லியா? அதோட, உன் எருதுங்கள ஏர்ல பூட்னதுக்கும், 'எதுனா குடுத்தே குடுப்பேன்'னு எசமா(ன்) சொன்னாரே. உனுக்கு இதுக்கும் மேல இன்னும் என்னா ஒணும்?'' என்றாள்.

* பண்ட - கன்னட மாவட்டத்தின் விவசாயிகளில் மிகவும் முக்கியமான ஒரு வகுப்பு - சாதி

மகள் பேசியது என்னமோ நீண்ட சொற்பொழிவுதான். ஆனால், சோமனிடமிருந்து எந்த பதிலும் வரவேயில்லை. அவன் முகத்தைப் பார்க்கலாம் என்றால் எங்கும் கும்மிருட்டு. இரவில் விளக்கு எரியவிடும் வீடு இல்லையென்று முன்பே சொல்லியிருக்கிறோமே! அதனால் பெள்ளி தகப்பனின் மனநிலையைத் தெரிந்து கொள்ள முடியாமல், அவன் அப்படியே தூங்கிப் போயிருப்பான் என்று எண்ணிக் கொண்டாள். அவனது அப்போதைய நிலை கூட, ஒருவகையில் உறக்க நிலை போலவே இருந்தது. மனது என்னவோ விழிப்பு நிலையில் இல்லைதான். பெள்ளி அவன் பக்கத்திலேயே பாயை விரித்து, இருந்த ஒரு சேலையையே இழுத்துப் போர்த்தி சுருண்டுப் படுத்துக் கொண்டாள். வெளியில் மழை பெய்யத் தொடங்கியது. மழையுடன் காற்றின் வேகமும் சேர்ந்து அதிகரித்தது. சுற்றிலுமுள்ள மரம், செடிகொடிகள் அங்குமிங்குமாக ஆடி அசைந்து முறிந்து விழத் தொடங்கின. அது ஒரு வினோதமான இரவாகத் தெரிந்தது. காலைவரை பிரளயத்தையே கொண்டு வருவதைப்போல மழையின் ஆர்ப்பாட்டம் நீடித்தது.

உண்மை! சோமனின் மனக் கொந்தளிப்பைவிட பிரம்மாண்டமான பிரளயக் கொந்தளிப்பு வெளியில் நடந்தது கொண்டிருந்தது. உறக்கமோ, கனவோ, விழிப்போ வேறு எதுவோ ஒரு வகையில் பொங்கிப் புரளும் கடலலைகளைப் போல அடித்துப் புரண்டு கொண்டிருந்தது. அருகிலேயே பாறையைப் போல சலனமெதுவுமில்லாமல் பிள்ளைகளிருவரும் அமைதியாகப் படுத்து உறங்கிக் கொண்டிருந்தனர்.

## 8

களசத்து மிங்கேல துரைகளின் காபித் தோட்டமென்றால் மிகப் பெரிய தோட்டம். எவ்வளவோ தொலைவுக்கு

குன்றுகளின் சரிவில் இருப்பதெல்லாம் அவருடைய தோட்டமே. அவரிடம் வேலை செய்து கொண்டிருந்த கூலியாட்களின் எண்ணிக்கையும் நூற்றுக் கணக்கில்தான். மன்வேலனைப் போன்ற கங்காணிகளின் எண்ணிக்கையே பத்துப் பதினைந்துக்கு மேலிருக்கும். அங்கங்கே நீளமான வீடுகளின் வரிசைகள். நகரத்து குடிசை வீடுகளைப் போலவே, கூலியாட்களுக்காக லாயங்களைக் கட்டிப் போட்டிருந்தனர். குருவ, சனியர்களிருந்த கூலியாட்களின் கூட்டம் காபித் தோட்டத்தை அடைவதற்குள் மன்வேலனின் தரிசனம் அவர்களுக்கு மீண்டும் கிடைத்தது. பழைய ஆட்கள் தத்தம் வீடுகளில் நுழைந்து கொண்டனர். சனிய, குருவர்களைப் போல இதுவரை தோட்டத்து முகத்தையே பார்த்திராத புதிய ஆட்கள் பலரிருந்தனர். அவர்களை மன்வேல், துரைகளிடம் அழைத்துச் சென்றான். இவன் இப்படிப்பட்டவன். அவன் அப்படிப்பட்டவன் - என்னும் விவரங்களை அவருக்குத் தெரியப்படுத்தியாயிற்று. அவருடைய விருப்பப்படி 'அவனுக்கு இவ்வளவு சம்பளம்; இவனுக்கு இவ்வளவு சம்பளம்' என்பதையும் தெரியப்படுத்தலாயிற்று. குருவ, சனிய இருவருக்கும் மாதத்துக்கு ஏழரை ரூபாய் என்று நிர்ணயமாயிருந்தது. அடுத்த ஆண்டு எட்டு ரூபாய் வீதம் கொடுப்பதாக அப்போதே தெரியப்படுத்தினார்கள். ஒவ்வொரு வாரமும் கணக்கு முடித்துக் கொள்வதாக சொன்னார்கள். சரி, துரைகளிடம் அவர்களின் வேலை முடிந்தது. மன்வேல் வந்து புதிய கூலிகளை ஒரு வரிசைக்கு அழைத்துச் சென்றான். குருவ, சனிய இருவருக்கும் ஒதுக்கிய 'புதுவீடு' பார்க்கும்படியாயிருந்தது. தோட்டத்தின் நடுவில் நீளமாக மிகவும் அகலம் குறைந்து கட்டியிருந்த ஒரு லாயம், எதிருக்கெதிராக இருந்த கதவுகளைத் தவிர பின்புறமோ அல்லது வலது இடது பக்கமோ ஜன்னல் கதவுகளென்ற தொல்லையே இல்லை. எதிரில் வரிசை, வரிசையாக கதவுகளைத் தவிர ஜன்னல்களேயில்லை. ஒரு கதவுக்கும் இன்னொரு கதவுக்கும் ஒரு கதவளவே இடம். ஒரு கதவு என்றால் ஒரு

அறை. அறையின் உள்ளே காலை வைக்க மிகவும் பயபக்தி இருக்க வேண்டும். மிகவும் பணிவாக, கழுத்தையும் முதுகையும் வளைத்துக் கொண்டு உள்ளே நுழையாவிட்டால் தலை கத்தரித்து விழுந்துவிடலாம். குருவ, சனிய இருவருக்கும் லாயத்தின் நடுவிலிருந்த ஒரு கொட்டடியைக் காட்டிவிட்டு மன்வேல் புறப்பட்டுப் போனான். அவர்களிருவரும் தம் 'வீட்டுக்குள்' நுழைந்தனர். அதன் தரை என்பது தோட்டத்தின் நிலத்தைப் போலவே சாய்வும் சரிவுமாக இருந்தது. அவர்களுக்கு சிறிய வீட்டில் வாழ்ந்த பழக்கம்தானே? ஆனால் அத்தகையத் தரையை மட்டும் பார்த்ததில்லை. வந்த களைப்பில் கொண்டுவந்த பொருட்களையெல்லாம் இறக்கி வைத்துவிட்டு தரையில் உஸ்ஸென்று காலை நீட்டி உட்கார்ந்தனர். அந்தக் கொட்டடியிலேயே ஒரு மூலையில் சில கற்கள் தாறுமாறாக விழுந்த கிடந்தன. அதுதான் அடுப்பு. தாகமெடுத்தால் தண்ணீருக்காக ஒரு குடுவையை எடுத்துக் கொண்டு வெளியே போனார்கள். குடிநீருக்கான கிணறு பக்கத்தில் எங்கும் தென்படவில்லை. எதிர்க் கொட்டடியில் இருப்பவரிடம் விசாரித்தனர். அந்த ஆளும் அந்த இடத்திற்குப் புதியவனே. என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கும்போது வேறொரு கூலியாள் அந்த வழியாக வந்தான். ''தண்ணீ...'' என்று இவர்கள் கேட்கவும் ''அங்க பாருங்க'' என்று அவன் எதையோ சுட்டிக்காட்டிவிட்டுப் புறப்பட்டுப் போனான். இவர்கள் அங்குமிங்குமாகப் பார்த்தனர். எதுவும் தெரியவில்லை. கடைசியில் அவன் காட்டிய திசையை நம்பி, சற்றுக் கீழே இறங்கினர். சற்றுத் தொலைவிலேயே ஒரு சிறிய நீரோடை ஓடிக் கொண்டிருந்தது. அதில் குடுவையை முழுக்கி நீர் எடுத்துக் கொண்டு வந்தனர். இப்படியே வீட்டு வேலைக்கான பொருட்கள் அனுகூலங்கள் எல்லாம் அறிமுகமாயின. மறுநாளே தோட்ட வேலையும் தொடங்கியது. காப்பிச் செடிகளின் இலைகளை வெட்டி சமமாக்குவது, எருவிடுவது போன்ற வெவ்வேறு வகையான வேலைகள் அவர்களுக்குக் காத்திருந்தன.

உழைக்க வந்தவர்களுக்கு எந்த வேலையானால்தான் என்ன?

தோட்டத்தின் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரையிலும் தென்கன்னட மாவட்ட ஆட்களே நிறைந்திருந்தனர். பெரும்பாலும், எல்லோருமே குருவ - சனியர்களின் சாதியைச் சேர்ந்தவர்களே; அவர்களைக் கண்காணிக்கும் மேஸ்த்திரிகள் (கங்காணிகள்) மட்டும் மேல் சாதியினர். அவர்களும் மலையடிவாரத்தைச் சேர்ந்தவர்கள்தாம். அவ்வளவு பேரும் ஒரே பகுதியைச் சேர்ந்தவர்களானாலும் ஒருவரோடொருவர் கலந்து பழகும் போக்கு இல்லாதவர்களாயிருந்தனர். ஒவ்வொருவரும் ஒரு தனி உலகமாகத் தெரிந்தனர். எந்த கூலியாளிடமும் உற்சாகத்தின் நிழலைக்கூடக் காண முடியவில்லை. ஓய்வு கிடைத்தால் அந்தப் பக்கத்துக் கொட்டடியில் உட்கார்ந்து கொண்டே மறுபக்கத்து கொட்டடியில் இருந்தவரிடம் பேசிக் கொண்டனர். இப்படிப்பட்ட புதிய உலகத்தில் குருவ, சனிய இருவரின் உற்சாகம் எத்தனை நாளைக்குத்தான் நிற்கும். போதாததற்கு இரண்டு பேருக்குமே மலைக் காய்ச்சலும் தொற்றிக் கொண்டது. ஒரு நாளைக்கு ஒருவன் படுத்துக் கொண்டால், மறுநாளைக்கு மற்றொருவன் படுத்து விடும்படியாயிற்று. முதன் முதலில், அவர்களுக்குக் காய்ச்சல் வரும்போது வேலைக்குப் போக மாட்டார்கள். ஆனால், தொடர்ந்து அதேபோல் இருந்தால், பிழைப்பை நடத்துவது கடினம் என்று தெரிந்து, காய்ச்சலிலேயே வேலை செய்யத் தொடங்கினர்.

நமது குருவ, சனிய இருவருக்கும் சில நாட்களுக்குள்ளாகவே அந்தச் சேரியின் சிலர் பழக்கமாயினர். அவர்களின் இடது பக்கத்தில், வழியில் சிறுமியைப் பறிகொடுத்த கார்களத்து ஃபொம்மனின் குடும்பம் இருந்தது. வலது பக்கத்தில் கன்னட மாவட்டத்து கொக்கடத்திலிருந்து வந்த இன்னொரு புலையரின் குடும்பம் தங்கியிருந்தது. குடும்பம் என்றால் நிறைய

ஆட்கள் இல்லை - தகப்பன், தாய், மகள் இப்படி மூன்று பேர் கொண்ட ஒரு சிறிய குடும்பம். குருவ, சனிய இருவருக்கும் அந்த அக்கம்பக்கத்தாரோடு அறிமுகமாகி, உடல் களைப்பும் மனச்சோர்வும் நீங்கி பொழுது போக அந்தப் பழக்கம் மிகவும் உதவியாக இருந்தது. ஆனால், ஊரில் பொழுதுபோக்கியதைப் போல பொழுதைக் கழிக்க இங்கு உடுக்கையை வாசிக்கும் கலைஞர் யாருமில்லை.

அவர்கள் அங்கு வந்து நான்கைந்து மாதங்களாயிருந்தன. அதற்குள்ளாகவே இருவருக்கும் தம் வீட்டு நினைவு வந்து பலமாக வாட்டத் தொடங்கியது. ஆனால், அங்கிருந்து புறப்படும் நிலையில் அவர்கள் இல்லை. அவர்கள் தோட்டத்தின் நிரந்தரக் கூலிகளாகச் சேர்ந்திருந்தனர். மற்றவர்களைப் போல, மிக அதிகமான வேலை இருக்கும்போது, அதாவது அறுவடை நேரத்தில் மட்டுமே கூலிக்கு வந்து போகும் சாதாரணக் கூலிகள் இல்லை. வீட்டுக்குப் போக வேண்டுமென்ற ஆசை இருந்தாலும் போவது எப்படி? தகப்பனின் கடனை கொஞ்சமாவது அடைத்திருந்தால் அதன் பிறகு ஊருக்கு சொல்லாமல் போய்விட்டாலும் பெரிய தப்பாகாது! ஆனால், தகப்பனின் கடன் அடைபடுவது எந்தக் காலத்தில் என்பதே தெரியவில்லை. வாரத்திற்குக் கிடைக்கும் ஒரு ரூபாயில் அவர்களின் பிழைப்பிற்கான எல்லாவற்றையும் வாங்கிக் கொள்ள வேண்டும். வாரத்தில் ஒரு நாளாவது மனம் திருப்தியாகும் வரை கள்ளு அபிஷேகமாக வேண்டும்! சம்பள நாள் வந்ததென்றால், கார்களத்து ஃபொம்மனிருக்கிறான். அவனைப் போன்ற மற்றக் கூலியாட்களும் இருக்கிறார்கள். வரிசை வரிசையாக தோட்டத்திலிருந்து சற்று தொலைவிலேயே இருக்கும் கள்ளுக் கடைக்குப் போய் விடுவார்கள். ஈச்சங்கள்ளைக் கடனுக்குக் கொடுக்கும் கடைக்காரனும் இருந்தான். அதனால் குடிப்பதற்கு என்னவோ நிறையவே ஆதரவு இருந்தது. சம்பள நாளே இரண்டு மூன்றணா கரைந்து போய்விடும். இப்போது கடனுக்கும் கிடைப்பதால்

வாரத்திற்கு இரண்டு மூன்று முறையாவது கள்ளு கடங்கிற்குப் போகாமலிருப்பதற்கு மனம் ஒத்துழைப்பதில்லை. இப்படியாக வாரத்திற்கு ஒரு ரூபாய் கிடைத்தால் அதில் 8-10 அணாவரை கள்ளுக் கடைக் கணக்கில் சேர்ந்துவிடும். மீந்ததில் சாப்பாடு, துணிமணி, மற்றவையெல்லாம் நிறைவேறியாக வேண்டும். உணவிற்குப் போதாமல் மறுபடியும் கடன் வாங்குவதும் உண்டு. எப்படியோ மாத சம்பளத்தில் ஒவ்வொரு காசும் செலவழிந்துவிடும். சோம செய்த உபதேசம் அவனிடமே தங்கிவிட்டது. காலையிலிருந்து இரவு வரை உழைத்து நாட்களையும் மாதங்களையும் நகர்த்தியும், சோமனின் கடன் முன்பிருந்தபடியே இருந்தது. மேலும் ஐந்தாறு மாத வட்டியோடு சற்று கொழுத்துமிருந்தது.

குடிப்பதை விட்டு விடாலாமென்றால் - பாழும் பழக்கம், அது அவர்களை விடுவதாக இல்லை. மேலும், மிகவும் சாரமற்றதான தோட்ட வாழ்க்கையின் மனச்சோர்வை மறப்பதற்கு அது இல்லாவிட்டால் வேறென்ன சஞ்சீவி வனமா உள்ளது? ஒரு பக்கம், சனியனின் மனது தகப்பன் ஆசைகாட்டிய தன் திருமணத்தின் பக்கம் பாய்ந்து செல்கிறது. ஒரு புலைச்சியைக் கட்டிக் கொண்டு குடும்பம் நடத்தி சுகமாக இருக்க வேண்டும் என்னும் ஆசை அவனிடம் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது. கல்யாணமானால் நிச்சயமாக தோட்டத்திற்குத் திரும்பக் கூடாது என்று அவன் தீர்மானித்து விட்டிருந்தான். சனியனின் கதை இப்படியென்றால், குருவனின் கதை வேறு மாதிரி. குடிப்பதில் குருவன் சனியனை மீற முடியாதென்றாலும் பின்தங்கி விடுபவனல்ல. இருவரும் குடித்து வந்து, அவ்வப்போது சண்டையிட்டுக் கொள்வது என்பது இருந்தே இருக்கிறது. இதனால் மெல்லமெல்ல அண்ணன் - தம்பி உறவில் ஒருவகையான விரிசல் ஏற்படத் துவங்கியது. அதைப் பெரிதுபடுத்த - சோம, சனியனுக்கு கொடுத்த வாக்கு - திருமண ஆசை - உதவியது.

அண்ணனுக்கு திருமண வாழ்க்கை கிடைத்துவிடும். தன்னைப்பற்றி தகப்பன் பேசவேயில்லையே! தான் என்ன அவ்வளவு சின்னவனா? அவனைப் போலவே தானும் குடும்பஸ்தனாக வேண்டாமா? ஏன் இப்படி முதலிலிருந்தே தன்மீது ஒரு அலட்சியம் என்று தகப்பன் மீது வெறுப்பு.

இந்த வெறுப்பே அவன் மனதில் பழிவாங்கும் எண்ணமாக உருமாறி வந்தது. அவர்களின் இன்னொரு பக்கத்து வீட்டுக்காரர்களைப் பற்றி சொல்லியிருந்தோமே, தகப்பன், தாய், மகள் கொண்ட சிறிய குடும்பத்தைப் பற்றி. அவர்களுடன் குருவன் மிகவும் நெருங்கிப் பழகினான். தகப்பன், தாய் இருவரும் முதியவர்கள். மகள் திருமணத்திற்கு நிற்கும் பருவப் பெண். அவளை 'மாரி' என்று அழைத்தனர். குருவ - மாரி இருவருக்கிடையில் காதல் அரும்பியது. மாரிக்கு பதினெட்டு வயதாகியிருக்கும். குருவ அவளைவிட மூன்று வயது பெரியவன். இருவர் மனமும் ஒன்றையொன்று கவர்ந்து ஒன்று கலந்தன. இந்த பிணைப்பு ஏற்பட்டால் தம்முடைய வாழ்க்கைச் சுமையில் சிறிதளவையாவது மருமகன் ஏற்றுக் கொள்வானே என்னும் ஆசை பெரியவர்களுக்கு. எதுவும் வாய்விட்டுப் பேசும் அளவுக்கு உறுதியாகி விடவில்லை. சனியனுக்கு தம்பியின் போக்கில் சந்தேகம் வரத் தொடங்கியது. ஒருநாள் குருவனிடம், ''இனிமே நீ அவங்க கொட்டடிக்குப் போவக் கூடாது'' என்று உத்தரவிட்டான். குருவ எதுவும் பேசவில்லை. போவதை மட்டும் நிறுத்தவில்லை. அண்ணனின் கோபம் பொறுக்க முடியாததாயிற்று. ''என்னா, மாரிய நீ கட்டிக்க போறியா?'' என்று கேட்டான். குருவ சட்டென்று ''ஆமா, நீ என்னா பண்ணுவே?'' என்றான். இப்படிப்பட்ட கடுமையான பேச்சு இதுவரை அவர்களிடையில் வந்ததில்லை. சனிய மிகவும் வேதனையடைந்தான். கோபம் வருவதற்கு மாறாக, ''அவங்க என்னா சாதின்னு உனுக்குத் தெரியுமா? நம்மவங்களாயிருந்தாலும் இப்போ சிலுவக்காருங் களாயிருக்கறாங்க. நீ சும்மா அவமேல பைத்தியமா

அலையாதே... அப்பனுக்கு சொல்லி வேற சம்பந்தம் பண்ணி வைக்கிறேன்'' என்றான்.

குருவனுக்கு அவள் கிருத்துவப் பெண் என்பது தெரியாது. அதற்கு அவள் பெயர்தான் காரணம். 'மேரி' என்ற பெயர் 'மாரி' என்றாக மாறியிருந்தது. அந்த குடும்பத்தவர்கள் கொக்கடத்து ஊரின் கிருத்தவர்களாகும். ஏசுகிருஸ்து யாரென்று அவர்களுக்குத் தெரியாவிட்டாலும் அவர்களின் கழுத்தில் ஒரு சிறிய சிலுவை தொங்கிக் கொண்டிருந்தது. குருவனுக்குத் தன் எதிர்காலத்தில் நல்லதும் கெட்டதும் பளிச்சிடத் தொடங்கியது. தான் மாரியை மணந்து கொண்டால், அவளைப் போலவே தானும் கிருத்துவனாக வேண்டும்; அதற்குத் தன் தகப்பன் உடன்பட மாட்டானென்பதும் புரிந்தது. ஆனால், அந்த ஒரு காரணத்திற்காக அவர்களின் காதல் முறிந்து விடுவதா?

சரி, குருவ - சனிய இருவரும் தோட்டத்திற்கு வந்து எட்டு பத்து மாதங்களாயின. அங்கே சோம தன் பிள்ளைகளை எண்ணி இரவெல்லாம் ஏங்கிக் கொண்டிருப்பான். இங்கே சனிய தகப்பனைப் பார்க்க எப்போது வீடு போய்ச் சேருவதென்று எண்ணிக் கொண்டிருந்தான். கூலியாட்களுக்கு ஒரு மாத விடுமுறை கிடைத்தது. ஊரின்மீது ஆசை இருந்தவர்கள் எல்லாம் பாத்திரப் பண்டங்களை மூட்டையாகக் கட்டிக் கொண்டு புறப்படத் தயாராயினர். சிலர் அந்த இரவே பயணம் புறப்பட்டு விட்டனர். சிலருக்கு, ஊருக்குத் திரும்பும்போது மோட்டாரில் போக வேண்டுமென்ற ஒரு ஆசையிருந்தது. குருவ, சனிய இருவரும் இதுவரை மோட்டாரைத் தொட்டும் பார்த்தவர்களில்லை. சாவதற்குள் அந்த வினோத வாகனத்தில் ஏறிப் பார்க்க வேண்டுமென்னும் ஆசை. அவர்களின் குடியிருப்பிலிருந்த மூன்று நான்கு குடும்பத்தவர்களும் மோட்டார்ப் பயணிகளே! பேத்தியைப் பறிகொடுத்த ஃபொம்ம மட்டும் புறப்படவில்லை. அவனுடைய புலைச்சியின் மனதில்

இன்னமும் துக்கம் ஆறியிருக்கவில்லை. ''இனிமே ஊரென்ன... வாசலென்னா?'' என்று அவள் கண்ணீர் சொரிந்து கொண்டிருந்தாள்.

அவர்களெல்லோரும் 'களச'த்துப் பேட்டைக்கு வந்தனர். இவர்களைப் போலவே மோட்டார்ப் பயண ஆசை கொண்டிருந்த நூற்றுக்கணக்கான கூலியாட்கள் அங்கே வந்து சேர்ந்திருந்தனர். மோட்டார் தரகர்களுக்கு அன்று நல்ல வேட்டைதான்! ஒவ்வொரு வாகனத்தின் மீதும் 30 - 40 ஆட்களை ஏற்றி அடைத்தனர். டாப்பு, மட்கார்டு, சீட்டு எல்லாம் முக்கி முனகின. தோட்டத்துக் கூலியாட்களின் மலையடிவாரப் பயணம் தொடங்கியது. மோட்டார் அவர்களை சார்மடி காட்டின் எல்லையில் உதறிவிட்டு மறுபடியும் கூலியாட்களைக் கொண்டுவரப் பறந்தது. வந்த நூற்றுக்கணக்கான ஆட்கள் அங்கேயே நடுக்காட்டில் நெளிந்து கொண்டிருந்தனர். கீழேயிருந்து மோட்டார்கள் வந்து, தாங்கள் எப்போது ஊர்போய்ச் சேருவோம் என்று யாருக்கும் தெரியாது. சரி, கீழேயிருந்து ஒரு மோட்டார் வந்தது. அதிலிருந்து ஆட்கள் கீழே இறங்குவதற்குள் எல்லோரும் அதில் ஏறி அமர்ந்தனர். அந்த மோட்டாரின் தரகர்கள் அவர்களின் பயணச் சீட்டுக்களைப் பார்க்கும்போது அவை வேறொரு கம்பெனியுடையது என்று தெரிந்தது. சரி, அவர்களையெல்லாம் இறக்கி விட்டனர். இப்படியே காத்து, பயணம் செய்து நடு இரவில் பெள்தங்கடி போய்ச் சேர்ந்தனர். அவர்களில் பலர் மோட்டாரிலேயே பயணத்தைத் தொடர்ந்தனர். மற்றவர்கள் பாதையின் ஓரத்தில் படுத்துக் கொண்டனர். பொழுது விடியும் வரை அவர்கள் அடித்துப் போட்டதுபோல உறங்கினர்.

பொழுது விடிந்தது. சனிய உறக்கத்திலிருந்து எழுந்து தம்பியை அழைத்தான். இன்னும் இரண்டு நாள் பயணம் இருந்தது, அவர்களின் போகனஹள்ளிக்குப் போய்ச் சேர. பரபரப்போடு புறப்படத் தயாரானான். ஆனால்,

குருவனைக் காணவில்லை. ஆற்றங்கரைக்குப் போயிருப்பானென்று எண்ணிக் காத்திருந்தான்; வரவில்லை. ஆற்றங்கரைக்குப் போய்ப் பார்த்தான். அங்கே யாரும் இல்லை. அங்கே இங்கேயென்று தேடிப் பார்த்தான். இவன் கூடவே வந்த மாரியின் குடும்பத்தவர்களையும் காணோம். குருவ தன்னைவிட்டு மாரியின் மேலிருந்த மோகத்தில் ஓடிப் போயிருக்கிறான் என்று அப்போதுதான் அவன் உணர்ந்தான். வீடுபோய்ச் சேரும் உற்சாகம் சுக்குநூறாகச் சிதறிப் பேயிற்று. காற்றைப் போல் லேசாக இருந்த அவனது இதயம் இப்போது பாறாங்கல்லைப் போல கனத்தது. கண்ணீர் ஆறாகப் பெறுக, யாருக்கும் எதுவும் சொல்லாமல், தன் வீடு நோக்கிப் புறப்பட்டான். வழியில் சாப்பாடு, தண்ணீருக்கும் நிற்காமல் அன்றே நடுஇரவில் அவன் தங்களின் குடிசையின் எதிரில் வந்து நின்று, ''பெள்ளி... பெள்ளி...'' என்று கூப்பிட்டுக் கொண்டிருந்தான்.

## 9

நாளை போகனஹள்ளியின் பக்கத்து கிராமத்தில் ஆண்டுக்கொருமுறை வரும் திருவிழா உற்சவம். கடந்த ஆண்டு திருவிழாவுக்கு சோம தன் பிள்ளைகளையும் பெண்ணையும் அழைத்துக் கொண்டு போய் வந்தான். இந்த ஆண்டு பெரிய பிள்ளைகள் வீட்டுக்கு வந்தால் மகிழ்ச்சியோடு நாளைக் கழிக்கலாமே என்ற ஆசை மனதிலிருந்தது. பெள்ளிக்கும் அண்ணன்களைப் பார்க்க வேண்டுமென்னும் ஆவல்; அதிலும் குருவன் மீது சற்று அலாதியான அன்பு. அண்ணன் வந்தால் நாளைய திருவிழாக் குதூகலம் சொல்லி மாளாது என்று அவள் மனது எண்ணிக் கொண்டது. திருவிழா வெகுமதி கேட்க அன்று மாலை, தகப்பனும் மகளும் பண்ணையார் வீட்டிற்குப் போயிருந்தனர். எசமானரான சங்கப்பய்யா மலர்ந்த முகத்தோடு தலைக்கு அரையணா வீதம் தகப்பன், மகள்

இருவருக்கும் கொடுத்தார். கடைசியில் நீல - காள இருவரின் நினைவு வந்தது. இன்னொரு அணாவை எடுத்து, ''இந்தா, இது உன் சின்ன பிள்ளைங்க ரெண்டு பேருக்கும். அவங்க கையிலேயே கொடு, நீயே எல்லாத்தையும் குடிச்சி மெதக்க வேண்டாம்'' என்று கூறினார். சோம சிரித்தபடியே வீடு திரும்பினான். சாயுங்காலம் கஞ்சி குடித்து உடுக்கையை வாசித்தபடி உட்கார்ந்து பொழுது போக்கினான். கூடவே பெள்ளியும் மிகுந்த மகிழ்ச்சியோடிருந்தாள். பண்டிகையின் செலவுக்கென்று அவள் இரண்டு கூடைகளை முடைந்து வைத்திருந்தாள். அவர்களின் மகிழ்ச்சிக்கு சனிய - குருவ இருவரும் வராததொன்றுதான் பெரிய குறை. தூங்கப் போகும்போது சோம, ''இந்தவாட்டி, பசங்க ஊருக்கு வந்தா, இனிமேல அவங்கள தோட்டத்துக்கு திரும்ப அனுப்பப் போறதில்ல. என்னா ஆனாலும் ரெண்டு பேரும் சேந்து கடன தீத்துடுவாங்க. தீக்காமப் போனா, எருதுங்களையாவது வித்து நானே தீத்துடறேன்'' என்று சொல்லிக் கொண்டான். என்ன காரணத்தினாலோ பெரிய பிள்ளைகளைப் பிரிந்திருக்கிறோம் என்பது அவனது இருளடர்ந்த வாழ்க்கையை மேலும் இருட்டாக்கியது போலிருந்தது.

சனிய வந்து, வீட்டை அடைந்தது அதே இரவுதான். நாளை பக்கத்து ஊர்த் திருவிழா என்று அறிந்து வந்ததைப்போல வந்திருந்தான். வரும்போது நடுஇரவு கழிந்து போயிருந்தது. நடந்த களைப்பினால் குரல் உரக்க வெளிவரவில்லை. வந்தவன் இரண்டு மூன்று முறை தன் தங்கையை அழைத்தான். அவளுக்கு விழிப்பு வரவில்லை. கடைசியில் தங்கையை அழைப்பதை விட்டு ''யப்பா... யப்பா...'' என்று தகப்பனைக் கூப்பிட்டான். சோமனுக்குத் தூக்கம் வந்ததோ இல்லையோ கூப்பிட்டதும் விழித்துக் கொண்டான். ''யாரு...?'' என்றான். ''நாந்தான் சனிய...'' என்ற பதில் வந்ததும், படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து கதவைத் திறந்தான்; பரபரப்புடன் ''பெள்ளி பெள்ளி அண்ண(ன்) வந்திருக்கான் பாரு!'' என்று அவசரத்தில்

தடுமாறினான். இந்த ஓராண்டுக் காலத்தில், அப்போது ஏற்பட்ட அளவு ஆனந்தம் அவனுக்கு என்றைக்கும் ஏற்பட்டதில்லை.

பெள்ளி எழுந்து அடுப்பின் முன்னால் போய் ஏதாவது நெருப்புக்கட்டி கனன்று கொண்டிருக்கின்றதாவென்று ஊதிப் பார்த்தாள். எதுவும் இல்லை. இருப்பதற்கு அன்று சாயுங்காலம் அவர்கள் சமையல் செய்திருந்தால்தானே! வெளியில் வந்து, சுடுநீர் காய்ச்சிய அடுப்பில் ஏதாவது இருக்குமா என்று பார்த்தாள். அங்கேயும் நெருப்பு இல்லை. கொளுத்துவதற்குத் தீக்குச்சியும் இல்லை. ''அய்யோ... இருட்லயே ஒக்காந்திருக்கிறதா?'' என்றாள் பெள்ளி. சோம மகிழ்ச்சியில் ''சனிய, குருவ ரெண்டு பேரும் நல்லாருக்கிங்களா யப்பா?'' என்றான். உடம்பைத் தடவிப் பார்க்கும் ஆவல் மிகுந்தது. அந்த ஆவலில் முன்னால் கையை நீட்டினான். சனியனின் கை கிடைத்தது. ''யாரு...? சனியனா?'' என்று கேட்டான். ''ஆமா...'' என்ற பதில் வந்தது. கேட்ட கேள்விக்கு மேல் தகப்பன் எதிரில் பேசியறியாத பிள்ளைகள். இன்றைக்கோ எதுவும் பேச முடியாத நிலையில் சனிய!

''சனிய, நாளைக்கு பஞ்ஜத்து உச்சவம் தெரியுமா?''

''இல்ல...''

''ஆமா... நாளைக்குத்தான் திருவிளா... எசமான் ஆளுக்கு அரையணா குடுத்தாங்க. நீங்களும் சாயந்திரமே வந்திருந்தா இன்னும் ஒரணா கெடைச்சிருக்கும்! பெள்ளி...''

''ஆங்...''

''சொல்லு உங்கண்ணனுக்கு... அது எந்தப் பொண்ணுன்னு.''

பெள்ளி சிரித்து விட்டாள். சனியனுக்கும் புரிந்தது.

சோம மெதுவாக ''சனிய, சம்பந்தம் பேசி வச்சிருக்கிறேன். நீ வந்துட்டயில்ல... பெரியவங்க நடத்திக் குடுத்தா இந்த மளகாலத்துக்குள்ளயே உன் கல்யாணத்த முடிச்சிட்றேன். பொண்ணு பாக்றதுக்கு நல்லாருக்குது. நீயும் பாத்து இருப்பே... பஞ்ஜத்து மேல்கொப்பம் மொண்டனோட மக... அந்த பொண்ணு நாளக்கி திருநாளுக்கு வந்தே வருவா... நீயும் பாக்கலாம்.''

சனியனுக்கு பூரிப்பா, துக்கமா - யாருக்குத் தெரியும்? அந்த இருட்டு ஆதிக்கத்தில் எதையும் தெரிந்து கொள்ளும்படி இல்லை.

''கொளந்தே, குருவ... சாமி கண்ணத் தொறந்தா அடுத்த வருசத்துக்குள்ள உனுக்கும் கல்யாணம் பண்ணிடலாம். இந்த தடவயே தேடிப் பாத்தே(ன்). சரியான பொண்ணா கெடைக்கல. நமுக்கேத்த மாதிரி ஒத்து போறவங்க கெடைக்கணுமில்ல. எப்பிடியோ பொண்ணுன்னு இருந்துட்டாப் போதுமா? அப்பிடித்தான் மலமோட்டு கீளுகொப்பத்துல அந்த இவன் மக இருந்தாளே...

குருவனின் பேரைக் கேட்டதும், சனியனுக்கு உதறலெடுத்தது. பெள்ளிக்கு அவன் என்ன சொல்லப் போகிறானென்று கேட்கும் ஆவல் அதிகரித்தது. சனியனின் குரல் கேட்காததினால் பெள்ளி, ''யண்ணா உனுக்கு என்னாச்சி... அவ்வளவுக்கு சோந்து போயிட்டியா?'' என்றாள்.

சனிய நடுங்கிக் கொண்டே, ''குருவ வரல...'' என்றான். சோமனுக்கு அடிவயிறு கலங்கிற்று... 'அப்படியின்னா அவ(ன்) எங்க போனா(ன்)? ஊட்டுக்கு வந்து இந்த கௌவன பாக்கணும்ன்ற ஆச அவனுக்கில்லாம போயிடிச்சா? சும்மா நா(ன்) மட்டும் புள்ளைங்க புள்ளைங்கன்னு பெனாத்தினிருக்கிறேன்! இவனுங்களுக்கு மீச மொளச்சிடுச்சின்னா, திக்கு - தெச கண்ணுமண்ணு

தெரியாம போயிடும்!'' என்றான். ''அண்ண(ன்) அப்படியொண்ணுமில்ல, ஒருவேள தோட்டத்துக்காருங்க உடலியோ என்னுமோ?'' என்று பெள்ளி சமாதானப் படுத்தினாள்.

சனியனுக்கு இனியும் தான் மௌனமாக இருப்பது சரியென்று படவில்லை. வெளிப்படையாகப் பேசவும் துணிவில்லை. இருந்தாலும் தனக்குத் தெரிந்ததை யெல்லாம் சொன்னான். சொல்லி முடித்து, பெருமூச்சுவிட்டபடி உட்கார்ந்தான். பெள்ளிக்கு கோபம் வந்தது. ''குருவண்ண(ன்) என்னிக்கும் அப்படிப் பண்ண மாட்டா(ன்). இவனே என்னுமோ அவனோட சண்ட போட்டிருக்கணும்; ஊட்ல இருந்தப்பவே இவ(ன்) குருவனோட சண்ட போடாத நாளே இல்ல'' என்றாள். சோமனுக்கும் அப்படித் தானிருக்க வேண்டுமென்று தோன்றிற்று. மறுவிநாடியே, ''நாளைக்கு நானே போயி என் மகன கூட்டினு வர்றேன். நீ எதுனா அவனோட சண்ட போட்ட... அப்புறம் உன்ன... உன்ன சும்மா உடமாட்டே(ன்)! ஆமா...'' என்றான். வெளிச்சம் இருந்திருந்தால் சோம எவ்வளவு ஆத்திரத்தோடிருந்தான் என்பதைப் பார்த்திருக்கலாம். சனியனுக்கு, குரலிலிருந்தே தகப்பனுடைய கோபத்தின் வேகம் தெரிந்தது. ஆனால், அவன் என்ன செய்வான்? திரும்பத் திரும்ப அதே கதையைச் சொன்னான். ''அவ(ன்) கொக்கடத்து மாரியம்மா பின்னால போயிட்டான்'' என்றான். அவனுக்கு அழுகை வந்தது.

சனியனின அழுகை அவன் மீது தகப்பனுக்கு ஏற்பட்ட கோபத்தைத் தணித்தது. அவனும் தன் மனதைக் கட்டுப் படுத்திக் கொண்டு அவர்களின் காதல் விவகாரத்தைப் போதுமான விவரங்களோடு கேட்டறிந்தான். தன் மகன் அப்படிச் செய்வானென்று சோம நினைத்துக்கூட பார்த்ததில்லை. பேச்சோடு பேச்சாக - அந்த மாரியம்மா ஏசு மதத்தைச் சேர்ந்த மேரியம்மா - என்று தெரிந்ததும் அவன் இதயமே உடைந்து போயிற்று. 'பெரியவங்க நடந்துபோன

வளிமுறைய எல்லாம் உட்டுட்டு, ஒரு பொண்ணுக்காக தன் சாதிய உட்டுடறவன் மூஞ்சில இனி முளிக்க மாட்டே(ன்)' என்று சபதம் செய்தான். பெள்ளியால் பொங்கி வந்த அழுகையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. தனது செல்ல அண்ணன் சாதிவிட்டு வேறு சாதிப் பெண்ணை மணந்து கொண்டதால், இனி தன் குடும்பத்து நிழலைக்கூட தொட முடியாதே என்பது அவளுக்குத் தாங்க முடியாதச் சுமையாயிற்று. ''இது இப்பிடியாகுமுன்னு தெரிஞ்சதும் மொதுலே ஊருக்கு வந்து சொல்லியிருக்கக் கூடாதா?'' என்று அண்ணனைத் திட்டினாள். சனியனுக்கும் அப்படி தான் சொல்லாமல் போனது தப்புதான் என்று தோன்றிற்று.

வெளியே இப்போது நிலவொளி பரவியிருந்தது. குடிசையின் இருட்டில் ஒருவர் முகம் மற்றொருவருக்குத் தெரியாவிட்டாலும், வெளியே வெளிச்சத்தில் வந்து உட்காரும் விருப்பம் யாருக்கும் இல்லை. அந்தப் பௌர்ணமி நிலவும்கூட அவர்கள் கண்ணுக்கு அமாவாசையாகியிருந்தது; என்ன செய்வதென்று யாருக்கும் தெரியவில்லை. ஒருவேளை அவன் பெள்தங்கடியிலேயே வழிதவறிப் போயிருப்பான் என்று பெள்ளி இல்லாததைச் சொல்லி சமாதானப்படுத்த முயன்றாள். ஆனால், சனிய ''நான் ஊரெல்லாம் சுத்திப் பாத்துட்டே(ன்)'' என்றான் தன்னை நியாயப்படுத்திக் கொள்ள. 'சரி அடுத்து என்ன செய்வது? தங்களுடைய, சம்பந்தத்தை அறுத்துக் கொண்ட அந்த குருவனை அப்படியே விட்டுவிடுவதா? இல்லை, எப்பாடுபட்டாவது தேடிக் கண்டுபிடித்து அவனை அழைத்து வருவதா?'

அவன் எங்கிருந்தாலும் தேடிப்போய் அழைத்துக் கொண்டு வருவது நல்லதென்று பெள்ளி யோசனை கூறினாள். சோமனின் ஆத்திரம் இன்னும் அடங்கவில்லை. ''அவனே இவ்வளவுக்கு துணிஞ்சி போனபெறகு நாம என்னாத்துக்குக் கூப்புடணும்? எந்த 'குளிக'னோ 'பஞ்ஜுர்லி'யோ அவன முளுங்கிடிச்சுன்னு

நெனச்சிக்குவோம். கடவுளு எனுக்கு நாலு ஆம்பளபசங்கள குடுத்திருக்கிறான். அதுல ஒண்ணு போயிடிச்சி, அவ்ளோதான். ஒருத்தன் செத்துப் போயிருந்தா என்னா பண்ணியிருக்க முடியும்? அப்படித்தான்!'' என்று புலம்பினான். ஆனால், இந்த வைராக்கியம் எவ்வளவு நேரத்திற்கு இருக்கும்? பெற்ற வயிறல்லவா?! கோபம் வந்தாலும் ஒரு நொடிதான். அடுத்த விநாடியே அது கரைந்து காணாமல் போய்விடும். ''இல்ல, நானே போயி அவனத் தேடிப் புடிச்சி இளுத்துனு வர்றேன். அந்த 'மாரிய'காட்டிலும் அளகான பொண்ண அவனுக்குக் கட்டி வக்கிறேன்'' என்றான். சொன்னது மட்டுமல்ல, உடனே புறப்பட்டான். வானத்தில் வெள்ளி புறப்பட்டிருந்தது. திருவிழாவில் அது உதயமாவது வாடிக்கைதான். ''திருவிளா முடியட்டும் நாளைக்குப் போனா போதும்'' என்று பெள்ளி அடம் பிடித்தாள். ஆனால், கிழவன் கேட்டால்தானே. சனிய தானும் வருவதாகக் கிளம்ப, அவனையும் வரவிடாமல் அக்குளில் ஒரு தடியைச் சொருகிக் கொண்டு, கொக்கடத்திற்குப் போகும் பாதையை நோக்கிப் புறப்பட்டான்.

## 10

அன்று திருவிழா நாள்; ஊருக்கு ஊரே மகிழும் நாள்; எல்லாக் கவலைகளையும் மறக்கச் செய்யும் நாள். சோமனின் குடும்பத்தில் மட்டும் அது அழும் நாளாக மாறியிருந்தது. சோம கொக்கடத்துப் பாதையில் இறங்கியதும், மிகவும் தளரந்து போய் வந்திருந்த சனியன் படுத்துவிட்டான். அதற்குள் கோழியும் கூவிற்று. பெள்ளிக்கு உறக்கம் வரவேயில்லை. வெளியில் காட்டிலிருந்து ஏதோ ஓசை வந்ததைக் கேட்டு சோமனின் கருப்புநாய் குரைத்தது. அதனால் பெள்ளி, பொழுது நன்றாக விடியும் வரை உட்கார்ந்தே நேரம் போக்கினாள். தந்தையும் பிள்ளைகளும் சேர்ந்து முந்தின நாளே மாட்டுத்

ழ்வனத்தை நிறையவே அறுத்துக் கொண்டு வந்து போட்டிருந்ததால், இன்று அந்த வேலையும் இல்லை. அதனால் அவள் கஞ்சி காய்ச்ச, எசமான் வீட்டுக்கு நெருப்புக் கட்டி வாங்கிவரப் போனாள். அங்கே எல்லோரும் திருவிழா கோலாகலத்தில் இருந்ததால், தன் சோகத்தை வெளிப்படுத்திக் கொள்ள அவளுக்கு வாய்ப்பே இல்லாமல் போய், திரும்பி வந்து கஞ்சியைக் காய்ச்ச அடுப்பின் முன்னால் உட்கார்ந்தாள். பொழுது விடிந்ததும் சிறிய பிள்ளைகள் இருவரும் உற்சாகத்தோடு எழுந்து ஆடிப்பாடிக் கொண்டிருந்தனர். அக்காவிடம் சென்று ''சீக்கிரமா கஞ்சி காச்சிட்றயா? சாப்புட்டுட்டுத்தானே போகப் போறோம்? நாம ராத்திரியெல்லாம் அங்கயே இருக்கணும்'' என்றனர். பெள்ளியின் மனது எங்கெங்கோ திரிந்தது. அதனால் அவள் மவுனமாக இருந்தாள். பிள்ளைகள் விரைவாக எழுந்து ஏரிக்குச் சென்று குளித்துவிட்டு வந்தனர். வரும்போது அக்காவுக்கும் தங்களுக்கும் செவ்வரளிப் பூவையும் மற்றும் சில காட்டுப் பூக்களையும் பறித்துக் கொண்டு வந்தனர். சந்தோஷத்தோடு ஓடிவந்து, ''யக்கா, யக்கா உனுக்கும் பூ கொணாந்திருக்கோம். அப்ப(ன்) எங்க போனாங்க? திருவிளாவுக்கு ஜனங்க சேர்றதுக்கு முன்னாடியே போவ வாணாமா?'' என்றனர்.

அதற்கும் அவளிடமிருந்து பதிலில்லை.

தம்பிகளின் மண்கலங்களை எடுத்து வைத்தாள். அண்ணனிடம் சென்று ''யண்ணா எளுந்துரு'' என்றாள். அப்போதுதான் தம்பிகளின் கவனம் அண்ணனின் பக்கம் சென்றது. சனிய அண்ணனைக் கண்டதும் அவர்களின் உற்சாகம் மேலும் அதிகரித்தது. ஆனால், குருவ அண்ணனைக் காணாமல், ''குருவண்ண(ன்) எங்க?'' என்று கேட்டனர். ''அவ(ன்) வரல; ரெண்டொரு நாள்ல வந்துடுவா(ன்)'' என்றாள் பெள்ளி. பெள்ளிக்கு அந்த துக்கத்தைத் தம்பிகளுடன் பகிர்ந்து கொள்ள கொஞ்சமும் விருப்பமில்லை.

பிள்ளைகள் சாப்பாட்டிற்கு உட்கார்ந்தனர். சாப்பாடு என்ன, ஒரு நிமிடத்து வேலை! அவர்கள் எழுந்து கொள்வதற்குள் சனிய முகத்தைக் கழுவிக் கொண்டு வந்தான். ''வரும்போது சோறு தண்ணியில்லாம ரொம்ப வாடிப் போயிருப்ப. சாப்புடு... எல்லாம் சரியாயிடும்!'' என்றாள் பெள்ளி. சனியனும் சாப்பிட வந்து உட்கார்ந்தான். அவர்களின் உணவு முடிந்தது. தம்பிகள் - ''நம்ம அப்ப(ன்) எங்க? இன்னும் எப்பொ நாம திருவிளாவுக்குப் போறது?'' என்று சிணுங்கத் தொடங்கினர். அவர்கள் வீட்டு முன்னால்தான் திருவிழா நடக்கும் 'பஞ்ஜ'த்து ஊருக்குப் போகும் பாதை இருந்தது. அந்த வழியாக நிறைய பேர் போய்க் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்து பிள்ளைகள், ''அங்க பாரு, எல்லாரும் போறாங்க... நாம மட்டும் திருவிளா எல்லாம் முடிஞ்ச பின்னால போவப் போறமா?'' என்று கேட்டனர். பிள்ளைகளின் ஆவலைக் கண்டு பெள்ளிக்கு ஒருபுறம் மனம் சங்கடப்பட்டது; மறுபுறம் பாவமாக இருந்தது.

கொஞ்சம் தேங்காயெண்ணெயைக் கொண்டு வந்து அவர்களின் தலைகளில் தடவி தலைமுடியை, பெண் பிள்ளைகளைப் போல வாரி, தலை பில்லை வைத்து, பூ முடித்து ''நீல... நீயும் காளனும் திருவிளாவுக்கு முன்னாடி போங்க, அப்ப(ன்) ஊட்டுக்கு வர்றதுக்கு நேரம் ஆவும், வந்ததும் நாங்க பின்னாடியே வர்றோம்!'' என்றாள். பிள்ளைகள் உற்சாகத்தோடு புறப்பட்டனர். ''யக்கா காசு? பண்ண எசமான் பண்டிகக்குன்னு துட்டு குடுத்தாங்கன்னியே!'' என்று நினைவுபடுத்தினர். பெள்ளி அரையணாவைக் கொண்டு வந்து அவர்களிடம் கொடுத்து ''இது உங்க ரெண்டு பேருக்கும் சேத்து, போனவொடனே செலவு பண்ணிடாதீங்க... நா(ன்) வந்த பின்னால வேணுன்றதயெல்லாம் வாங்கிக் குடுக்கிறேன்'' என்றாள். பிள்ளைகள் மிகுந்த மகிழ்ச்சியுடன் புறப்பட்டுப் போனார்கள். போகும்போது ஏதோ நினைவு வந்தவர்களாக திரும்பி வந்து ''ஏ... சோணீ...'' என்று கூப்பிட்டனர்.

அப்போது சோணி நாய் ஓடி வந்தது. ''யக்கா... யக்கா, சோணிக்கு கஞ்சி ஊத்திட்டியா?'' என்று கேட்டனர். பெள்ளி கோபத்தில் ''சோணி அங்க எதுக்கு?'' என்று கேட்டாள். இருந்தாலும் அவர்களின் ஆர்வத்தைத் தணிக்க சோணிக்கும் கொஞ்சம் கூழை ஊற்ற வேண்டியதாயிற்று. பிள்ளைகளும் திருவிழாவுக்குப் புறப்பட்டுப் போனார்கள்.

பெள்ளியின் மனதில் திருவிழாவுக்குப் போகும் ஆசை நேற்று இரவு வரை இருந்தது. குருவனின் கதையைக் கேட்டு அவளது உற்சாகமெல்லாம் வடிந்து போயிற்று. அதுவும், தகப்பனில்லாமல் தானும் திருவிழாவுக்குப் போவது சரியாகப் படவில்லை. பிள்ளைகளை வீட்டுக்கு அழைத்துவர பகலுக்குள் திருவிழாவுக்குப் போகும் அண்ணனிருக்கிறானில்லையா என்று எண்ணிக் கொண்டாள். அண்ணன் சாப்பிட்டு விட்டு உடம்பு வலியென்று பாயின் மீது படுத்தான். பெள்ளி சென்று அவன் உடம்பைத் தொட்டுப் பார்த்தாள். காய்ச்சலடித்துக் கொண்டிருந்தது. ''இது மலகாச்சலாத்தான் இருக்கணும், நேத்தெல்லாம் நடந்து நடந்து உடம்பு அலுண்டு போச்சில்ல, அதனாலதான்!'' என்றாள். ஆனால் மலைக் காய்ச்சலைப் போல, நான்கு நாழிகைக் கடந்தும் விடாமல் ஒரே சீராக காய்ச்சல் வாட்டிக் கொண்டேயிருந்தது. என்ன செய்வதென்று அவளுக்குத் தோன்றவில்லை. சனிய 'முடியலியே... முடியலியே' என்று தொண்டை நீர் வற்றிப் போய் முணகிக் கொண்டிருந்தான். பெள்ளி மிகவும் கலவரமடைந்து, எங்கேயாவது போய் 'கணி-குறி' கேட்டு வரலாமென்று புறப்பட்டாள். ஆனால், ஊரில் யாரிருக்கப் போகிறார்கள்? எல்லோரும் திருவிழாவுக்குப் போயிருப்பார்களே! மருந்து, கசாயம் ஏதாவது செய்யலாமென்றாலும் அதே நிலைமைதான். இந்த நேரத்தில் பிள்ளைகளை திருவிழாவுக்கு அனுப்பியதே தப்பாகி விட்டது என்று எண்ணிக் கொண்டாள். அவர்களை யார் திரும்ப அழைத்து வருவது? என்ற கவலையும் சேர்ந்து கொண்டது.

பெள்ளியும் அண்ணன் படுத்திருந்த பாயின் அருகில் அமர்ந்தாள். அவளது ஆசை எவ்வளவு பெரிதாக இருந்தது! அண்ணனுடன் திருவிழாவுக்குப் போய் தன் வருங்கால அண்ணியைக் காட்டி கேலி செய்யலாமென்றிருந்தாள். இப்போது? அதே அண்ணன் கிழிந்த பாயின் மீது காய்ச்சலில் வாடிக் கொண்டிருக்கின்றான். 'முடியலியே, முடியலியே' என்று ஒரே சீராக வேதனையின் முனகல் அவன் வாயிலிருந்து வந்தது. நடுப்பகல் தாண்டியதும் ''நான் பொளைக்க மாட்டேன்; செத்துப் போயிடுவேன்... யப்பா!'' என்று அரற்றத் தொடங்கினான். பெள்ளியின் கொஞ்ச நஞ்ச துணிவும் கரைந்து போயிற்று. அவள் கிராமத் தேவதைக்கு இரண்டு தேங்காயை முடித்து வைத்தாள். அண்ணனின் கத்தல் அதிகமானதும் தெய்வத்துக்கு இரண்டு கோழிகளை கொடுப்பதாக நேர்ந்து கொண்டாள்.

மாலையாகியும் அண்ணனின் நிலைமையில் எந்த மாற்றமும் இல்லை. உடம்பு கொதித்துக் கொண்டே இருந்தது. திருவிழாவுக்கு போன சிறுவர்கள், அண்ணனும் அக்காவும் வருவார்கள் என்று நெடுநேரம் காத்திருந்து சோர்ந்து போனார்கள். கடைசியில் தங்கள் விருப்பம்போல் சுற்றி அலைந்தனர். மாலைச் சூரியன் மறைவதைக் கண்டதும் ''இனிமே அவுங்க வரமாட்டாங்க'' என்று சந்தேகம் வந்து, திருவிழாவைப் பாதியிலேயே முடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தனர். வீட்டுக்கு வரும்போது தங்களிடம் பொய் சொன்ன அக்காவின் மீது மிகவும் கோபம் கொண்டிருந்தனர். ஆனால், வீட்டு நிலைமையைக் கண்டதும் பயந்து விட்டனர். அதிலும் தகப்பன் அருகில் இல்லாததால் மேலும் பயம் அதிகரித்தது.

ஒருநாள் இப்படியே கழிந்தது. காய்ச்சலினால் சனியனின் முகம் சுட்டக் கத்தரிக்காயைப் போல சுருங்கிப் போயிருந்தது. மறுநாள் பொழுது விடிந்ததும் பெள்ளி புல் அறுத்துவரத் தம்பிகளை அனுப்பிவிட்டு அண்ணன் சற்று தூங்கிய நேரத்தில் தன்னிடமிருந்த ஓரணா காசை எடுத்துக்

கொண்டு ஊரின் மறுகோடியிலிருந்த சாமியாடி சின்னானைத் தேடிப் போனாள். சாமியாடி சின்னான் என்றால் அவனும் அவ்வூரின் புலையன்தான். ஆனால், புலையர்களில் பார்ப்பனப் புலையன் இருப்பதைப்போல அவன்! மற்ற புலையர்களுக்கு மருந்து, மாயம், மந்திரங்கள் செய்யும் புரோகிதன் அவன். போனவள் உடனே சின்னானை உரக்கக் கூப்பிட்டாள். சின்னான், நேற்று திருவிழாவுக்குப் போனவன் இன்னும் வரவில்லை. வந்துவிடுவான் என்று அவன் மனைவி சொல்லியதால் பெள்ளி அங்கேயே உட்கார்ந்து காத்திருந்தாள். பொழுது விடிந்து நெடுநேரம் ஆனபிறகு சின்னான் மெதுவாக வந்தான். வந்தவன் கள்ளில் மிதந்து கொண்டே வந்தான். அவன் முன்னால் ஓரணாவை வைத்து, பெள்ளி தன் அண்ணனின் நிலையைப் பற்றிச் சொன்னாள். இவள் சொன்னதைக் கேட்டு புரிந்து கொள்ளவும், தன் நினைவை தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளவும் சின்னானுக்கு இன்னும் சற்று நேரம் பிடித்தது. அதன்பிறகு அவன் என்னென்னவோ குச்சி, பட்டை, பூக்களைக் கொண்டு வந்து, உட்கார்ந்து, நின்று - மாய மந்திரங்களையெல்லாம் செய்து தன் கம்பீரமான குரலில் ''பஞ்ஜுர்லி'' சாமிக்கு (பூதகணம்) நேந்துக்கணும் - கோளி குடுக்கணும், பன்னி குடுக்கணும், அரிசிக் குடுக்கணும்'' என்று அந்த பூதத்தின் சார்பாக இவனே பெரிய தர்பாரையே நடத்திக் கட்டளைகளை பிறப்பித்தான்.

பெள்ளி, ''பஞ்ஜுர்லி! நீயே எங்க குடும்பத்த காப்பத்தணும்'' என்று வேண்டிக் கொண்டு தன் குடிசைக்குத் திரும்பினாள்.

மற்றொரு நாளும் கழிந்தது. காய்ச்சலோடு மார்பு வலியும் சளியும் சேர்ந்து கொண்டன. மறுபடியும் அவள் சின்னானின் வீட்டுக்கு ஓடினாள். அவன் சொன்னான்: ''அதுக்கு மருந்து ஒண்ணும் வாணாம். சளி அறுந்து வந்தா,

சனிய துள்ளி ஒக்காந்துடுவான்'' என்று. பெள்ளிக்கு என்ன மருத்துவம் தெரியும்? அண்ணன் கேட்டதை, தன்னிடம் இருந்ததைக் கொடுத்து, அவனுக்கு சேவை செய்து கொண்டு உட்கார்ந்திருந்தாள். எசமான் வீட்டிலிருந்து இந்த நேரத்தில் ''சோம... சோம...'' என்ற அழைப்பு வந்தது. அதனால், அதையே வாய்ப்பாக்கிக் கொண்டு தம் வீட்டு நிலைமையையும் தகப்பன் கொக்கடத்துக்குப் போன சங்கதியையும் சொல்லிவிட்டு வந்தாள். அவர்களும் அதைக் கேட்டு வருத்தப்பட்டனர். அதற்கும் அதிகமாக என்னதான் செய்வார்கள்?

காய்ச்சல் வந்து நான்காவது நாள், சனியனின் தொண்டை சளியினால் கட்டிக் கொண்டு மூச்சுத் தடுமாறியது. அவனால் பேசவும் முடியவில்லை. சின்னானை வீட்டுக்குக் கூட்டிவர பெள்ளி தம்பிகளை அனுப்பினாள். சின்னான் காலையிலேயே கள்ளுக்கடைக்குப் போய் விட்டிருந்தான். காளனும் நீலனும் அங்கேயே போய் அவனை வற்புறுத்தினர். ''இன்னிக்கு ஒண்ணும் பண்றது வாணாம். நாளு நல்லால்ல. நாளைக்கு காத்தால வர்றேன். ஒரு சாந்திகளுப்பு* களிச்சிடலாம'' என்றான். அதற்காக, ''ஒரு வாழைத்தண்டு, பூசணிக்காய், எல்லாந் தயாராயிருக்கட்டும்'' என்று சொல்லி அவர்களை அனுப்பி வைத்தான். அவர்கள் ஏமாற்றத்துடன் குடிசைக்கு வந்தனர். வரும்போது பெள்ளி அண்ணனின் பிணத்தைக் கட்டிப் பிடித்து, கதறிக் கதறி அழுது கொண்டிருந்தாள். நீலனும் காளனும் அவளுடன் சேர்ந்து அழத் தொடங்கினர். மகன் கண்ணை மூடிய சிறிது நேரத்தில் பாவம் சோமனும் குடிசைக்குத் திரும்பினான். அவன் கொக்கடத்தை அடைவதற்கு முன்பே, மாரிக்கும் குருவனுக்கும் திருமணபந்தம் ஏற்பட்டு எல்லாம் முடிந்து போயிருந்தது. அதற்கான எல்லா ஏற்பாடுகளையும் செய்து

* சாந்தி களுப்பு: பேய் பிசாசுகளின் சேட்டைகளைப் போக்க செய்யும் ஒரு சடங்கு

கொண்டுதான் குருவ தப்பித்துப் போயிருந்தான். இவையெல்லாவற்றினாலும் கனத்துப் போயிருந்த சோமனின் இதயம், வீட்டில் நடந்திருந்த இந்த பயங்கரக் காட்சியைக் கண்டு உடைந்தே போயிற்று. பெள்ளி எல்லாவற்றையும், அழுதழுதே சொல்லி முடித்தாள்! பஞ்ஜுர்லிதான் தங்கள் மீது கோபித்துக் கொண்டிருக்கிறான் என்பதாகவே சோமனின் ஊகம் வலுத்தது. அவன் ஒரேயடியாக பித்துப் பிடித்தவன் போலாகி விட்டான். மகனின் வாடிய முகத்தைப் பார்த்தபடி அங்கேயே உட்கார்ந்தான். அவன் பார்வை எதிரிலிருந்த சுவற்றில் தொங்கிய தன் உடுக்கையின் மீது படிந்தது. பாய்ந்து சென்று அதை எடுத்து அடிக்கத் தொடங்கினான்.

பிணத்தின் எதிரிலும் சங்கீதமா? பெள்ளிக்கு அடக்க முடியாதக் கோபம் வந்தது. ஆவேசமாகத் தகப்பனிடம் சென்று ''உன் உடுக்க நாசமாப் போவ! அதுக்கு நேரங்காலம் கெடையாதா?'' என்று கர்ஜித்தாள். உடுக்கையைப் பிடுங்கிக் கொண்டு வந்து வெளியே எறிந்தாள். அன்று தன் தகப்பன் மனிதனாகவே இல்லை என்பது, பாவம் பெள்ளிக்கு எப்படித் தெரியும்? அவள் ''இப்பொ, எல்லாம் முடிஞ்சி போச்சில்ல... அப்புறம் என்னாருக்குது?'' என்று கேட்டாள். சோம கேலியாகச் சிரித்து, ''எல்லாம் இப்பதான் தொடங்குது அவ்ளதான். எல்லாம் முளுசாவறதுக்கு நான் இல்லியா, நீயும் இல்லியா!'' என்றான். ஒரு பக்கம் நீலனும் காளனும் அழுது கொண்டேயிருந்தனர். மறுபக்கமிருந்து சோணி நாய், தரையில் முகத்தை அழுத்திக் கொண்டு படுத்திருந்தது. அதன் கண்களிலும் கண்ணீர்த் துளிகள்! கொட்டாயில் கட்டியிருந்த எருதுகளைக் கவனிக்காமலேயே நாள் ஒன்று கழிந்தது. இனி அன்று மாலைவரை யாரும் யாரையும் உபசரிக்கும் நிலையில் இல்லை.

பிறகு, சோம சுற்றுமுற்றுமிருக்கும் புலைச்சேரிகளுக்குச் சென்று தெரிந்தவர்களை அழைத்துக் கொண்டு

வந்தான். சனியனின் சவ அடக்கம் அந்த மாலைக் குள்ளேயே நடந்து முடிந்தது. வந்திருந்தவர்களெல்லாம் அவனது துர்பாக்கிய நிலையைக் கண்டு மனங்கலங்கி தத்தம் வீட்டை நோக்கி நடந்தனர். சோம குடிசையின் முன் வாசலில் ஒரு காய்ந்த மரத்துண்டின் மீது தலையைச் சாய்த்து உட்கார்ந்தான். முகத்தில் உயிர்க்களையே இல்லை. கண்கள் எதைப் பார்த்துக் கொண்டிருக்கின்றன என்று அவைகளுக்கே தெரியாது. உட்கார்ந்திருந்தவன் அப்படியே எழுந்து, நின்று, பரபரவென்று நடைபோட்டுப் புறப்பட்டுப் போனான். இருள் மண்டிக் கிடந்தது. பெள்ளியும் அவள் தம்பிகளும் அழுது அழுது மிகவும் சோர்ந்து போய் அப்படியே படுத்து விட்டனர். படுத்திருந்த பெள்ளிக்கு அரைத் தூக்கத்தில் எருதுகளின் நினைவு வந்து சட்டென்று விழிப்பு வந்தது. அவசரமாக எழுந்து போய், கொட்டகையின் கதவைத் திறந்து, எருதுகளின் முன்னால் புல்லை உதறிவிட்டு வந்தாள். நான்கைந்து நாட்களாக தூங்காமலிருந்ததால் படுத்தவுடனே உறக்கம் கண்களை அழுத்தியது.

நள்ளிரவில் காதருகிலேயே உடுக்கையின் ஒலி கேட்டு விழிப்பு வந்தது. புதிதாக என்ன பார்ப்பது, சோமனின் உடுக்கை மறுபடியும் ஒலிக்கத் தொடங்கியுள்ளது! மகன் கடைசியாக உயிர்விட்ட இடத்திலேயே உட்கார்ந்து சோம உடுக்கை வாசித்துக் கொண்டிருந்தான். அப்பா! எவ்வளவு குரூரமான ‘டமடம்ம... டமடக்க...’ நாதம் அது! வாயிலிருந்து பாட்டொன்றும் வந்து கொண்டிருந்தது. அவனது குரலின் போக்கிலிருந்தே அவன் நிறையக் குடித்திருக்க வேண்டுமென்று தோன்றியது.

அவனது உடுக்கையின் அடிக்கு தம் வீட்டில் தூங்கிக் கொண்டிருந்த சங்கரப்பய்யாவுக்கும் விழிப்பு வந்துவிட்டது. அவருக்கு சனிய இறந்துபோன செய்தி எட்டியிருந்தது. அன்றைக்கே உடுக்கையின் ஒலியைக் கேட்டதும் ஆச்சரியமாக இருந்தது. ‘‘அப்பா! எப்பேர்பட்ட

ராட்சசன் இவன்! இவன் உடுக்கைக்கு நாளும் கிடையாது! கிழமையும் கிடையாது! மகன் செத்த நாள்! இருந்தாலும் உடுக்கையை அடிக்கிறானே?! ஒருவேள மூக்குமுட்ட குடிச்சிருக்கானோ என்னமோ?'' என்று எண்ணிக் கொண்டார். உண்மைதான், அந்த இரவு சோம அதை விடவும் நிறையவே குடித்து விட்டு வந்திருந்தான். வேறு எதுதான் அவனது வேதனையை மறக்கச் செய்யும்?

## 11

சனிய இறந்து எட்டு நாட்களாகி யிருந்தன. சோமனின் மனது சொல்ல முடியாத அளவுக்கு என்னவோ ஆகியிருந்தது. ஒருவகையில் அவன் மனது கல்லாகிப் போயிருக்கிறது என்று சொன்னாலும் பொருந்தும். நாளுக்கொரு தொல்லையாக தொடர்ந்து வந்து கொண்டேயிருந்ததால், ஒவ்வொரு தொல்லையையும் மனதில் போட்டுக் கொள்ள முடியுமா? தினமும் அபீமைச் சாப்பிடுபவர்களுக்கு சாதாரண கஞ்சாவினால் போதை ஏறுவதில்லை. துன்ப - துயரங்களும் அப்படித்தான். வீட்டில் எப்போதும் ஏதாவதொரு கவலை தொடர்ந்து வரும்போது சாவும்கூட சாதாரண நிகழ்ச்சியாகப் போய்விடுகிறது. சோமனின் நிலையும் அதுதான். ஆனால், பெள்ளியின் நிலையோ நேர் எதிரானது; வாழ்க்கையின் மேடு பள்ளங்களை, சுக- துக்கங்களை அவ்வளவு எளிதாக ஏற்றுக் கொள்ளும் பக்குவத்தை அவள் அடையவில்லை. அடையும் வழியை கற்றுணரும் வயசும் இல்லை. அவளுக்கும் உலக அனுபவங்கள் ஏற்பட வேண்டும். ஒரு அண்ணனின் பிரிவும், மற்றொரு அண்ணனின் மரணமும் ஆராத ரணமாக அவளது மனதை வாட்டின. ஆனால், வாய்விட்டு யாரிடமும் சொல்லிக் கொள்வதில்லை. யாரிடம் சொல்ல முடியும்? தம்பிகளுக்கு பக்குவம் போதாது. அண்ணன் இறந்து இரண்டு நாட்கள் அழுது கொண்டிருந்தனர். மூன்றாம் நாளே அன்றாட

வேலைகளைச் செய்யவும் விளையாடவும் தொடங்கி விட்டனர். தகப்பனுடன் பேச முடியுமா? ''உனக்கு பிரம புடிச்சிருக்குது. அதுக்கெல்லாம் அழுதுனு இருந்தா ஆவுதா? அவங்க ரெண்டு பேரும் போயிட்டா என்னா? நீயில்லையா? நம்ம நீலனும் காளனும் இல்லியா? எல்லாரும் போக வேண்டியவங்கதான். நானும் போவேன், கடசிவரைக்கும் இங்க இருக்கிறவங்க யாரு?'' என்பான். பேசுவதற்கு மிகவும் சுலபமான வேதாந்தம்! புரிந்து கொண்டு தெளிவதற்கு மிகவும் கடினமானது. சோமனைப் பொருத்த வரையில் அது மிகவும் சாதாரணத் துயரம்தான். அந்த ஒரு விநாடியில் அவன் மனது துயரத்தில் துவண்டாலும் உலகத்தையே மறந்துவிடச் செய்யும் உடுக்கை அவனிடம் இருக்கிறதே! அவன் உடம்புக்கும் உடுக்கைக்கும் இடையில் கள்ளு என்னும் பாலத்தைக் கட்டிவிட்டால் ஆயிரம் இறப்புகளையும் துச்சமாகக் கருதலாமே!

இப்போது இரண்டாவது மழைக்காலம் வந்தே விட்டது. சங்கப்பய்யா சோமனுக்குச் சொல்லியனுப்பினார். சோமன் நேராகச் சென்று ''என்னா எசமா(ன்)'' என்றான். ''நாளைக்கு ஏருபூட்ட வந்துடு'' என்று உத்தரவிட்டார். சோம லேசாகச் சிரித்துவிட்டு, வீட்டுக்கு வந்து உடுக்கையை வாசிக்கத் தொடங்கினான். இருட்டியது. எல்லோரும் சிறிதளவு கஞ்சித் தண்ணியைக் குடித்தனர். கஞ்சியை மீறிய அறுசுவையுணவு அவர்கள் வாழ்க்கையில் இல்லை. ஒரேயடியாக இல்லையென்று சொல்லிவிட முடியாது. பண்ணையார் வீட்டில் ஏதாவது விருந்து, பண்டிகை, படைசல், விசேஷம் என்றால் அவர்கள் உண்டபின் எறியும் எச்சிலிலைகள் இருந்தே இருக்குமே. ஆனால், அது அபூர்வமாகக் கிடைக்கும் ஒட்டுமாம்பழத்தைப் போல. ஆண்டு முழுவதும் நாள்தோறும், விரும்பும் போதெல்லாம் கைக்கு கிடைக்கும் பொருளல்ல. இருக்கட்டும்! சோமனின் மனது அவன் ஒருவனே உடுக்கையை அடிப்பதில் நிறைவு காணவில்லை.

பெள்ளியை அழைத்து ''பாட்டு பாடு பெள்ளி...'' என்று கேட்டான். அவளுக்கு இப்போது பாட்டும் வேண்டாம்; ஒன்றும் வேண்டாம் என்று தோன்றியது. ஆனால், தன் வயதானத் தகப்பனின் மனம் வாடாமல் பார்த்துக் கொள்வது தன் கடமையென்றும் அவள் உணர்ந்திருந்தாள். வெளியில் பௌர்ணமிப் பால்நிலவு ஒளியை உமிழ்ந்திருந்தது. செலவில்லாத விளக்கு, ஏழைகளின் கைப்பந்தம். சோம மகளிடம் ''வா, இங்க எதுக்கு இருட்டுல ஒக்காந்திருக்கிறது? நெலா காயுது. வெளியில போவலாம்'' என்றான். பெள்ளியும் வெளியே வந்தாள். வெண்ணிலவில் அவள் பாடத் தொடங்கினாள். குடிசையின் முன்னாலிருந்த உயரமான மாமரத்து இலைகளின் இடைவெளியில், தகப்பன் - மகளின் ஒய்யாரக் கூத்தை நிலவும் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தது. சோமனுக்கு இன்னும் முழு உற்சாகமும் வரவில்லை. தன் வாசிப்பைக் கேட்டு அவனே அலுத்துக் கொண்டான். இரண்டு மூன்று முறை 'என்னுமோம்மா - மனசே சரியில்ல' என்றான். ''அப்படின்னா வா, போய் படுத்துத் தூங்குவ'' என்றாள் பெள்ளி. ''வாணாம், தம்பிங்கள கூப்புடு'' என்றான்.

பெள்ளி குடிசையின் உள்ளே போய்ப் பார்த்தாள். நீலனும் காளனும் அரைத் தூக்கத்திலிருந்தனர். அவள் திரும்பி வந்து ''தூங்கினுருக்குதுங்க'' என்றாள். ''தூங்கினுருந்தா எளுப்பக் கூடாதா?'' என்றான் சோம. தகப்பனின் போக்கு சற்று விநோதமாகத் தெரிந்தது. இன்று ஏதோ புதுக் கவலை அவனைத் தொத்திக் கொண்டிருக்கிறது என்று சந்தேகித்தாள். அவன் அருகில் போய் நின்றாள். வாயிலிருந்து கள்ளு வாசனைக்கூட வெளிவரவில்லை. அவள் இன்னமும் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து அவன் ''உனுக்கு சொன்னது கேக்கலியா?'' என்றான். பெள்ளி வேகமாக உள்ளே போய் காள, நீல இருவரையும் எழுப்பினாள். பிள்ளைகளுக்கு நல்ல தூக்க மயக்கம். இருந்தாலும் வலுக்கட்டாயமாக எழுப்பி, கண்ணுக்குத் தண்ணீர் தெளித்து ''வாங்க, அப்ப(ன்)

கோவமாருக்கிறாங்க'' என்றாள். தகப்பனின் பெயரைக் கேட்டு பிள்ளைகள் பயந்து எழுந்து விட்டார்களென்றும் கூறலாம். மூவரும் வெளியே வந்தனர். சோம உடுக்கையின் நாதத்தை சரி செய்து ''பாடு பெள்ளி'' என்றான். பெள்ளியும் பாடத் தொடங்கினாள்! பிள்ளைகளை ஆடும்படி உத்தரவிட்டான். இரண்டு பேரும் தூக்கக் கலக்கத்திலேயே அடி வைக்கத் தொடங்கினர். ''சரியா அடி போட்டு ஆடுங்க'' என்று அவர்களை அதட்டினான். பிள்ளைகளும் முடிந்தவரை விழிப்போடு அடிபோட்டு ஆடத் தொடங்கினர். சோம வேக நடையில் அடிக்கத் துவங்கினான். உடுக்கையின் தாளத்துக்கு சரியாக அவர்களால் ஆட முடியவில்லை. கோபத்தில் பல்லைக் கடித்து ''உங்க காலுக்கு என்னா கேடு வந்துது?'' என்று மீண்டும் அதட்டினான். சிறுவர்கள் பயந்து பயந்து ஆடினார்கள். சோமனுக்கு மிகவும் ஆத்திரம் வந்தது. எட்டி வந்து அவர்களை இழுத்துப் பிடித்து, முதுகில் நான்கைந்து குத்துக்களை வைத்தான். பெள்ளி வந்து தடுக்காதிருந்திருந்தால் பிள்ளைகளின் பாடு என்னவாகியிருக்குமோ? அவனது ஆவேசத்தைக் கண்டு பெள்ளிக்கும் மனது தாளவில்லை. ''போயி படுத்துக்குங்க கண்ணுங்களே!'' என்றாள். அவர்கள் ஓடிப்போய் குடிசையில் நுழைந்து கொண்டனர். சோமனின் ஆவேசம் பீரிட்டுக் கிளம்பியது.

''போனா அவங்க உசிரயே எடுத்துடுவே(ன்). ஆடுங்கடா... உங்களுக்கு ஆடறதுக்கு வருதா இல்லியா பார்க்கலாம்'' பிள்ளைகள் திரும்பி வந்து பயத்தில் நடுங்கியவாறு நின்றனர். பெள்ளி ஏதாவது பயங்கரமாக நடந்துவிடுமோ என்று அஞ்சினாள். ''அதுங்க பாவம் தூக்கத்துல என்னாத்த ஆடறது? சும்மா அதுங்க உசிர எடுக்காத. தெய்வம் மிச்சம் வச்சிருக்கிற இந்த ரெண்டு புள்ளைங்களயாவது நல்லபடியா பாத்துக்கக் கூடாதா?'' என்றாள்.

''தெய்வம் புள்ளைங்க! அதுங்க யாரு புள்ளைங்க? சாமியோட புள்ளைங்களா? எ(ன்) புள்ளைங்களானா ஆடட்டும். சாமி புள்ளைங்களானா போயி சாவட்டும்'' என்றான் சோம. இவ்வளவு நடந்தும் அவன் ஆவேசம் அடங்கவில்லை. எழுந்து போய் அந்த சின்னஞ்சிறுசுகளின் முடியைப் பிடித்து இழுத்து வந்து, தரையில் சுருண்டுவிழும்படி தள்ளி, ''நீங்க ஆடாமப் போனா உங்க பொணத்துமேல நானு ஆடறே(ன்)'' என்று அவனே ஆடவும் தொடங்கினான். பெள்ளிக்கு சுரீர் என்று கோபம் வந்தது. அவள் தகப்பனை இழுத்துப் பிடித்துக் கொண்டு பிள்ளைகளைப் பார்த்து ''ஊம்... உள்ள போங்க... நீங்க இங்கயே இருந்தா உங்க உசிரு தங்காது. யப்பா உனுக்கு ஆடணும்னுயிருந்தா என்மேல ஆடிடு! குடிச்சிட்டு அந்த ரெண்டு எளசுங்க உசிர எடுக்காதெ!'' என்று அதட்டினாள். அவள் பேச்சிலிருந்தக் கடுமை, கண்களின் உருட்டல் எல்லாம் சோமனின் மனதில் பயத்தை ஏற்படுத்தியது.

எவ்வளவு மூர்க்கமாக இருந்தானோ அதே அளவுக்கு தணிந்து போனான். பெள்ளி, அவன் குடித்து விட்டு வந்ததுதான் இதற்கு காரணம் என்று புரிந்து கொண்டாள். நாளை பிருமபூசாரியிடம் போய் தன் தகப்பனுக்கு நினைவு தடுமாறும் அளவு கள்ளு விற்றால், அவன் கடையையே கொளுத்தி விடுவேனென்று மிரட்டிவிட்டு வர முடிவு செய்து கொண்டாள். தகப்பன் மேலிருந்த வெறுப்பினால், குடிசைக்குள் வந்து கதவைச் சாத்திவிட்டுப் படுத்துக் கொண்டாள்.

சோம மாமரத்தடியில் உட்கார்ந்திருந்தான். உடுக்கை ஒரு பக்கமாக விழுந்து கிடந்தது. உள்ளேயிருந்த ஆவேச அலைகள் மறைந்து சோமனின் மனதில் கேள்வியலைகள் உருண்டு கொண்டிருந்தன. கேள்வி ஒன்றேதான்! ''இனிமேலயும் என் எருதுங்கள பூட்டி எசமான் நெலத்த உழுவணுமா?'' என்பது. தான் விவசாயி ஆகவேண்டும் என்னும் அந்த ஒரு ஆசை இன்னமும் அவன் மனதிலிருந்து

மறைந்து போகவில்லை. எதை வேண்டுமானாலும் அவன் மனது மறந்துவிடும். ஆனால், இதை மட்டும் ஏன் மறக்க முடியவில்லையோ தெரியவில்லை. ''தனக்கில்லாத கவளம் மற்றவர்களுக்கெதற்கு?'' என்று அவன் தன் அந்த இரண்டு எருதுகளைக் குறித்து யோசித்துக் கொண்டிருந்தான். தனக்குள்ளாகவே பேசிக் கொண்டு கொட்டாய் அருகில் சென்றான். அங்கு எருதுகளுடன் நீண்ட நேரம் வரை பேசிக் கொண்டிருந்தான். எப்போது அது முடிந்ததோ, என்ன கதையோ! பொழுது விடியும் போது மாமரத்தடியில் சோம படுத்துக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான். பெள்ளி வெளியே வந்தவள் அவனை எழுப்பவும் இல்லை. எருதுகளை மேய்ச்சலுக்கு அவிழ்த்துவிட கொட்டாய்க்குள் போனாள். அவற்றின் கழுத்துக் கயிற்றை அவிழ்த்துவிட்டுப் பார்க்கிறாள்....! இரண்டு எருதுகளும் முன்னங்கால்களை நொண்டுகின்றன! ஒன்றின் காலிலிருந்து கொஞ்சம் ரத்தமும் கசிந்து கொண்டிருந்தது. என்ன நடந்தது என்றே புரியவில்லை. வெளியே வந்து பார்த்தால் அவள் தகப்பனின் பக்கத்திலேயே ஒரு கனத்தத் தடி விழுந்து கிடந்தது!

பெள்ளிக்கு எல்லாம் தெட்டத் தெளிவாகப் புரிந்தது. எசமான் உழுவதற்கு வரவேண்டுமென்று போட்ட கட்டளை, இவன் அடிமனத்து ஆசைக்குத் தடையாக வரவே அது தீவிரமான பொறாமையாக உருவெடுத்திருக்கிறது என்று புரிந்து கொண்டாள். வேகமாகச் சென்று, அவனை எழுப்பி, ''யப்பா, அந்த எருதுங்கள என்னா பண்ணே?'' என்று கேட்டாள். சோம கண்ணைத் தேய்த்துக் கொண்டே, உணர்வு பெற்றவனாக ''பண்றது என்னா? எனக்குக் கெடைக்காத கவளம் இன்னொருத்தருக்குக் கெடைக்காம பண்ணேன்'' என்றான்.

பெள்ளிக்குப் பயம் வந்துவிட்டது. தாங்கள் இனி சங்கப்பய்யாவின் கோபத்திற்கு பலியாகும் காலம் வந்துவிட்டதே என்று நடுங்கினாள். அவள் நினைத்ததைப்

போலவே ''சோம ஏன் வரலே?'' என்று விசாரிக்க ஒரு வேலையாளை சோமனின் குடிசைக்கு அனுப்பியிருந்தார் பண்ணையார். சோம ''நேத்து வெளியே மேய்ச்சலுக்குப் போன எருதுங்க கால ஒடிச்சினு வந்திருக்குதுங்க. யாரு நெலத்துல போயி மேஞ்சதுங்களோ என்னுமோ! யாரோ நல்லா அடிச்சி கால மொடமாக்கியிருக்கிறாங்க'' என்றான். தான் வீட்டில் தங்கியிருக்க முடியாதென்று பயந்து, பண்ணையாரிடம் சென்று, அதே பொய்யைச் சொல்லி விட்டு வந்தான். சங்கப்பய்யா அதை முழுவதுமாக நம்பவில்லை. ''அப்படீன்னா இன்னிக்கி என்ன பண்ணப் போறே?'' என்று கேட்டார். ''வேற வேலயிருந்தா பண்ணலாம்...'' என்று இழுத்தான். சரி, அவரும் வேறு வேலையைக் காட்டினார். சற்று மன ஆறுதலோடு அதைச் செய்யப் போனான். சங்கப்பய்யா அவன் எருதுகள் நொண்டிக் கொண்டிருப்பதையும் பார்த்தார். சோமனின் பேச்சை நம்பி அவனுக்காகப் பரிதாபப் பட்டார். ஆனால், வரவர சோமனின் வேலையெல்லாம் சரியில்லாமல் போவதை அறிந்து அவர் மனது வெகுவாக வருந்தத் தொடங்கியது.

ஒருநாள் அவனிடம் ''தோட்டத்துக்குப் போயி தென்னமரத்துலேருந்து காய்ங்கள பறிச்சினு வா'' என்றார். அவன் நடுப்பகல் வரை காலம் கழித்துவிட்டு வெறும் பத்துப் பன்னிரண்டு காய்களை மட்டும் கொண்டு வந்தான். அவருக்கு அடக்க முடியா கோபம் வந்தது. ''நீ காலையிலயே கள்ளு கடைக்குப் போக ஆரம்பிச்சுட்டியா?'' என்று அதட்டினார். இதுவரை எதிர்த்துப் பேசாத சோம, ''ஊம்... நீங்க எனுக்கு கைநெறய கூலிபடி அளந்துட்றீங்க... அதுக்கு காலைல என்னா, சாய்ந்திரம் என்னா?'' என்று உளறினான். சங்கப்பய்யாவுக்கு, சோம காலங்காலமாக இருக்கும் வீட்டு பண்ணையாள் - நம்பிக்கைக்குரியவன் - என்னும் பெருமையெல்லாம் கரைந்து காணாமல் போயிற்று. ''நீ இனிமே இந்த வீட்டு வாசல்ல கால் வைக்கக் கூடாது... போ

வெளியே'' என்று கட்டளையிட்டார். சோமனுக்கு சிரிப்பு வந்தது. அவன் சிரித்ததை அவரும் பார்த்தார்! அவரது கோபம் மேலும் அதிகரித்தது; சோம தன் வீட்டுக்குப் புறப்பட்டு வந்தான்.

அவனுடைய நடவடிக்கை ஊரெல்லாம செய்தியாகப் பரவிற்று. அதே செய்தி பெள்ளியின் காதுக்கும் போய் எட்டியது. அவள் பயந்து போனாள். தகப்பனின் முரட்டுத்தனத்துக்காக அவனை வாய்க்கு வந்தபடி திட்டினாள். இருந்தாலும் அவன் மனம் மாறவில்லை. எசமானை பகைத்துக் கொண்டால் தாங்கள் வாழ முடியாது - என்று பெள்ளி அஞ்சி ஓடிப் போய் அவர் வீட்டு வாசலில் உட்கார்ந்து அழத் தொடங்கினாள். தன் தம்பிகளை பண்ணையாரின் காலில் விழும்படி செய்து ''எசமான்... சாமி... எதாயிருந்தாலும் மன்னிச்சிடணும். அப்பனுக்கு வயசாயிடிச்சி. தப்பு தண்டாவா பேசியிருந்தா பொறுத்துக்கணும். புள்ளைங்க நெலம அப்படி ஆனதுலேருந்து அப்ப(ன்) புத்தியே அப்படியாயிடிச்சி. அவங்களுக்கு நெசமாவே புத்தி கலங்கிப் போயிருக்குது!'' என்றாள். மேலும் மேலும் தகப்பனுக்காக மன்னிப்பு வேண்டினாள். பெள்ளியின் முறையீடு சங்கப்பய்யாவின் மனதைக் கரைத்தது. பெரிய மகனின் சாவினால் அவன் புத்தி பேதலித்திருக்கும் என்பதை நம்பினார். ''ஆகட்டும்... அவன் வந்து போயிட்டிருக்கட்டும். அவனுக்கு வேல - கீல எதுவும் சொல்லி பிரயோஜனமில்ல. அவன் புத்திசுவாதீனத்தோட இருக்கிறதாத் தெரியல. எப்படியோ, அவனுக்குத் தோன்றத செய்துகிட்டிருக்கட்டும். நீ தெனமும் வந்து அவன் கூலிப்படியையும் வாங்கிட்டு போயிடு'' என்றார்.

பெள்ளியும் தன் எசமான் கண்கண்ட கடவுள் அவதாரம்தான் என்று எண்ணிக் கொண்டாள். குடிசைக்கு ஓட்டமாக ஓடினாள். வழியெல்லாம் தம்பிகளிடம் ''ஏதோ போன ஜன்மத்துல புண்ணியம் பண்ணி இப்பிடியாப்பட்ட

மவராசன் நெலத்துல வந்து சேந்திருக்கிறோம்'' என்று கூறி மகிழ்ந்து போனாள். குடிசைக்குப் போய் தகப்பனிடம் நடந்ததையெல்லாம் சொன்னாள். எல்லாவற்றையும் கேட்டுவிட்டு அவன் அலட்சியமாகத் திரும்பிக் கொண்டான். அவன் போக்கைக் கண்டு பெள்ளிக்கு மேலும் திகிலாயிற்று. தகப்பன் எசமானிடம் வேலைக்குப் போவதைவிட போகாமலிருப்பதே மேல் என்று எண்ணிக் கொண்டாள். முடிந்தால் எசமான் வீட்டு வேலையில் தகப்பன் செய்த வேலைகளையெல்லாம் தானே செய்வது என்றும் முடிவு செய்தாள். நீல குடிசையிலேயே இருப்பது என்றும், தானும் காளனும் பண்ணை வேலைக்குப் போய் வருவதென்றும் தீர்மானமாயிற்று. சோம யார் தொல்லைக்கும் போகாமல் தன் பாட்டிற்கு உடுக்கையை வாசித்துக் கொண்டிருந்தால் அதுவே பெரிய உதவிதான் என்று எண்ணிக் கொண்டாள் பெள்ளி.

## 12

பெள்ளி தன் மனதில், முன்பு கூறிய புதிய முடிவுகளை எடுத்ததும் படுத்துக் கொண்டாள். ஆனால், அந்த முடிவுகளெல்லாம் நீர்மேல் எழுத்துப் போல் இல்லாமலாகப் போவதை அவள் எப்படி அறிவாள்? மறுநாள் பொழுது புலரும் வேளைக்கு சரியாக மன்வேல் குடிசையின் முன் வந்து நின்று அவர்களைக் கூப்பிட்டான். சோமனுக்கு விழிப்பு வந்தது. அவன் மன்வேலனைப் பார்த்தான். காபித் தோட்டத்து நினைவு வந்தது. அங்கிருந்து அவன் நினைவு இறந்துபோன சனியனிடமும் அங்கிருந்து வாழ்ந்தும் செத்தவனாகிவிட்ட குருவனிடமும் ஓடிற்று. தன் குடும்பம் பாழானதற்கு இந்த மன்வேலனே காரணம் என்று நினைத்து அவனுடன் பேசாமலே குடிசைக்குள் திரும்பி விட்டான். மன்வேலனோ மறுபடியும் சோம வேகமாக வெளியே வருவான் என்று எண்ணிக் கொண்டிருந்தான். எவ்வளவு நேரம் அவன் காத்திருந்தும்,

சோம வெளியில் வராமல் போகவே, ''சோமா....'' என்று உரக்கக் கூவினான். அவன் கூவல் பெள்ளியின் காதுக்கு எட்டியது. யார் என்று தெரியாமலேயே அவள் வெளியே வந்தாள். மன்வேல் நின்றிருந்தான். ''உங்கப்பன் ஏன் வெளியில வரலே?'' என்று அவன் கேட்டான்.

''அப்பனுக்கு புத்தி சரியில்ல...''

''என்னையிலேருந்து...?''

''அதையெல்லாம் உங்ககிட்ட சொல்லி என்னா ஆவப்போவுது? தெய்வத்து கிட்டதான் மொறயிடணும்!''

''நீ தெய்வத்துகிட்டயே சொல்லிக்கோ... இப்போ நான் எதுக்கு இங்க வந்திருக்கிறேன்னு தெரியுமா?''

''இல்ல...''

''உங்கப்பனோட கடன் ஒரு தம்பிடி கூட தீரலே. பசங்க ரெண்டு பேரும் தோட்டத்துக்கு வந்தவங்க குடிச்சிட்டு அலைஞ்சாங்க. இருவது ரூபா பாக்கி இருந்தது இப்போ இருவத்தஞ்சி ரூபாவாயிப் போச்சி. என்ன பண்ணப் போற?''

''பண்றது என்னா! துட்டு குடுக்கிற சக்தி எங்களுக்கு இல்ல. அண்ணனுங்க நெலம அப்படியாயிப் போச்சி. அப்ப(ன்) நெலம இப்படியாயிடிச்சி. உங்களுக்கு சாமி குடுத்த புத்திப்படி செய்யுங்க.''

''அப்படின்னா? உங்கண்ணன்களுக்கு என்னாயிடுச்சி? ஒருத்தன் கொக்கடத்துல கெடைச்சான். அங்கெயே அவன் இந்த வருசம் நெலத்துல பயிர் பண்ணப் போறானாம். கல்யாணமும் ஆயிடுச்சி. நீங்க போகலியா?''

''சாதி கெட்டவங்க ஊட்டுக்கு நாங்க ஏன் போறோம்?''

மன்வேலனின் மனதுக்கு அது சுருக்கென்றது. தன் மதத்தைச் சேர்ந்தவர்களை ''சாதிகெட்டவர்கள்'' என்று சொன்னதற்கு.

''அது எப்படியோ இருக்கட்டும். இந்த வருசம் உங்கள்ல யாரு வேலைக்கு வரப் போறீங்க? யாராவது ரெண்டு மூணு பேரு வராம, உங்க கடன் தீர்ற மாதிரி இல்ல. உங்க நல்லதுக்குத்தான் நான் சொல்றது... பணம் பாக்கி வச்சிகிட்டா, பின்னால கோர்ட்டு கச்சேரின்னு ரொம்ப தொந்தரவு வந்துடும்.''

''எது வந்தா என்னா...? யார் என்னா பண்றது...?''

''யாரு... என்ன பண்றதுன்னா? உங்களுக்கு கடனத் தீக்கற மனசே இல்லியா? சும்மா உங்கிட்ட பேசி என்ன பிரயோஜனம்? சோமன வெளியே அனுப்பு.''

''அப்ப(ன்) படுத்துருக்காங்க.''

''என்னப் பார்த்தவொடனே காச்சல் வந்துடுச்சா? சரி, உங்கண்ணன் சனியனையாவது அனுப்பு.''

பெள்ளி சற்று நேரம் எதுவுமே பேசவில்லை. பிறகு ''சனியன அனுப்பியாயிடுச்சி!'' என்று சொல்லி தலை கவிழ்ந்தாள். மன்வேலனுக்குப் புரியவில்லை. ''ஏன் சும்மாயிட்டே? நீ பொம்ம மாதிரி நின்னா வேல ஆவாது. எனக்கு ஏதாவதொரு பதிலைச் சொல்லியாகணும்.''

''எதுக்கு எங்க வகுத்தெரிச்சலக் கொட்டிக்கிறீங்க சாமி?''

''என்னது...! நான் உங்க வயித்தெரிச்சலக் கொட்டிக்கிறேன்றே?''

''அண்ண(ன்) ஒணுமா உங்களுக்கு? அவ(ன்) ஒணும்னா அதோ அங்க பாருங்க... அந்த மரத்தடியில

படுத்துனுருக்கிறான். தோண்டி தூக்கினு போங்க'' என்று கோபத்தோடு சொல்லிவிட்டு அவளும் குடிசைக்குள் போய்விட்டாள்.

அப்போதுதான் மன்வேலனின் மந்த புத்திக்கு, அந்தயிடத்தின் எல்லா விவரங்களும் எட்டின. இந்த நேரத்தில், தான் அவளிடம் அப்படிப் பேசியது சரியல்லவென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால், சொல்லிக் கொள்ளாமல் போய்விட மனம் வராமல், அங்கிருந்தபடியே உரக்க ''நான் அடுத்த வெள்ளிக்கிழமை வர்றேன். யாராவது ரெண்டு பேர் என்கூட வந்தேயாகணும். நீயே ஏன் வரக்கூடாது? இங்க இருந்து என்ன பண்ணப் போற?'' என்று கூறிவிட்டு புறப்பட்டுப் போனான்.

''நீயே ஏன் வரக்கூடாது?'' என்ற கேள்வி பெள்ளியின் மனதில் ஆழப்பதிந்து விட்டது. ''தோட்டத்துக் கடன வச்சிக்கினு நாம சமாதானமா பொளைக்க முடியாது. எப்படியும் அவுங்க கடன அடைச்சே தீரணும். தீக்கறதுக்கு வேற வளியில்லேன்னா, நானாவது தோட்டத்துக்குப் போயி, ஒளச்சி, கடனத் தீத்துட்டு வர்றேன்'' என்று தீர்மானித்தாள். அதன் பிறகு தகப்பனை அழைத்து பேசினாள்.

''யப்பா... மன்வேல் கங்காணி வந்து சொன்னதெல்லாம் கேட்டிச்சா? வர்ற வெள்ளிக்கெளம அவுங்க திரும்பி வர்றாங்களாம். ரெண்டு பேராவது அவுங்க கூட போகணுமா(ம்).''

''வரட்டும்...''

''வரட்டுன்னா, அவுங்களுக்கு நாம ஏதாவது பதிலு சொல்ல வாணாமா? அவுங்க கடன்ல ஒரு தம்பிடியும் தீக்கலயே...''

''ஆமா... பெரியவ(ன்) குடிச்சி, குடிச்சி கெடைச்சத யெல்லாம் செலவு பண்ணியிருக்கணும். குடிச்சேயிருக்கட்டும்! இனிமே குடிக்க முடியுமா? அவ(ன்) குருவ(ன்) கெடைச்சதயெல்லாம் அந்த பொண்ணு கைல குடுத்துருக்கணும. அவ(ன்) எப்பனா இந்தப் பக்கம் வந்தான்னா... அவன் கைய கால முறிச்சிப்புடறே(ன்).''

''அவுங்க என்னா பண்ணாங்களோ! எப்பிடியோ அவனும் தோட்டத்துக்கு இந்த வருசம் போகப் போறதில்லியாம். ஊர்லியே நெலத்துல வெவசாயம் பண்ணப் போறானா(ம்)''

''நெலத்துல வெவசாயமா? யாரு, எங்குருவனா! சாதி கெட்டாலும் அவுனுக்கு சொர்க்கம் கெடைச்சிடுச்சே!''

''அந்த பேச்ச உடு. இனிமேல அவனாலயும் உங்கடன் தீரப் போறதில்ல. அத தீக்கிற வளி என்னா? அதப்பாரு! சொன்னா நீ அடம்புடிப்பே.... கோவம் வரும். ஒண்ணு நம்ம ரெண்டு பேர்ல யாராவது ஒருத்தரு தோட்டத்துக்குப் போவணும். இல்லன்னா அவுங்க பணத்த அவுங்களுக்கு குடுத்துடணம். தோட்டத்துக் கடன வச்சினுருந்தா நமுக்கு சாமி நல்லது பண்ணாது.''

''அதுக்கு நா(ன்) என்னா பண்ணி சாவட்டும்?''

''சாவறதும் வாணாம் ஒண்ணும் வாணாம். நமுக்கு என்னமோ நெலத்தக் கீறி வெவசாயம் பண்ற ரொணம் இல்ல. சும்மா அந்த எருதுங்கள வச்சினு என்னா பண்றது?''

''பண்றது என்னான்னா? ஒருநாளக்கி சர்க்காரு எடத்த மனுகுடுத்து வாங்கி அதுல வெவசாயம் பண்றே(ன்). காட்டு நெலமோ மோட்டு நெலமோ... என்னுதுன்னு நாலு மாரு பூமியயாவது நா(ன்) உளுதே ஆவணும்!!''

''சும்மா உளுதுட்டா ஆயிடுமா? அப்பிடின்னா குடிச முன்னால இருக்கிற வாசலயே உளலாமே. ஒரு நாலுபடி நெல்லாவது கெடச்சி, கையேந்துறது நின்னுச்சேன்னு யோசனை பண்றதுக்கு பதுலு, மலையப் பொரட்டறேன், காட்டை வெட்றே(ன்), மடுவத் தோண்ட்றே(ன்)னு சொன்னா என்னா லாபம்? அந்த யோசனயயெல்லாம் உட்டுடு. பெரியவரு, சங்கப்பய்யா எசமானோட உப்பத் தின்னே வளந்தவங்க நாம. அந்த உப்பு ரொணத்த அறுத்துக்கிறதுக்கு நம்மால ஆவாது. முந்தாநாளு நீ அவ்ளோ படாயா பேசிட்டு வந்துட்டே; அப்பவும் அவரு 'அவ(ன்) வேல பண்ணட்டும் பண்ணாமப் போவட்டும். அவ(ன்) பங்குக் கூலிப்படிய தெனமும் நீ வந்து வாங்கினு போ'ன்னாரு. அப்பிடி நமுக்கு வேற யாரு ஒபகாரம் பண்ணுவாங்க? தங்கமான எசமான் நெலத்த உட்டா, நமுக்கு தெய்வம் நல்லது பண்ணாது.''

''நீ சொல்றதயெல்லாம் ஒரேயடியா சொல்லிடு... எனுக்கு ஒண்ணும் தெரியல...''

''இன்னும் என்னா சொல்றது நானு? அந்த ரெண்டு எருதுங்களையும் காலு நோவு கொணமானதும் எசமானுக்கே வித்துப்புடலாம். இந்த நெலமயில நீ அதுங்கள பொளைக்க உடறதாவும் இல்ல. ஒருநாளு ராத்திரி 'எனுக்கு இல்லாதது மத்தவங்களுக்கு எதுக்கு'ன்னு அதுங்கள வெட்டிப் போட்டுட்டு வந்தாலும் வந்துடுவே. எருதுங்க போயிடிச்சேன்னு கவல படறதுக்குப் பதுலா பதினஞ்சி நாளக்கி கவுச்சி கெடைச்சிதேன்னு சிரிச்சினு ஒக்காந்துருவே!''

அதற்கும் சோம, கம்பீரமாக, தான் எதுவம் பேசப் போவதில்லை என்பதைப் போல முரட்டுத்தனமாக உட்கார்ந்திருந்தான்.

''நான் இவ்ளவெல்லாம் தொண்டதண்ணி வத்த கத்தினிருக்கிறே(ன்), நீ கம்பமாட்டம் ஒக்காந்துனிருக் கிறயே!''

''வாணாம், நீ எருதுங்கள விக்கிறதுக்கு பதுலா இந்த கௌவ(ன்) என்னையே யாருக்காவுது வித்துப்புடு. மன்வேலனுக்கு வேணும்னா, அவுனுக்கே வித்துப்புடு. இல்லன்னா என்னெ குட்டையில புடிச்சி தள்ளிப்புடு. அதறகப்புறம் எருதுங்கள விப்பே. கட(ன்) தீந்து நாலுகாசு மிஞ்சிச்சினா, ஒரு நல்ல பொடவயா எடுத்துக் கட்டினு நீயும் ஆடு.''

பெள்ளியால் எதுவும் பேச முடியவில்லை. சோமனுக்கு அந்த எருதுகளின் மீதிருந்த பந்தத்தை அறுத்துக் கொள்ள முடியாது என்று அவளுக்குத் தோன்றியது. எவ்வளவோ முறை வியப்படைந்திருக்கிறாள்: ''பெத்த புள்ளைங்க மேல இல்லாத பந்தபாசம் இந்த வாயில்லா ஜீவனுங்க மேல எப்பிடி வந்திச்சி?'' என்று. சரி, யோசித்துக் கொண்டு உட்கார்ந்திருக்க நேரமில்லை. இருக்கும் ஒரு தம்பியை அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போனாள். மற்றொரு தம்பியை வீட்டிலேயே கஞ்சி காய்ச்ச விட்டுவிட்டுப் போனாள். ஆனால் கஞ்சிக்கு ஒருபிடி அரிசிகூட குடிசையிலில்லை என்பது அவள் நினைவிலில்லை. அவள் நேராக காட்டுக்குப் போய், புல்லையும் தழையையும் அறுத்துக் கட்டி இரண்டிரண்டு முறை சுமந்து வந்து தன் எசமான் வீட்டுத் தொழுவத்தில் அவிழ்த்துப் போட்டு, அங்கிருக்கும் பசுக்கள் தின்னும் வகையில் அதைப் பரப்பிவிட்டு வாசலில் வந்து உட்கார்ந்தாள். சங்கப்பய்யா பண்ணையாரும் அங்கேயிருந்தார். அவர் சிரித்தபடியே, ''எப்படி இருக்கான் உங்க அப்பன்'' என்று கேட்டார்.

''என்னான்னு சொல்றது எசமான்! இன்னும் பித்துப் புடிச்சவங்க மாதிரி பேசறத நிறுத்தல. போதாததுக்கு

இன்னிக்கி பொளுது விடியறதுக்கு முன்னாடியே தோட்டத்து கங்காணி வந்து போனாங்க. அவுங்க கடன் இன்னும் அப்படியே பாக்கியிருக்குதாம். அண்ணங்க ரெண்டு பேரும் ஒரு வருசம் ஒளச்சும், என்ன பண்ணாங்களோ கடவுளுக்குதா(ன்) வெளிச்சம்.''

''பண்றது என்ன? அங்க எல்லாரும் பண்றது ஒரே வேலைதான் - மூக்கு முட்டக் குடிக்கிறது! இல்லேன்னாலும் புலையன் தான் வாங்கின கடன் தீர்க்கத்தான் முடியுமா? ஆகாசமே இடிஞ்சு பூமியில விழணும், உங்க ஜனங்க கடன தீர்க்கணும்னா'' என்றார்.

பெள்ளி மனசுக்கும் அது அப்படித்தான் என்று தோன்றியது. இருந்தாலும் அடுத்து என்ன செய்வது என்று அவள் அவரையே கேட்கத் தொடங்கினாள். அவள் கண்ணீரைக் கண்டு சங்கப்பய்யா ''அவனுக்கு நான் சொன்னா புரியாது! அந்த எருதுங்களோட காலுங்க சரியானதும் இங்க கொண்டு வந்து கட்டட்டும். முப்பது ரூபா குடுத்துடறேன். கடனைத் தீர்த்துட்டு கையிலயும் நாலு காசு கெடைக்கற மாதிரி பண்றேன். ஒண்ணுமில்லாமயே வெறுமே 'கடன் குடுங்கோ'ன்னா எப்படி குடுக்கிறது? உங்க அப்பனுக்குப் புத்தியிருந்தா சொல்றபடி செய்யட்டும். இல்லேன்னா அவனே தோட்டத்துக்குப் போகட்டும்!''

பெள்ளியின் மனதுக்கும் அவர் சொல்லியது நியாயமென்றே தோன்றியது. தோன்றி என்ன செய்வது? சோம கேட்க வேண்டுமே! அவள் வீட்டுக்கு வந்து தகப்பனிடம் மீண்டுமொருமுறை பேசிப் பார்க்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள். அப்படியும் அவன் கேட்கா விட்டால், எசமானைக் கொண்டே புத்தி சொல்ல வைக்க வேண்டுமென்றும் எண்ணிக் கொண்டாள். சரி, தகப்பனைக் காணும் ஆசையில் குடிசைக்கு வந்தால், அங்கு சோம இல்லை. ஆறேழு பேர் உறவுக்காரர்கள்தான் வந்து உட்கார்ந்திருந்தனர். குடிசைக்குள் அவள் காலடி

வைப்பதற்கு முன்பாகவே தம்பி வந்து 'சொந்தக்காரங்க வந்துருக்கிறாங்க' என்று வழியிலேயே தெரியப் படுத்தினான். பெள்ளி, குடிசைக்குள் நுழையாமல் மறுபடியும் பண்ணையார் வீட்டுக்குத் திரும்பி ஓடினாள்.

## 13

நீண்ட நாட்களாகவே பெள்ளி, முன்யோசனையுடன் கூலியாகக் கிடைக்கும் படிஅரிசியில் பாதியை மட்டுமே குடிசைக்குக் கொண்டு வருவாள். மழைக்காலம் இன்னும் கழியவில்லை. அறுவடை நாள் வரும்வரை நாளைத் தள்ளுவது சிரமமென்பதால், அந்த நாட்களுக்காக மற்ற பாதி அரிசியை பண்ணையாரின் வீட்டிலேயே விட்டு வைப்பாள். இப்போது அபூர்வமாக வீட்டுக்கு உறவினர்கள் வந்து விட்டதால் வேறு என்ன செய்வது? விவசாய வேலைகளெல்லாம் முடிந்திருந்ததால் அவர்களுக்கும் வேறு வேலையில்லை. என்னதான் செய்வார்கள்! உறவினர் வீடுகளுக்கு இன்னும் இரண்டு மாதங்களுக்கு தொடர்ந்து போய் தங்குவது; வாய்விட்டு 'இனிமே இந்த ஊட்டுல மணி அரிசி கூட கெடையாது' என்று வீட்டுக்காரர்களே சொல்லும்வரை அங்கிருந்து கிளம்பாமலிருப்பது அந்த உறவினர்களின் பழக்கம். இதில், வந்தவர்களைவிட சோம ஒன்றும் குறைந்தவனில்லை.

சரி, அன்றைக்கு மட்டும் போதுமான அரிசியை பண்ணையார் வீட்டிலிருந்து கேட்டு வாங்கி வந்தாள். குடிசையில் உறவினர்கள் காத்திருந்தனர். சோம இன்னும் வந்திருக்கவில்லை. வந்தவள் அவர்களையெல்லாம் நலம் விசாரித்தாள். சரி, உள்ளே போய் பார்த்தால் அடுப்பில் ஒன்றும் இல்லை. அப்போதுதான் அவளுக்கு வீட்டில் அரிசி கொஞ்சங்கூட இல்லையென்பது நினைவுக்கு வந்தது. வேகவேகமாக ஒரு மாதிரி கஞ்சியைக் காய்ச்சினாள். வீட்டுக்கு வந்தவர்களுக்கு வெறும் கஞ்சியை வடித்து ஊற்ற

முடியுமா? வாய்க்குச் சுவையாக தொட்டுக் கொள்ள ஏதாவது வேண்டாமா? அப்போது வீட்டில் இரண்டு உப்புக்கல் கூட கிடையாது. இன்னொருமுறை பண்ணையார் வீட்டுக்குப் போய் பின்வாசலில் காத்திருந்து எசமானியிடம் தன் நிலையைச் சொல்லி, கொஞ்சம் உப்பையும் நாலு மிளகாயையும் கெஞ்சி வாங்கி வந்தாள். நடுப்பகலுக்கு சோம குடிசைக்கு வந்தான். உறவினர் முகத்தைக் கண்டதும், முதலில் அவன் முகம் வாடிப் போனாலும், நொடியில் அவர்களுடன் சேர்ந்து கொண்டான். எல்லோருடைய உணவும் முடிந்தது. இதையும் அதையுமாக ஊர்கதையெல்லாம் பேசிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர். மாலைவரை அரட்டைப் பேச்சு தொடர்ந்தது. இனி, வந்த உறவினர்களை ஒருமுறையாவது பிருமனின் கடைக்குக் கூட்டிப் போகமலிருக்க வழியில்லை! அவன் கையில் காசில்லை. இருந்தாலும் தைரியத்திற்கு என்ன குறைவு? எல்லாரையும் கூட்டிக் கொண்டு போனான். தன் பிள்ளைகள் நீல, காள இருவரையும்கூட கூட்டிக் கொண்டு போனான். சாவதென்றால் அவர்களும் குடித்து சாகட்டும் - என்று தன் மனதிற்குள்ளாகவே எண்ணிக் கொண்டான். எல்லோரும் குடித்து முடித்த பிறகு, பிரும சோமனை அழைத்து ''மொத்தம் எட்டணா ஆச்சு. யாரு குடுக்கறாங்க?'' என்றான். குடித்திருக்கும்போது எட்டணா என்பது ஒரு தம்பிடிக்குச் சமம்! சோம, ''நா(ன்) குடுக்கறேன்; இன்னிக்கில்ல, நாளக்கி. பாயோ கூடையோ கொணாந்து போட்டா போதுமில்ல'' என்றான். பிருமபூசாரியின் நம்பிக்கை சிதறிற்று. 'எட்டணா கடனை சோமனால எப்பவாவது தீக்க முடியுமா?' என்று. இருந்தாலும் சற்று ஆறுதல்! 'கலக்கின தண்ணிக்கி காசு வரலேன்னாலும் கள்ளுகாசுக்கு மோசம் வராது' என்று.

இரவு உணவும் முடிந்தது. தானாக இருள் வந்திறங்கியது. விளக்கைப் பார்த்தவர்களில்லையே! எல்லோரும் குடிசையின் வாசலில் உட்கார்ந்தனர். சோம

உடுக்கையை வெளியே எடுத்தான். அடிக்கத் தொடங்கினான். உறவினர்களும் பிள்ளைகளும் ஆடத் தொடங்கினார்கள். அவ்வப்போது உணர்ச்சி வயப்பட்டு 'ஓஹோ!' என்று கூச்சலிடும் கோலாகலம்தான் என்ன! ஆட்டத்தின் அற்புதத்தைப் பார்த்த சோமனுக்கு இனி ஒரு மாதமானாலும் வந்த உறவினர்களை வீட்டை விட்டு அனுப்பக் கூடாது என்று தோன்றிற்று. மறுபக்கம், பெள்ளியோ நாளைக்கு வேண்டிய அரிசியைப் பற்றி யோசிக்கத் தொடங்கினாள்.

இரவெல்லாம் ஆடிக் களைத்து படுத்தனர். பொழுதும் விடிந்தது. பெள்ளி விரைவாக தம்பிகளை அழைத்துக் கொண்டு தீவணம் கொண்டுவரப் போனாள். இரண்டு நாழிகை பொழுதுக்குள் வேலையை முடித்து, புல் கட்டுக்களைப் பண்ணையார் வீட்டுக்குள் கொண்டு போய்ச் சேர்த்துவிட்டு ஒருபடி அரிசியை வாங்கி வந்தாயிற்று. அவள் வேலைக்கான கூலியைவிட அரைப்படி அரிசி அதிகமாகவே வாங்கியிருந்தாள். இப்படியே எட்டு நாள் கழிந்ததென்றால், அடுத்த மழைக் காலமெல்லாம் பட்டினி கிடக்க வேண்டியதுதான்! ஆனால், என்ன செய்ய முடியும்? உறவினர்களை உபசரித்தேயாக வேண்டும். வீட்டுக்கு வந்து வழக்கம்போல் கஞ்சி காய்ச்சினாள். உள்ளே மிளகாயில்லை. திரும்பவும் எசமானியிடம் சென்று கேட்கும் துணிவு இல்லை. உப்பாவது இருக்கிறதே! அது இல்லாவிட்டாலும் உறவினர்கள் வருத்தப்பட மாட்டார்கள். அவர்கள் இருப்பதை உண்டுவிட்டு போகின்றவர்கள். ஆனால், அவர்களின் சாயங்கால கள்ளுக்கு மட்டும் மோசம் வந்துவிடக் கூடாது. பெள்ளி, கஞ்சியை ஊற்றினாள். பிறகு தம்பிகளை அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போனாள். மறுபக்கம் சோம உறவினருடன் கவலையற்று பேசிக் கொண்டிருந்தான். நடுப்பகலுக்கு பெள்ளி காட்டுக் கொடியும் விழுதும் கலந்த ஒரு பெரிய சுமையைக் கொண்டு வந்து போட்டாள். சோம

அதைக் கண்டதும் மகிழ்ந்து போனான். அது இல்லாமல் போனால் பிருமனின் கள்ளுக்கு ஈடாக கொடுக்க என்ன இருக்கிறது?

வந்த உறவினர்கள், சோம, காள, நீல எல்லோரும் கத்தியினால் விழுதுக் கொடிகளைப் பிளந்து கூடை முடையத் தொடங்கினர். பேசிக் கொண்டே, ஆறேழு கூடைகளை மாலைக்குள் முடைந்தனர். சோம அவை எல்லாவற்றையும் தலைமீது சுமந்து கொண்டு உறவினர்களையும் கூட்டிக் கொண்டு, கள்ளுக் கடையை நோக்கிப் புறப்பட்டான். பெள்ளி ஓடிச் சென்று அவனிடமிருந்து இரண்டு கூடைகளைப் பிடுங்கிக் கொண்டாள். சோம அவளை அதட்டினான். பெள்ளி ‘‘எசமான் கேட்டிருக்காங்க’’ என்று பொய் சொல்லி சமாளித்தாள். சோம வாயடங்கி மற்றவைகளை எடுத்துக் கொண்டு புறப்பட்டுப் போனான். பிருமனின் கடையில் பழைய கடனெல்லாம் தீர்ந்து இன்றைய கடன் மட்டும் நின்றது. அங்கு, பெள்ளி பண்ணையார் வீட்டுக்குப் போய் கூடைகளைக் கொடுத்து, நான்கு படி நெல்லை, அந்தக் கணக்கில் கேட்டு வாங்கி வந்தாள்.

உறவினர்கள் வந்து நான்கு நாட்கள் கழிந்தன. அவர்களுக்கும் புறப்படும் எண்ணமில்லை; சோமனுக்கு அனுப்பி வைக்க மனமில்லை. மறுபக்கம், பண்ணையார் வீட்டில் பெள்ளி உழைத்து சேர்த்து வைத்திருந்த அரிசியும் தீர்ந்து போயிற்று. அதுமட்டுமல்ல; மழைக் காலத்தில் அரிசியில்லாத நாட்களுக்கு உதவும் என்று காட்டுக் கிழங்குச் செடிகளை வீட்டைச் சுற்றி நட்டு வைத்திருந்தாள். அதையும் தோண்டிப் பறித்து வந்து உறவினர்களுக்கு சோம விருந்து வைத்து விட்டான். முயல் வேட்டைக்குப் போகும் ஆசை அவனுக்கு. தடி, வலைகளை எடுத்துக் கொண்டு, உறவினர்களை வழிநடத்திக் கொண்டு போயே விட்டான். அவன் அப்படி வேட்டைக்குப் போய் நான்கைந்து ஆண்டுகளே ஆகிவிட்டன. தன் புலைச்சி இறந்ததிலிருந்து

வேட்டையை அடியோடு மறந்து விட்டிருந்தான். அபூர்வமாக அப்படியொரு ஆசை அவனுக்கு வந்திருக்கும்போது, தான் ஏன் அதைத் தடுக்க வேண்டுமென்று பெள்ளியும் எண்ணிக் கொண்டாள். ஆனால், வேட்டையாடிக் கொண்டுவரும் முயல்களை என்ன செய்வதென்று அவளுக்குத் தெரியவில்லை. அதற்கு உப்பு புளி காரங்களையாவது சமைக்கும்போது சேர்க்க வேண்டாமா? இன்னும் இரண்டு கூடைகளைக் கொண்டு வந்து தருவதாகக் கூறி சங்கப்பய்யாவின் மனைவியிடமிருந்து உப்பு, மிளகு கேட்டு வாங்கி வந்தாள்.

காலையில் வேட்டைக்குப் போனவர்கள் பொழுது சாய்ந்தபின் குடிசைக்குத் திரும்பினார்கள். அவர்களும் ஏழெட்டு முயல்களைப் பிடித்துக் கொண்டு வந்திருந்தனர். அனைவருக்கும் ஆனந்தமோ ஆனந்தம்! சோமனும் அடுக்களையில் புகுந்தான். எல்லோரும் சாப்பிடத் தயாரானார்கள். ஆனால், இதற்கிடையில் ஏதோ ஒரு பெரிய குறை இருப்பதாக எல்லோரும் உணர்ந்தனர். இப்படியொரு பெரிய விருந்து நடக்கும்போது, அதற்குச் சரியாக கள்ளு எதுவும் இல்லாது போனால் எப்படி? சரி, இவர்கள் உணவை முடித்து கடைக்குப் போகும்போது நள்ளிரவாகி விடும்; அதனால், கள்ளை வீட்டிற்கே கொண்டு வந்துவிட்டால் என்ன என்று யோசித்தனர். கள்ளைக் கொண்டு வருவதானால் பிருமனுக்குப் பணம் கொடுக்க வேண்டாமா? சோம யோசனையில் மூழ்கினான். பெள்ளி, "ஒண்ணோ ரெண்டோ மொசலுங்க அவன் தலமேல உட்டெறிஞ்சா தானா குடுத்துட்டுப் போறான்" என்றாள். அதை எப்படி ஒப்புக் கொள்வது? தின்பதற்குக் குறைந்து போகுமே! வேறென்ன செய்வது? 'பாழாப் போன பிருமப் பூசாரி தெய்வத்துக்குக் காணிக்க எதுவும் குடுக்காம திருப்திபடுத்த முடியாது' என்று எண்ணி சோம இரண்டு முயல்களை எடுத்துக் கொண்டு, பெரியதாக ஒரு பானையையும் தூக்கிக் கொண்டு பிருமனைப் பார்க்கப் போனான்.

முயலைப் பார்த்ததும் பிருமனின் வாய் பிளந்து கொண்டது. ''எங்க கொண்டு போற?'' என்று கேட்டான். சோம ''உங்களுக்குத்தான் கொண்டாந்தேன்'' என்று பானையைக் காட்டினான். பிருமன் முயல்களை உள்ளே எடுத்து வைத்துவிட்டு முகத்தை வாட்டமாக வைத்துக் கொண்டு, ''இன்னைக்கி கள்ளு கொறவாதான் மீந்திருக்குது'' என்றான். சோமனின் உற்சாகம் குறைந்து போயிற்று. ''எதாவது பண்ணி எட்டு புட்டி கள்ளு குடுக்கலேன்னா எம்மரியாதையே போயிடும்'' என்று அவனை வற்புறுத்தி வேண்டினான். என்னவெல்லாமோ செய்து தண்ணி, கள்ளு என்று பாராமல் நான்கு புட்டி நிறைய பிருமனிடமிருந்து வாங்குவதற்குள் போதும் போதுமென்று ஆகிவிட்டது.

இங்கு கடையிலிருந்து கள்ளு வந்துவிட்டாலும், சமையல் வேலை முடியவில்லை. உறவினருக்கு, 'கள்ளை முதலில் காலி செய்து விட்டால் அப்புறம்கூட சாப்பிடலாமே' என்ற எண்ணம். ஆனால், சோமனோ சுவையறிந்தவன், சாப்பிட்ட பிறகே கள்ளு என்று தெளிவுபடுத்தி விட்டான். எப்படியோ நீண்ட நேரமாக விருந்து நடந்தது. சோம, கொண்டு வந்த கள்ளுக்கு தானும் கொஞ்சம் நீரைக் கலந்து நிரப்பி வைத்தான். வாசலில் கட்டைகளைப் போட்டு தீமூட்டி எரிய விட்டான். அதன் வெளிச்சத்தில் கள்ளுக் கச்சேரி நடந்தது. அது தண்ணீர் கலந்த கள்ளானதால், குடிக்கும்போது எந்தக் கிளர்ச்சியையும் யாரிடத்திலும் ஏற்படுத்தவில்லை. இருந்தாலும் பானை என்னவோ காலியாகி விட்டது. சரி, சோம தன் உடுக்கையைக் கையிலெடுக்கவும் பாட்டு, கூத்து என்று கோலாகலமாக நேரம் போனது.

மறுநாளும் வேட்டைக்குப் போக வேண்டுமென்ற உற்சாகம் சோமனுக்கு. ஆனால், பெள்ளி மட்டும் அவனைத் தடுத்தாள். ''நீங்ககெல்லாம் போயி சும்மா வேட்டையாடிட்டா போதுமா? அதுக்கு சரியா ஊட்ல உப்பு

புளி மொளகாயெல்லாம் இருக்க வாணாமா?'' என்று கேட்டாள். ''வேட்டைக்கி போறதுக்கு பதுலா, நாலு கூடைங்களயாவது மொடையக் கூடாதா?'' என்றாள். மகளின் பேச்சை ஒப்புக் கொண்டனர். சோம அந்த வேலையில் அமர்ந்தான். விருந்தினர்களும் சேர்ந்து கொண்டனர். அப்போது அந்த ஊரைச் சேர்ந்த ஒரு விவசாயி, சோமனைத் தேடிக் கொண்டு அங்கு வந்தான். இதுவரை சோமனை அவன் தன் வேலைக்கு அழைக்க வந்ததேயில்லை. இப்போது எதற்காக வந்திருக்கிறான் என்று சோமனுக்கு விளங்கவில்லை. ''சோம...'' என்று வந்தவன் கூப்பிட்டதும் சோம எழுந்து நின்று முன்னால் வந்தான்.

''சோம, எங்க ஊட்டு எரும செத்துப் போச்சி; வந்து எடுத்துனு போறியா?'' என்று வந்தவன் கேட்டான்.

சோம செய்தியைக் கேட்டு உள்ளுக்குள் மகிழ்ந்து போனான். ஆனாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், ''இன்னிக்கி ஊட்டுக்கு ரொம்ப பேரு ஒறவுக்காருங்க வந்துருக்காங்க. ஊட்டவுட்டு எப்பிடி வர்றது?'' என்றான்.

''உறவுக்காருங்க வந்திருந்தா விருந்தே வைக்கலாமே'' என்றான் வந்தவன்.

''ஆமா... விருந்து வைக்கலாந்தான். ஆனா, வெறும் கவுச்சிய மட்டுமா? அதுக்கு வேண்டிய மத்த சாமானுங்களுக்கு எங்க போறது? எங்கையில காசில்ல.''

வந்த விவசாயிதான் என்ன பண்ணுவான்? கொட்டாயிலிருக்கும் செத்த எருமையை வைத்துக் கொண்டு காத்திருக்க முடியுமா? இல்லை, தானே அதை இழுத்து வெளியே போட்டுவிட முடியுமா? அதனால் அவன் மிகவும் வினயத்தோடு, ''ஆகட்டும் வா, செலவுக்கும் நாலணா குடுக்கறேன்'' என்றான்.

சோம துள்ளி குதித்தான். தன் உறவினர்களை அழைத்துக் கொண்டு ஒரே ஓட்டமாக அந்தக் குடியானவனின் வீடுவரை போனான். எருமையை குடியானவனின் கொட்டகையிலிருந்து வெளியே எடுத்துத் தூக்கிக் கொண்டு வந்து, தோலை உரித்து, இறச்சியை அறுத்தெடுத்து குவித்து வைத்தனர். எட்டு பேர் இல்லை, இனி இன்னும் ஐம்பது உறவினர்கள் வந்தாலும் சரிதான்! கவலைப்படவே வேண்டாம்! சோணி நாய்க்கும் அன்று சொல்ல முடியாத ஆனந்தம்!

மீண்டும் விருந்துக்கான ஏற்பாடு நடந்தது. குடியானவன் கொடுத்த நாலணா காசை எடுத்துக் கொண்டு, இரண்டு மைல் தொலைவிலுள்ள மாப்பிள்ளே கடைக்குப் போய் உப்பு, மிளகாய் வாங்கி வந்தனர். இனி இந்த பெரிய விருந்துக்கு கள்ளு சமாராதனை இல்லாமல் சரிப்பட்டு வருமா? மறுபடியும் யோசனை செய்தனர். கடைக்கார மாப்பிள்ளேவுக்கு நாளை - நாளை மறுநாளில் எருமையின் தோலையும் கொம்புகளையும் தருவதாகக் கூறி எட்டணாவை பணமாக வாங்கி வந்தான் சோம. தோலை நன்றாக உலர்த்திய பிறகு கொண்டு போயிருந்தால் ஒரு ரூபாயாவது கிடைத்திருக்கும். அன்றைய கை மீறிப்போன வியாபாரத்தினால் ஒரு ரூபாயின் லாபம் எட்டணவாகக் குறைந்து போயிற்று. இருந்தாலும் சோமனுக்குக் கவலையேயில்லை; எல்லாமே பாடுபடாமல் கிடைத்ததில்லையா?!

அன்றைக்கு பெரிய விருந்துதான்; கள்ளு சாமாராதனை, ஆட்டம் பாட்டமெல்லாம் நடந்தது என்று வேறு சொல்லவே வேண்டாம். உறவினர் வந்ததால் எட்டு நாட்களென்பது எட்டு நிமிடங்களாகக் கழிந்தது. இன்னும் எத்தனை நாளைக்கு அவர்கள் தங்கியிருந்திருப்பார்களோ என்னவோ! ஆனால், அவர்களில் ஒருவனின் வீட்டில் யாருக்கோ உடல்நிலை சரியில்லையென்று செய்தி வந்தது. அவர்கள் மனமில்லாமலே புறப்பட வேண்டியதாயிற்று.

இந்த எட்டு நாட்களில் பண்ணையார் வீட்டு வேலையைச் செய்ய பெள்ளிக்கு நேரமேயில்லை. நாளையிலிருந்தாவது அவருடைய கடனைக் கழிக்க போக வேண்டுமென்று எண்ணிக் கொண்டாள்.

அவள் எண்ணியிருந்த பாழாய்ப்போன அந்த 'நாளை' என்பது மன்வேல் சொல்லியிருந்த அந்த வெள்ளிக்கிழமை. காலையிலேயே சரியாக எமதூதனைப்போல அவன் வந்து நின்றான். விருந்தில் மறந்து போயிருந்த பிரச்சனை திரும்பி வந்து விட்டது. இன்றே தன்னுடன் யாராவது வரவேண்டுமென்று அவன் அடம் பிடித்தான். யோசிப்பதற்கே அதிக சந்தர்ப்பமில்லை. ஆகவே, சோம வேறு வழியில்லாமல் ''நானே வர்றே(ன்)'' என்றான்.

''நீ வந்தா உன்னால யாரு வேலையும் நடக்காது. நீ குடிக்கிறத விடப் போறதுமில்ல; அதனால உன் கடன் பாக்கி தீரப் போறதுமில்ல'' என்றான்.

சோம மிகவும் கலங்கிப் போனான். மன்வேலின் பேச்சு உண்மைதான். குடிப்பழக்கம் இருக்கும்வரை அவனால் எந்த வேலையும் நடக்காது. அதனால் வேறென்ன செய்வதென்று யோசிக்கத் தொடங்கினான். நீல, காள இருவரையும் அனுப்பலாமா? ஆனால், அது அவன் மனது ஒப்பாத சங்கதி.

இவர்கள் பேசாமலிருந்ததைக் கண்டு, பெள்ளியிடம் ''நீ ஏன் வரக்கூடாதுன்றேன்? வேணுமுன்னா உன் தம்பியயும் கூட கூட்டிணுவா. கடன தீத்துட்டா அப்புறம் யாரும் வரலன்னாலும் எனக்குக் கவலயில்ல'' என்றான் மன்வேல்.

''என்னாது! பெள்ளி வர்றதா?'' என்று சோம பயந்து நடுங்கினான்.

''ஏன் வரக்கூடாது? அவளுக்கென்ன கொழந்த குட்டிங்க கவலையா? ஒரு வாட்டி நீ பண்ணியிருக்கிற கடன தீத்துட்டா, அப்புறம் உங்க மனசுப்படி இருங்க. எனக்கென்னா?''

எவ்வளவு யோசித்தும் வேறு வழியே தெரியவில்லை. பெள்ளி துணிவு பெற்று, ''உனுக்கு எருதுங்கள விக்கக் கூடாதுன்னு இருந்தா என்னையாவது போக உடு'' என்றாள். சோமனின் நிலை தர்மசங்கடமாயிற்று. எருதுகளை விற்று விட்டால் மறுபடியும் தன்னால் அவைகளை வாங்குவது எப்போதுமே முடியாது; தான் விவசாயியாகவும் முடியாது என்பதும் அவனுக்குத் தெரிந்திருந்தது. அதனால் பெள்ளி போவதற்கு ஒப்பினான். பெள்ளியை மட்டும் தனியாக அனுப்புவது சரியில்லை என்று தெரிந்தது. தாங்கள் எல்லோரும் ஏன் போகக் கூடாது என்றும் தோன்றியது. ஆனால், பெள்ளி, ''எசமான் நெலத்த பழாப் போட்டுட்டுப் போயிடறதுக்காவுதா?'' என்று தடுத்தாள்.

சரி, பெள்ளியும் நீலனும் போவது என்றும் சோமனும் காளனும் ஊரிலேயே இருப்பது என்றும் முடிவாயிற்று. முடிவான பிறகு, பொழுது என்ன நேரம் என்ன? புறப்படுவதற்கான ஏற்பாடுகள் நடந்தன. சோமனின் கண்ணெதிரில் இதற்கு முன்னால் நடந்த பிரிவுக் காட்சி தோன்றியது. தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான். பெள்ளியும் ஓயாமல் அழுதாள்.

சரி, புறப்படும் வேளை நெருங்கி வந்தது. சோம மகளைத் தழுவிக் கொண்டு ''வர்ற பண்டிகைக்குள்ள வந்துடணும்'' என்றான். பெள்ளி அப்படியே வருவதாகக் கூறினாள். இருவரும் மன்வேலனின் பின்னால் புறப்பட்டனர். சோம பஞ்ஜம்வரை மகளின் பின்னாடியே போனான். அங்கும் சற்று அழுதுவிட்டு குடிசைக்குத் திரும்பினான்.

# 14

பெள்ளியின் தோட்டத்துப் பயணம் அவள் அண்ணன்களுடைய முதல் பயணத்தைப் போல அவ்வளவு சிரமமானதல்ல. பஞ்ஜத்திலிருந்து அடுத்து மன்வேல தன்னுடைய மற்ற வேலைகளின் காரணமாக, அவளையும் அவள் தம்பியையும் மோட்டாரிலேயே அழைத்துக் கொண்டு போனான். பெள்தங்கடிக்கு வரும்போது மற்ற கூலியாட்களின் ஒரு பெருங்கூட்டமே அங்கே சேர்ந்து விட்டிருந்தது. அவர்களும் களசத்து தோட்டத்துக்குச் செல்பவர்களே. அவர்களில் பெரும்பாலோர் புதியவர்கள் என்று கூறிவிட முடியாது. சிலர் முதலிலிருந்தே போய்க் கொண்டிருப்பவர்கள். சிலர் மட்டுமே பெள்ளியைப் போல் முதன் முறையாக வரும் புதியவர்கள். இந்தக் கூலியாட்களின் கூட்டத்தில் பெண்கள், பிள்ளைகள் என்று குறைந்தது நூறு பேராவது இருக்கலாம். ஒவ்வொருவருக்கும் முன்னைப் போலவே பயணச் செலவுக்கு பணத்தைக் கொடுத்து விட்டு, மன்வேல் தான் மட்டும் மோட்டாரில் உட்கார்ந்து களசத்திற்கு பயணமாகத் தயாரானான். பெள்ளியையும் நீலனையும் மற்ற ஆட்களுடன் சேர்த்தனுப்ப எண்ணி, அவளது வழிச் செலவுக்கு என்று ஒரு ரூபாயைக் கொடுக்கப் போனான். மறுபடியும் மனதில் என்ன தோன்றியதோ, ''உன் தம்பியால நடக்க முடியுமா?'' என்று கேட்டான்.

''எவ்ளோ தூரம் போவணும்?''

''வெறும் ரெண்டு நாள் தூரந்தான்!''

''ரெண்டு நாள் நடக்கணும்னா... உம் நடப்பான்'' என்றாள்.

ஆனால், அது, மனம் ஏற்றுக் கொண்ட பதிலாகத் தெரியவில்லை. மன்வேலனும் அப்போது அதிகமாக

வற்புறுத்திச் சொல்லாமல், அவர்களிருவரையும் தன்கூடவே அழைத்துப் போக தீர்மானித்துக் கொண்டான். நீலனுக்கு சொல்ல முடியாத ஆனந்தம். மோட்டார் வண்டியை இதுவரை அவன் பார்த்ததுகூட இல்லை. அந்த விசித்திர வாகனத்திலேறி பயணம் செய்யும் தன்னைப் போன்ற பாக்கியசாலி யாரும் இருக்க முடியாது என்று அவன் எண்ணிக் கொண்டான்.

சரி, அடுத்த பயணம் தொடங்கியது. பெள்தங்கடியிலிருந்து போகும் வழி என்பது ஒப்பிட முடியாத படைப்பின் அழகை - இயற்கையின் எழிலை காணக்கூடிய வாய்ப்பு. அதிலும் சார்மடி மலைச்சாரலின் உன்னதமான காட்சி. பசுமையான கணவாய்கள், அச்சமூட்டும் அருவிகள், வியப்பூட்டும் மலை முகடுகள்! இனி எல்லாவற்றையும் ஒருமுறை மறக்கச் செய்து, ஒரு மாய உலகில் அவர்களைத் தள்ளும் முகில்கள் மூடிய வெள்ளையிருட்டு; முன்னும் பின்னும் இல்லாத உலகம். எதிரில் ஆயிரக்கணக்கான அடி ஆழமுள்ள கணவாய்களிருந்தாலும், நான்கு மார் தொலைவுக்கு முன்னால் என்ன இருக்கிறது என்பதே தெரியாத மலைப்பூட்டும் இயற்கையழகு. மேகங்களின் அசைவு இன்மையால் வெகு அருகிலிருக்கும் மரம் - செடிகள் கூட, அசையாமல் நிற்கும் பேய் பிசாசு - பூதங்களாகத் தெரிகின்றன. மற்றொரு பக்கமிருந்து, பனித் துளிகள் பசும் புல்லில் படிந்து சொட்டுச் சொட்டாக இறங்கி, பாறைகளுக் கிடையில் கலகல சலசலவென்று பாய்ந்தோடும் அழகு. ஆனால், எல்லாவற்றையும் பார்ப்பதற்கும் கண்கள் வேண்டும்; மனதும் வேண்டும். மோட்டார் காட்டுக்குள் நுழைந்ததும் நீலனுக்கு பயம் பிடித்துக் கொண்டது. எங்கே அந்த வாகனம் கவிழ்ந்து, தாங்கள் எந்த விநாடியில் விழுந்து நொருங்கப் போகிறோமோ என்ற பயம்! பெள்ளிக்கு அத்தகைய அச்சமுமில்லை, ஆச்சரியமுமில்லை, ஆனந்தமுமில்லை. தன்னிலை மறப்பது இல்லவேயில்லை! தான் திரும்பி வரும்வரை தகப்பனும் தம்பியும் என்ன

ஆவார்களோ என்ற கவலை; தன் தகப்பன், தம்பி காளனை வைத்துக் கொண்டு எப்படி நாட்களைக் கழிப்பானோ என்னும் கவலை. வரவிருப்பது மழைக்காலம். வீட்டில் அவனுக்காக மீத்து வைத்திருந்த அரிசியும் மற்றதும் உறவினர்களின் வயிற்றுக்குப் போயாயிற்று. ஆசையோடு வளர்த்த கிழங்கு, கீரைகளையும் அவர்களுக்காகப் பிடுங்கியாயிற்று. இனி உழைத்தால் மட்டுமே வாழ முடியும். தகப்பனின் புத்தி போகிற போக்கில் அவன் பாடுபட்டு உழைப்பான் என்று என்ன நிச்சயம்? ஒருவேளை, கிடைக்கும் காசையெல்லாம் குடிக்குக் கொடுத்துவிட்டு காளனைப் பட்டினி போட்டு விட்டால்! அதையாவது பொறுத்துக் கொள்ளலாம். காள பட்டினி நாட்களைப் பார்த்தறியாதவனல்ல. மாறாக, அன்று அதட்டி மிரட்டியதைப் போல, தன் உடுக்கைக்குச் சரியாக 'ஆடு... ஆடு' என்று மிரட்டி வதைத்தால்! இந்தக் கவலையிலேயே அவள் தன்னை மறந்திருந்தாள். வெறும் எந்திரத்தைப்போல உட்கார்ந்து மோட்டாரிலிருந்து இறங்கி, மறுபடியும் மோட்டாரில் ஏறும் செயலை இரண்டு மூன்று முறை செய்தாள். விநாடிக்கு விநாடி கண்ணெதிரில் புதிய புதிய காட்சிகள் - சுவர்கமயமான உலகம் ஓடியாடிக் கொண்டிருந்தாலும் அவள் மட்டும் அவைகளைக் கண்டு அனுபவிக்க முடியாத குருடியாகவே இருந்தாள்.

மாலை நெருங்கியதும் அவர்களின் பயணம் முடிந்தது. மழை லேசாகத் தூரிக் கொண்டிருந்தது. நீலனும் பெள்ளியும் மன்வேலனின் பின்னால், தம்முடைய பொருட்களைச் சுமந்து கொண்டு நடந்து தோட்டத்தை அடைந்தனர். பொழுது சாய நேரமிருந்தாலும் மேகம் மூடியிருந்ததால் இருட்டாகவே இருந்தது. மன்வேல், கூலியாட்களின் லாயத்தில் ஒரு கொட்டடியை அவளுக்குக் காட்டி, "நீ இனிமே இங்கயே தங்கலாம்" என்று தெரிவித்தான். தண்ணீர், விறகுச் சுள்ளிகள் முதலான வசதிகளைக் காட்டிவிட்டு புறப்பட்டுப் போனான். அந்த நீளமான லாயத்தில் வேறு எந்த கூலியாட்களும் இன்னும்

வந்திருக்கவில்லை. மற்ற கூலியாட்கள் வருவதற்கு இன்னும் ஒன்றிரண்டு நாட்களாகும். அதுவரை எந்த வேலையும் இல்லை. மன்வேல் அவர்களை துரைகளிடம் அழைத்துப் போகவும் இல்லை. அவளிடம் அதிகம் பேசவுமில்லை. மூன்று நாட்களானதும் பெள்தங்கடியிலிருந்து புறப்பட்ட ஆட்கள், கால்நடையாகவே தங்கள் பயணத்தை முடித்துத் தோட்டத்தை அடைந்தனர். அப்போதுதான் மன்வேல் வந்து, அவர்களுடனேயே பெள்ளியையும் நீலனையும் தன் துரைகளிடம் அழைத்துச் சென்றான். அங்கு, எல்லோருக்கும் சம்பளம் முடிவாயிற்று. இந்த ஆண்டு ஆண்களுக்கு மாதத்திற்கு ஏழு ரூபாய் என்று தெரிவித்தனர். வந்திருந்த பெரும்பாலான ஆட்கள் அதிருப்தி அடைந்தனர். ''என்ன பண்றது? இந்த வருசம் காப்பிக் கொட்டைக்கி கிராக்கியே இல்லை'' என்று சமாதானம் சொன்னார்கள். சரி, எல்லோருடைய பெயர்களையும் எழுதிக் கொண்டாயிற்று. பெள்ளியின் முறை வந்தது. அவர்களுக்கிடையில் பெள்ளியின் நிறம் சற்று தூக்கலாகத் தெரிந்தது. மற்ற புலையர்களைவிட சற்று வெளுப்பாக அவள் தெரிந்ததாலும், மிகவும் புதியவளாக இருந்ததாலும் மங்கேல துரைகள் ''இவள் யாரு?'' என்று விசாரித்தார். மன்வேல், கிழச் சோமனைப் பற்றியும், அவன் பிள்ளைகள் கடந்த ஆண்டு அங்கே வந்து போனதைப் பற்றியும் கூறினான். துரை தம்முடைய கணக்குப் புத்தகத்தை விரித்து, ''உங்க அப்பன்கிட்டயிருந்து எங்களுக்கு 15 ரூபாய் கடன் பாக்கி இன்னும் வரவேண்டியது இருக்குது. நீ கஷ்டப்பட்டு தீத்துடுவே இல்லே?'' என்றார். பெள்ளிக்கு ஒரு பக்கம் சந்தோஷமும் இன்னொரு பக்கம் சந்தேகமும் ஏற்பட்டது. மன்வேல், அவர்களின் கடன் பாக்கி 25 ரூபாய் என்று பயமுறுத்தியிருந்தான். அது இப்போது வெறும் 15 ரூபாயாக குறைந்தது கேட்டு மகிழ்ச்சியாக இருந்தது. பொய்க் கணக்கைக் கூறிய மன்வேலின் ஆதரவில் பிழைப்பை நடத்துவதெப்படி என்று பயமும் ஏற்பட்டது. ஆனால், மன்வேல் அவளைச் சமாதானப்படுத்த, ''அப்படி

பயங்காட்டலேன்னா நீங்க உங்கக் கடனை தீப்பிங்களா?''
என்று சொன்னான்.

மறுநாளிலிருந்து அவரவருக்குப் பணித்த வேலையை அவரவர் செய்யத் தொடங்கினார்கள். அடுத்த நான்கைந்து மாதங்களில், தாங்களிருவரும் உழைத்து துரையின் கடனை அடைத்து தகப்பனிடம் போய்ச் சேர்ந்துவிட வேண்டுமென்பது பெள்ளியின் தீர்மானம். ஆனால், வந்த இரண்டு வாரத்திற்குள்ளாகவே அவள் கையொன்று குறைந்து போனது போல நீல குளிர்காய்ச்சலில் படுத்துவிட்டான். அவன் கூலி நின்று போயிற்று. அவனைக் கவனித்துக் கொண்டு உட்கார்ந்த பெள்ளியின் ஊதியமும் குறைந்து போயிற்று. தான் இப்படியே இருந்தால், தன்னாலும் கடனைத் தீர்க்க முடியாது என்று பயந்தாள். முதல் மாதத்தில் அவள் கைக்கு வெறும் ஐந்து ரூபாய் மட்டுமே கிடைத்தது. அதில் சேமிப்பது எவ்வளவு? செலவு செய்வது எவ்வளவு?

மாதக் கூலியை கொடுக்கும் போது மன்வேல் ''இதென்னா! உன் கணக்குல வெறும் அஞ்சு ரூபாதான் கூலி வந்திருக்குது. ரொம்ப நாளைக்கு வரக்காணோம்?'' என்றான்.

பெள்ளி சற்றுத் தயங்கி நின்று தம்பியின் காய்ச்சலைப் பற்றி தெரிவித்தாள். மன்வேல், மிகுந்த கருணை கொண்டவன்போல் ''அப்படின்னா உனுக்கு வேற வேல ஏற்பாடு செய்யறேன். நீ இனிமே என் வீட்டு வேலைக்கு வந்துடு. ஏறக்கொறைய ஆனாலும் நான் பாத்துக்கறேன்'' என்றான்.

மறுநாளிலிருந்து பெள்ளி மன்வேலனின் வீட்டு வேலைக்குப் போனாள். மன்வேலனின் வீட்டில் பெருக்குவது, தயிர் கடைவது, துணி துவைப்பது இதுபோன்ற இன்னும் சில வேலைகளிருந்தாலும் தம்பியின் உடம்பைப் பார்த்துக் கொள்வதற்குப் போதுமான ஓய்வு

கிடைத்தது. மேலும், அங்கு கிடைக்கும் உணவினால் அவர்களது அன்றாட வயிற்றுப்பாடும் செலவில்லாமல் நகர்ந்தது. அவளது வேலை தொடங்கிய ஒரு வாரத்திலேயே, அவள் உடுத்தியிருந்த கிழிந்த கந்தலைக் கண்டு, மன்வேல் ஒரு சேலையைக் கொடுத்தான். நீலனுக்காக ஒரு கம்பளியைக் கொடுத்தான். எதற்காகவோ, மன்வேல் பெள்ளியின் வாழ்க்கையில் அக்கறை காட்டத் தொடங்கியிருப்பதாகத் தெரிந்தது. நாளாக நாளாக மன்வேல் பேசுவதும் சிரிப்பதும் சேட்டைகள் செய்வதும் அதிகரித்துக் கொண்டே போனது. அவளுக்கும் அதெல்லாம் எதற்காக என்று புரியத்தான் செய்தது. வாழ்க்கையில் முதன் முறையாக இளமைத் துடிப்பை அவளும் அனுபவிக்கத் தொடங்கினாள். அதனால் மன்வேலனின் சேட்டைகளைத் தடுக்க முயற்சிக்கவில்லை; அதையெல்லாம் அவளே ஒப்பி ஏற்றுக் கொள்வதைப் போலவே அவளது நடவடிக்கைகளும் இருந்தன. அவனது கருணையினால் தகப்பனின் கடன் தீருவதானால் என்னவானால்தான் என்ன என்ற அலட்சியப் போக்கு அவளிடம் ஏற்பட்டிருந்தது.

சரி, உடல் பசி என்னும் பலவீனம் அவளை உடலின் அடிமையாக மாற்றியிருந்தது. மன்வேலனால் அவ்வப்போது கிடைத்து வந்த, ஓரணா இரண்டணா அன்பளிப்புக்களைச் சேர்த்து வைத்து தன் தகப்பனின் கடனைத் தீர்த்துவிடலாம் என்னும் நம்பிக்கையைப் பெற்றாள்.

## 15

பெள்ளியும் நீலனும் தோட்டத்திற்கு வந்து இப்போது ஆறு மாதம் ஆகியிருந்தது. நீலனால் ஒரு தம்பிடி சேமிப்பும் அவளுக்குக் கிடைக்கவில்லை. பெள்ளி, சேமித்த பணத்திலிருந்து அவன் உடம்பு குணமாவதற்காக மருந்து, மந்திரம் என்று நான்கைந்து ரூபாய் செலவானது. இப்போது

ஏதோ நல்ல காலமாக நீலனின் நோய் குணமாகியுள்ளது. இருந்தாலும் உழைக்கும் தெம்பு இன்னும் உடம்புக்கு வரவில்லை. ஒருநாள் நீல தன் கொட்டடியின் எதிரில் உட்கார்ந்திருந்தான். அவன் வயதே இருக்கும் மற்றொரு கூலிக்காரச் சிறுவன் அவனிடம் வந்தான். இருவரும் விளையாடத் தொடங்கினர். நீண்ட நேரம் மகிழ்ச்சியாக ஆடிப்பாடி கழித்தனர். நடுவில் எதற்காகவோ அவர்களிடையில் சண்டை தொடங்கியது. சிரித்து விளையாடிக் கொண்டிருந்தவர்கள் கோபத்தில் திட்டிக் கொள்ளத் தொடங்கினர். இருவரும் தத்தமது இடுப்படிச் சொற்களஞ்சியங்களைப் பரிமாறிக் கொண்டனர். அதனாலும்கூட மனம் ஆறாமல், அந்த சிறுவன் ஆத்திரத்தில், ''போடா, கங்காணிக்கு மச்சான் பையா!'' என்று கத்தி விட்டான். நீலனுக்கு அவன் என்ன சொல்கிறான் என்று புரியவில்லை. நீல, சண்டை போட்டு தளர்ந்து, தன் கொட்டடிக்குப் போய் உட்கார்ந்து விட்டான். பெள்ளி அன்றாட வேலையை முடித்துவிட்டு மன்வேலனின் வீட்டிலிருந்து வரும்போது, நீல முக வாட்டத்தோடிருப்பதைக் கண்டு, ''என்னா நீலா... திரும்பியும் காச்சலு வருதா?'' என்று விசாரித்தாள். நீல, மற்றொரு பையனோடு சண்டை போட்டதைக் கூறி, ''கங்காணிக்கு மச்சான் பையா!'' என்று அவன் திட்டியதையும் கூறினான். பெள்ளிக்கு அதைக் கேட்டு அதிர்ச்சியாக இருந்தது. தன் வாழ்க்கையின் களங்கக் கதை தோட்டமெல்லாம் பரவிவிடும் என்று அவள் ஊகித்ததில்லை. 'இனி தன் கதி என்ன?' என்று வருந்தினாள்.

அன்று பிற்பகல் பெள்ளி மன்வேலனின் வீட்டுக்குப் போக தோட்டத்தின் சிறு பாதையொன்றில் நடந்து போய்க் கொண்டிருந்தாள். மிங்கேலதுரை தம்முடைய இரண்டு நாய்களை அழைத்துக் கொண்டு, அவ்வப்போது அவைகளுடன் விளையாடிக் கொண்டு, அதே பாதையில் வந்து கொண்டிருந்தார். பெள்ளியைக் கண்டு நாய்கள்

குரைத்தவாறு பாய்ந்து வந்தன. பெள்ளி மிகவும் பயந்துபோய் ''அய்யோ'' என்று கத்திவிட்டாள். துரை, வேகமாக ஓடி வந்து நாய்களின் சங்கிலிகளைப் பிடித்து பின்னுக்கு இழுத்து தடுத்து நிறுத்தினார். நாய்கள் குரைத்தபடியே இருந்தன. துரை சிரித்துக் கொண்டே ''என்ன பயந்துட்டியா?'' என்று கேட்டார். பெள்ளி வெட்கத்தோடு தலை கவிழ்ந்தாள். அவளின் சிரிப்பு துரையை மயக்கியது. அவர் அங்கேயே நின்று ''நீ சோமனோட மகள் இல்லையா?'' என்று கேட்டார். பெள்ளி தலை கவிழ்ந்தபடியே, ''ஆமா...'' என்றாள். துரை உடனே ''உன் அப்பாவோட கடன் எவ்வளவு தீர்த்திருக்கிறே? உன் கணக்கைப் பார்க்கணுமே! சாயங்காலம் பங்களாவுக்கு வா'' என்றார்.

பெள்ளி வேலைக்குப் போனாள். அவள் மனம் பயத்தில் நடுங்கியது. துரையின் பேச்சுக்கு என்ன அர்த்தம் என்று அவளுக்கு நன்றாகப் புரிந்தது. இந்தத் தோட்டத்தில் இனி தன் கதி என்னவாகும் - என்பது அவளுக்குப் புரியாத ஒன்றாக இருந்தது. மாலை எல்லா வேலைகளும் முடிந்து தன்னுடைய கொட்டடிக்குப் போனாள். கதவை மூடிக்கொண்டு அப்படியே குழந்தையைப் போல அழுதுக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். பக்கத்தில் நீல படுத்திருந்தான். நீல அன்று தெரிவித்த செய்தி நினைவுக்கு வந்தது. இன்னும் நாட்கள் போனால், 'துரைகளின் மச்சான்' என்று ஆட்கள் தன்னை அழைக்கிறார்கள் என்று நீல வந்து சொல்வானே என்று நடுங்கினாள். அப்போது கதவை யாரோ தட்டினார்கள். அவள் பேசாமலிருந்தாள். கதவையும் திறக்கவில்லை. மன்வேல் வெளியிலிருந்து ''பெள்ளி கதவைத் தொற'' என்றான். அவன் குரலைக் கேட்டதும் சற்று துணிவு வந்து கதவைத் திறந்தாள். வெளியே வரும்படி மன்வேல் அழைத்தான். வெளியேயும் வந்தாள். மன்வேல் அங்கிருந்து நடக்கத் தொடங்கினான். பெள்ளியின் கால்கள் தானாகவே அவனைப் பின் தொடர்ந்தன. ஆனால், பின் தொடர்ந்தது மன்வேலனின் வீட்டிற்கு இல்லை, துரைகளின் பங்களாவிற்கு!

மறுநாளிலிருந்து பெள்ளி, பேய் பிசாசைக் கண்டு பயந்து போனவளைப் போலக் காணப்பட்டாள். அவளுக்கு தகப்பனின் நினைவு வந்தது! தன்னுடைய எல்லா நடவடிக்கைகளும் அவன் காதுக்கு எட்டியது என்றால், தான் செய்த எல்லா வேலைகளும் வீணாகுமே என்று அஞ்சி நடுங்கினாள்! தகப்பனின் கடனைத்தானே தீர்த்துக் கொண்டிருக்கிறோம் என்று எவ்வளவு சமாதானம் சொல்லிக் கொண்டாலும் மனதிற்கு அமைதி கிடைக்கவில்லை. அந்த இடத்திலிருந்து தான் ஓடிப் போகாமல் தனக்கு நல்ல காலம் இல்லையென்று அவளுக்குப் புரிந்தது. இந்த எண்ணம் வந்தவுடனே தன்னிடமிருந்த பணத்தை எடுத்துக் கொண்டு மன்வேலனிடம் சென்றாள். நேற்று வரை துரை கொடுத்த ஐந்து ரூபாயையும் சேர்த்து பதினைந்து ரூபாய் கையிலிருந்தது. எல்லாவற்றையும் அவன் முன்னால் வைத்துவிட்டு ''நான் என் ஊருக்குப் போறேன்'' என்றாள். மன்வேல் பயந்துவிட்டான். அவன் யோசனையில் ஆழ்ந்தான். அவளுக்கு ஏதோ சமாதானமாக சொன்னான். ஆனால், பெள்ளியின் பயம் மட்டும் சற்றும் குறையவில்லை. மன்வேல் மீண்டும் யோசனையில் ஆழ்ந்தான். ஒருவாரத்திற்குள் அவன் மனைவியும் வந்து விடுவாள். அதனால் கடைசியில் வேறு வழியில்லாமல், அவள் ஓடிப் போவதற்கு ஒப்புதல் தரவேண்டியதாயிற்று. கூடவே அவள் வழிச் செலவுக்கென்று சிறிது பணமும் கொடுக்க வேண்டியிருந்தது.

சரி, அன்று இரவே பெள்ளி தம்பி நீலனுடன் தோட்டத்திலிருந்து காணாமல் போனாள். மறுநாள் மன்வேல் மற்ற கூலியாட்களிடம் பெள்ளி எங்கே? என்ன? என்று விசாரித்து நாடகத்தை முடித்தான். பெள்ளி காணாமல் போன செய்தி துரைகளின் காதுக்கும் எட்டியது. துரைகளும் மன்வேலனைக் கண்டித்து கூச்சல் போட்டார். ''அவளை எங்கிருந்தாலும் நீ தேடிப்பிடிச்சு கூட்டிக் கொண்டு வந்தேயாகணும்'' என்று மிரட்டினார்.

மன்வேலனும் சரியென்று சொல்லிப் புறப்பட்டான். சுற்றுமுற்றிலுமுள்ள தோட்டங்களுக்கு ஆட்களைத் துரத்தினான். அவர்களெல்லோரும் அவளை எங்கெல்லாமோ தேடினார்கள். ஒருவன் ''நான் வர்ற பாதையில ஒரு குட்டையில எதுவோ துணி மெதக்கிறதப் பாத்தேன்'' என்றான். துரைகளின் மனதுக்கு அவள் தற்கொலைச் செய்து கொண்டிருக்க வேண்டுமென்று அச்சம் ஏற்பட்டது. அதனால் பெள்ளியை இனியும் தேடச் செய்வது ஆபத்தாகுமென்று எண்ணி அமைதியடைந்தார்.

ஊர்த் திருவிழாவுக்கு இன்னும் ஒரு மாதம் இருக்கும்போதே பெள்ளியும் தம்பியும் வீடு வந்து சேர்ந்தனர்! குடிசைக்குள் நுழைய வாயிற்படியைத் தாண்டும்போது அவள் இதயம் இடியிடிப்பதைப் போல அடித்துக் கொண்டது. சோமனைக் கண்டதும், மகிழ்ச்சியடைவதற்கு மாறாக அஞ்சி நடுங்கினாள். முகத்தை நிமிர்ந்து பார்க்கும் துணிவு வரவில்லை. சோம மகளை உட்கார வைத்துக் கொண்டு நிறைய பேசினான். எவ்வளவு பேசினாலும் தீராத பேச்சு. தன்மகள், ஆண் பிள்ளைகள் தீர்க்க முடியாத தன் கடனைத் தீர்த்துவிட்டு வந்திருக்கிறாளென்றால் அவனுக்கு எவ்வளவு பெருமை, மகிழ்ச்சி இருக்கும்; எப்படித் தீர்த்தாள் என்பது அவளுக்குத்தானே தெரியும்?

அதன்பின் சோமனின் குடிசையில் நாட்கள் ஆனந்தமாகக் கழிந்தன. பெள்ளியின் உழைப்பில் வரும் காசில் ஒரு பகுதி தினமும் அவனுக்குக் குடிப்பதற்குக் கிடைத்தது. குடித்த பிறகு ஆட்டமும் தப்பாமல் இருந்தது. பழைய உடுக்கையின் பழைய தோல் தேய்ந்து போய்ப் புதுத்தோல் வந்துவிட்டது.

இன்று ஊர்த் திருவிழாநாள். கடந்த திருவிழா நாளை நினைத்துக் கொண்டால் பெள்ளிக்கு இதயமே பிளப்பது போலிருந்தது. அண்ணன் காய்ச்சலில் படுத்திருந்த காட்சி, தகப்பன் குருவனிருக்குமிடம் போய்வந்த காட்சி எல்லாம்

கண் முன்னே நின்றன. இந்த ஆண்டு அதை முழுவதுமாக மறந்து விடும்படியாக திருவிழா அமைய வேண்டிக் கொண்டாள். சோமனின் மனதில் மற்றொரு அபூர்வ யோசனை பிறந்தது. பெள்ளிக்கு மாப்பிள்ளை ஒருவனை ஏற்பாடு செய்து, அவனை வீட்டு மாப்பிள்ளையாக வைத்துக் கொள்ள வேண்டுமென்ற ஆசை! பெள்ளியிடம் அதுபற்றி எதுவும் பேசவில்லை. ஒருபக்கம் அந்த மகிழ்ச்சியோடு ஒருவகையான பொறாமையும் பிறந்தது. மருமகன் வீட்டுக்கு வந்து விட்டால், கிழவனான தன்மீது பெள்ளிக்கு முன்பிருந்த பாசம் அப்படியே இருக்குமா என்று. அதை நினைக்கும்போது வருத்தம் மேலிட்டது. ஆனாலும், "இனிமே அவ என்னெ கால்ல ஒதச்சி தொரத்துனாலும் கவலயில்ல. எப்பிடியோ என் கடன தீத்துட்டாளே... அது என்னால முடிஞ்சதா...? அய்யோ! என் பெள்ளியும் ஆணாப் பொறந்திருந்தா என் மீச இன்னும் கொஞ்சம் ஒசந்துருக்குமே!'' என்றெல்லாம் எண்ணிக் கொண்டான். பெள்ளி ஆணாக இருந்திருந்தால் இன்னொரு குருவனாகியிருப்பான் என்று அவனுக்கு எங்கே தெரியப் போகிறது.

பொழுது விடிந்தது. ஊரார் வரிசை வரிசையாக திருவிழாவுக்குப் போய்க் கொண்டிருந்தனர். இன்றைக்கு தொலைதூரமிருந்தெல்லாம் சொந்த சாதி ஆட்கள் வருவார்கள். அவர்களில் ஒருவனாவது பெள்ளிக்கு தகுந்த பையனாகக் கிடைக்காமல் போவானா? என்ற எண்ணத்தில் சோம புறப்பட்டுக் கொண்டிருந்தான். தன்னிடமிருந்த ஒரேயொரு ரூபாயை பெள்ளி அக்கறையோடு தகப்பன் கையில் வைத்தாள். அதைக் கண்டதும், அவனுக்குத்தான் ஆற்ற வேண்டிய கடமையின் சுமை இன்னும் எவ்வளவு உள்ளதோ என்று கவலை கொண்டான். பெள்ளி தம்பிகளுக்குத் தலைவாரி, தானும் அலங்கரித்துக் கொண்டு, மன்வேல் கொடுத்த அந்த ஒரு புதிய புடவையைக் கட்டிக் கொண்டு திருவிழாவுக்குப் புறப்பட்டாள்.

இந்த முறை திருவிழாவென்றால் திருவிழாதான்! அந்த மாதிரித் திருவிழா இதுவரை நடந்ததேயில்லை என்று எல்லோரிடமும் சொல்லிக் கொண்டிருந்தான் சோம. உண்மையோ பொய்யோ நமக்குத் தெரியாது. எப்படியோ அவன் கண்களுக்கு, சுற்றியிருக்கின்ற மரம் - செடி கொடிகள் கூட மகிழ்ச்சியில் பூரித்து ஆடிப்பாடுவதாகத் தோன்றியது. திருவிழாவிற்கு நூற்றுக்கணக்கான புலையர்கள் வந்திருந்தனர். தெரிந்தவர் தெரியாதவர் என்றில்லாமல் பார்த்த எல்லோருடனும் பேசிப் பழகினான் சோம. வயதுப் பிள்ளைகளைக் கண்டால், மேலும் உற்சாகத்தோடு பேசினான். பெள்ளியும் பெண்கள் கூட்டத்தில் கலந்துவிட்டாள். எல்லா பெண்களுக்கும் அவளுடைய புதிய புடவையின் மீதே கண். அதைப் பற்றிப் பேசினால் மட்டும் அவள் உள்ளுக்குள் நடுங்கிப் போவாள்! அவளுடைய போதாத வேளைக்கு திருவிழாவில் எங்கோ ஒரு மூலையில் மன்வேலனின் உருவம் அவள் கண்ணில் பட்டுவிட்டது. அதைக் கண்டு அவள் பெரிதும் பயந்து போனாள்! மாலையாவதற்குள், தனக்கு உடம்பு சரியில்லையென்று காரணம் கூறிவிட்டு, தன் குடிசைக்குத் திரும்பி விட்டாள். சோமனிடம் கூட சொல்லிக் கொள்ளாமலே வந்துவிட்டாள். சோமனின் எதிரில் மன்வேல் வந்து நின்றாலும், அவன் பக்கம் சோம திரும்பிக்கூட பார்க்கவில்லை. சோமனின் மனதுக்குள் ஒருவித பெருமையும் வெறுப்பும் குடி கொண்டிருந்தன. மன்வேல் தானாகவே ''பெள்ளி வரலியா? நீல எங்கே?'' என்று விசாரித்தான். ''வந்துருக்காங்க... அங்கெங்கனா இருக்கணும்'' என்று சோம அலட்சியமாக பதில் கூறினான்.

திருவிழா இரவின் கோலாகலத்தைச் சொல்லித் தீராது. இருந்த ஒரு ரூபாயில் பிருமனின் நீர்த்துப்போன கள்ளை வாங்கி நண்பர்களைக் குடிக்க வைத்தான். எல்லோரும் சேர்ந்து காய்ந்த மரச் சுள்ளிகள், கட்டை முதலானவைகளைப் பொறுக்கிச் சேர்த்து நெருப்பு உண்டாக்கி எரியவிட்டனர். அதன் வெளிச்சத்தில்

சோமனின் உடுக்கை வாசிப்பு துவங்கியது. அவனைப் பின்பற்றி இன்னும் சிலர் தங்கள் உடுக்கைகளைக் கையிலெடுத்தனர். கூடியிருந்த பெண்கள் பாடிக் கொண்டே வட்டமாக ஆடத் தொடங்கினர். அந்த வட்டத்திற்குள் இரண்டு இளைஞர்கள் ஆடுவதற்குத் தயாராக வந்து நின்றனர். அவர்களிலொருவன் குழலை ஊதிக் கொண்டே ஆடத் தொடங்கினான். குழலை ஊதிக் கொண்டே ஆடிய இளைஞன் மீது சோமனின் பார்வை பாய்ந்தது. அவனையே தன் மாப்பிள்ளையாக்கிக் கொண்டால் என்ன? - என்று மனது எடை போட்டது. ஆனால், சற்று நேரத்திற்குள்ளாகவே அந்த இளைஞனையும் மீறும் மற்றொரு ஆட்டக்காரன் வந்தான். சோமனின் நண்பர்கள் உடுக்கைகளை அடித்து அடித்துச் சோர்ந்து போனார்கள். ஆனால், சோமனின் கை தோற்றுப் போகுமா? அவன் கை வாசிப்புக்குத் தக்கபடி தாளம் தப்பாமல் அடிமாறாமல் ஆடியவன் ஒரேயொரு பையன்தான். அவன் சுள்யம் ஊரைச் சேர்ந்தவனாம்! அங்கிருந்த 'பஞ்ஜ'த்திற்கு தன் உறவினர் வீட்டுக்கு வந்திருந்தானாம். உறவினர் வீட்டிலிருந்து திருவிழா பார்க்க வந்துவிட்டான். அவனே தன் வருங்கால மருமகன் என்று சோம மனதுக்குள் முடிவு செய்து கொண்டான்.

இரவெல்லாம் சொல்ல முடியாத மகிழ்ச்சியில் கழிந்தது. வானத்தில் வெள்ளி முளைத்ததும் அதன்மீது சோமனுக்குக் கோபம்; இனி விரைவிலேயே சூரிய உதயமும் ஆகிவிடும். வெள்ளி முளைத்திருக்கக் கூடாது; தன் மகிழ்ச்சி கலைந்து விடக் கூடாது என்ற எண்ணம்தான்.

மாப்பிள்ளை யார் என்று தன் மனதில் முடிவு செய்தாயிற்று. ஆனால், சோம தன் நண்பர்களிடம் அவனைப் பற்றி விசாரித்தபோது, அவனுக்கு ஏற்கெனவே திருமணம் ஆகிவிட்டது - என்று தெரிந்தது. என்ன ஏமாற்றம்! அந்தப் பையனைக் கட்டிக் கொண்ட பெண் இறந்து போய்விட்டாள் என்று கேள்விப்பட்டால்

அப்போதிருந்த மனநிலையில் சோம வருத்தப்படுவதற்கு மாறாக மகிழ்ச்சியே அடைந்திருப்பான்!

## 16

திருவிழா முடிந்ததென்றால் இன்னும் பதினைந்து இருபது நாட்களில் உண்மையான மழைக்காலம் வந்துவிடும் என்பது உறுதி. மழைக்காலத்து மேகங்கள் இப்போதே வானத்தில் கவியத் தொடங்கிவிட்டன. கருமுகில்கள், சூறாவளி, பெருங்காற்று இவைகளினால் இடி, மின்னல், இவைகளின் துவக்கத்தோடு சோமனின் வாழ்க்கையிலும் அவைகளையே எதிரொளிக்கும் படியான இடி, மின்னல்களும் வரத் தொடங்கின. மகள் வீட்டுக்கு வந்து ஒரு மாதமாகிறது. மிகவும் மகிழ்ச்சியாகவே எல்லாம் நடந்து வருவதாக அவனுக்குத் தோன்றியது. நாட்கள் எப்படி நகர்ந்தன என்றே தெரியவில்லை. திருவிழா நடந்து முடிந்தும் எட்டு நாட்களாகியிருந்தன. வரப்போகும் மழைக் காலத்திற்கான எல்லா விவசாய வேலைகளும் ஊரெங்கிலும் நடந்து கொண்டிருந்தன. சோம, இப்போது அறுபதைத் தாண்டிக் கொண்டிருந்தான். தலை நரைத்துப் போயிருந்தது. இந்த ஒரு ஆண்டுக்குள்ளாக முகத்தில் சுருக்கங்கள் அதிகரித்திருந்தன. பற்கள் கூட ஆடத் தொடங்கியிருந்தன. 'இன்னும் எவ்வளவு காலத்துக்கு நான் பொழச்சிருக்கப் போறே(ன்)? இந்த மழைகாலம் போய் அடுத்த மழை காலத்துலயாவது எனுக்கு ஏரு புடிக்கிற பாக்கியம் வருமா? இப்போ வராதது இனிமே எப்போ வரப்போகுது?' என்ற அவநம்பிக்கை வாட்டத் தொடங்கியது. அதன் காரணமாக, இந்த பருவத்துக்குள்ளாகவே தான் விவசாயியாகிவிட வேண்டும் என்ற பிடிவாதத்திலிருந்தான். 'மறுபடியும் போயி எசமானக் கேட்டுப் பாக்கிறது, அவுரு ஒப்பலன்னா, அவுங்க நெலத்து ரொணம் முடிஞ்சி போச்சின்னு நெனச்சிக்கினு சர்க்காரு எடத்துல தங்கிக்கிறது. ஊருக்கு வெளிய ஒரு பெரிய பொறம்போக்கு நெலம் இருந்தே

இருக்குது. அங்க தண்ணி கெடைக்கலின்னாலும், மளகாலத்துல ஏதாவது பயிர கவலயில்லாம வெளைக்கலாமே! நாலு புடி நெல்லுமணி கூடவா கெடைக்காம போயிடும்? கெடச்சாலுஞ்சரி கெடைக்காம போனாலும் சரி; கடைசி கடைசியா, எனுக்கு ஒதவி செய்யாத நாலு பேரு முன்னால ஒரு நாளைக்காவது மீசயத் திருகி நடக்கலாமில்ல!'' என்ற முடிவுக்கு வந்தான்.

மகளிடம் அதைப் பற்றி எதுவும் பேசாமல், பண்ணையாரைப் பார்த்துவிட்டு வர குடிசையிலிருந்து வாசலுக்கு வந்தான். நாள்தோறும் வெளியே போகும்போது தன் இடுப்பில் ஒரு கத்தியை சொருகிக் கொண்டு போகின்றவன், இன்று வெறும் கையோடு அவசரமாகப் புறப்பட்டதைக் கண்டு பெள்ளி சிரித்தவாறு, ''யப்பா... எங்க பொறப்புட்டே'' என்று கேட்டாள். அவனுக்குக் கோபம் வந்தது. புறப்படும்போது ''எங்கே?'' என்று அபசகுனமாக கேட்கிறாளே என்று கோபம். ஆனால், பெள்ளியின் முகத்தைப் பார்த்ததும் சற்று பொறுமை வந்து, ''எங்கயுமில்ல'' என்று கூறி திரும்பி வந்தான். புறப்பட்ட வேளை சரியில்லையென்று எண்ணிக் கொண்டான். எப்படியோ, இந்த முறை சென்று பண்ணையாரைப் பார்த்துக் கேட்டாலும் பலன் கிடைக்கப் போவதில்லை என்ற அச்சம் ஏற்பட்டது. இரண்டு முறை சென்று கேட்டும் பலன் இல்லாதபோது மூன்றாவது முறை கேட்பதால் மாறிவிடப் போகிறதா பண்ணையாரின் மனம்? 'ரெண்டு தடவ ஆனதுதான் மூணாவதாவும்' என்ற சொலவடையே இருக்கிறதே! மனதில் நம்பிக்கை நொறுங்கி கவலை நிறைந்தது. அவனது கவலை தோய்ந்த முகத்தைக் கண்டு, பெள்ளி அவன் அருகில் வந்து, ''யப்பா கோவமா? எனுக்குத் தெரியாது... நீ வேற எதுவோ வேலைக்கிப் போறேன்னு; கத்திய மறந்துட்டியேன்னு அப்பிடிக் கேட்டே(ன்). இனிமே நீ பொறப்படும்போது என்னிக்கும் அப்பிடி 'எங்க'ன்னு கேக்க மாட்டேன்!!'' என்று கெஞ்சினாள்.

சோம பெருமூச்சு விட்டு ''கடவுளு எந்தலையில அப்பபடி எழுதியிருந்தா. அதுக்கு யாரு என்னா பண்ண முடியும்?'' என்றான்.

''என்னாத்த அப்பிடி எழுதியிருக்குதுன்ற?''

''என்னாத்தன்னு கேட்டா? வெவசாயம் பண்ணனுன்ற என் ஆசயத்தான்.''

''அதுவா! அய்யோ யப்பா, சும்மாயிருக்காம எதுக்கு அத நெனச்சி கவலப்பட்டுனு கெடக்கிற. நாம பொலயருங்களா பொறந்துட்டு நம்ம நெலமைக்கு மீறின ஆசபட்டா எப்பிடி? அதுக்கு குடுத்து வச்சிருக்க வாணாமா? எல்லாத்துக்கும் அதிஷ்டம் வோணும். நம்ம தலயில கடவுளு எழுதியிருக்கணும். அப்பதானே ஆவும்! குருவ ஒருத்தன் தலயிலதான் எழுதியிருக்குது! அவ(ன்) சாதிய உட்டுட்டாவது, வெவசாயியாயிட்டான். அவ(ன்) மட்டும் நம்ம எனத்துல பொறந்தாலும் வெவசாயம் பண்ண குடுத்து வச்சிருக்கிறான்'' என்றாள். குருவனின் பெயரைக் கேட்டதும் சோமனுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. அவன் தன் பேச்சைக் கேட்காமல் போன வருத்தம் வேறு. மறுபடியும் தன் வீட்டுப் பக்கமே முகத்தைக் காட்டாமலிருந்தது பற்றிய கோபம் வேறு. தன் கண் முன்பாகவே அவன் விவசாயி ஆகிவிட்டானே என்னும் பொறாமை! எல்லாம் சேர்ந்து கொண்டு அவனை அலைக்கழித்தன.

அதனால் மீண்டும் குடிசையை விட்டுப் புறப்பட்டான். அவன் மனதில் கொந்தளிப்பு - கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது. ''எல்லாத்துக்கும் இன்னிக்கே ஒரு முடிவு கட்டிடறேன்' என்று புறப்பட்டான். நேராக பண்ணையாரின் வீட்டுக்குப் போய், வாசலில் தான் வழக்கமாக உட்காரும் இடத்திலேயே உட்கார்ந்தான்! இப்போதெல்லாம் அவன் வருவதற்கும் போவதற்கும் ஒரு நேரம் காலம் என்று இல்லாமல் போனதால்,

காலையிலேயே வந்து உட்கார்ந்திருந்த கிழச் சோமனைப் பார்த்து சங்கப்பய்யாவுக்கு ஆச்சரியமாக இருந்தது. ''என்ன சோமா... ரொம்ப அபூர்வமா வந்து தரிசனம் குடுத்திருக்கிறே?'' என்று வேடிக்கைச் செய்தார். வந்த வேளை எந்த அளவுக்கு நல்லதாக இருக்கும் என்பது அவனுக்குத் தெரியவில்லை. ஒன்றும் பேசாமல் அமைதியாக அவன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்து சங்கப்பய்யாவே ''என்ன கேக்கலாம்னு வந்தே? இல்லன்னா வீட்டு வேலை ஏதாவது பண்ணலாம்னு வந்தியா?'' என்றார். சோம பேசவில்லை.

''ஊம்... சொல்லு... இனிமே உன்னால என்ன வேல செய்ய முடியும்?''

''..................''

''உனக்கு வயசாயிடுத்துப் பாரு... இனிமே நீ நாளை எண்ணிக்கிட்டிருக்கிறவன். எப்படியோ வந்து போயிகிட்டிரு.... சாயங்கால வேளைல மட்டும் இங்க வரவேண்டாம். சும்மா பேச்சுக்கு சொல்றதுதான்... சாயங்கால வேளைல வர வேண்டாம்னு. ஆனா உனக்கு சாயங்காலம்னா என்ன... காலையிலேன்னா என்ன? சோம! உன் பொண்ணு கடைசியில கடனைத் தீத்துட்டு வந்தாளோ இல்ல... இன்னும் கொஞ்சம் அதிகமாக்கிட்டு வந்தாளோ...?''

''கடவுளு புண்யத்துல எல்லா கடனையும் தீத்துட்டுத்தா(ன்) வந்தா...''

''எப்பிடியோ ஒரு விஷயத்துலே உன் கவலை தீர்ந்ததோல்லியோ...?''

''அது முடிஞ்சுது... இன்னொன்னு மட்டும்... எசமானக் கேக்கலாமுன்னு வந்தெ(ன்). மொதல்ல சொன்ன மாதிரியே சொல்லிட்டா, என் வாயில மண்ணுதான். என்ன

பண்ணப் போறீங்க? உங்க இந்த அடிம ஆசப்பட்டது நெறவேறாம சாக வுட்டுடுவிங்களா?''

''என்ன சங்கதின்னு வாய்விட்டு சொல்லக் கூடாதா! இந்த சுத்தி வளைச்சி வர்ணம் பூசுறதெல்லாம் எதுக்கு? என்ன வேணும்? குத்தகைக்கு நெலம் வேணும்னு கேக்க வந்தியா? மழக்காலம் வந்துட்டது...''

''ஆமாம்... அதே தான்...

இதைக் கேட்டதும் சங்கப்பய்யாவின் முகமே மாறிவிட்டது. ''சோம, உனக்குக் கொடுக்கக் கூடாதுன்றது இல்ல. ஊரார் பண்ணாததை பண்றதுக்கு நான் தயாரா இல்ல. அப்பிடி ஏதாவது நான் உனக்கு குடுக்கணும்னா அதுக்கு எங்கம்மா சாகணும்! அவங்க இருக்கிற வரைக்கும் நீ அந்த பேச்சையே எடுக்காதே.''

தான் விவசாயியாவதற்காக தன் எசமானனின் தாய் சாக வேண்டுமென்று ஆசைபட்டு எதிர்பார்ப்பது சரியா? சோமனால் அது முடியாது. ஏமாற்றத்துடன் திரும்பினான். அன்று முழுவதும் அவன் ஒரு பருக்கை சோற்றைக் கூட தொட்டும் பார்க்கவில்லை. பெள்ளி, இனிமேல் இந்த வீணானஆசையை வைத்துக் கொண்டு கலங்க வேண்டாமென்று எவ்வளவோ சொன்னாள். அதனாலேயே அவன் மனம் சமாதானமடைந்து விடுமா? அவன் மீண்டும் மனக் கலக்கத்தில் தன்னை மறந்து மிதக்கத் தொடங்கினான்.

மறுநாள் இன்னொரு நடக்கக் கூடாத நிகழ்ச்சி நடந்தது. அவன் தன் இரண்டு பிள்ளைகளையும் சற்றுத் தொலைவிலிருந்த ஒரு ஏரிக்குக் குளிக்க அழைத்துக் கொண்டுப் போனான். தம்பிகளைத் தினமும் குளிப்பாட்டும் வேலை பெள்ளியுடையது. அப்படிக் குளிப்பாட்டப்பட வேண்டிய வயது கடந்திருந்தாலும் தாயை இழந்தப் பிள்ளைகளென்று பெள்ளி அதிக

பாசத்துடன் கவனித்துக் கொண்டாள். இன்று அவளுக்கு வீட்டுவேலை நிறைய இருந்ததால் தன் தகப்பனை அனுப்பி வைத்தாள். சோமனின் பின்னால் பிள்ளைகளிருவரும் பாடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் நடந்தனர். ஊரைச் சேர்ந்த ஏரி வந்தது. சோம பிள்ளைகளை நிற்க வைத்துவிட்டு, அவர்களின் தலைக்கு வைத்திருக்கும் எண்ணெய்ப் பிசுக்கைத் தேய்த்தெடுக்க, என்னவோ இலையைப் பறிக்கப் போனான். ஓடை பாய்ந்து ஓடி ஆழமாக்கியிருந்த ஏரி அது. ஏரியின் மேல்புறத்தில் ஊரின் மேல்சாதியின் நிறைய பேர் துணி துவைத்துக் கொண்டு இருந்தனர். சில சிறுவர்கள் நீரில் ஆடிக் கொண்டிருந்தனர். காளனுக்கும் நீலனுக்கும் நீரில் இறங்க மனம் துடித்தது. தகப்பன் வருவதற்காகக் காத்திருக்காமல் நீரில் இறங்கி, நீரை அள்ளி அளைந்து அடித்துத் திளைக்கத் தொடங்கினர். பிள்ளைகளுக்கு நீரில் ஆடுவதென்றால் கள்ளு குடித்தது போல. உற்சாகம் ஏறஏற மேலும் மேலும் ஏரியின் நடுப்பகுதி நோக்கி நகர்ந்தனர். அவர்களுக்கு நீந்தத் தெரியுமென்பதால் ஒருவரை ஒருவர் துரத்துவது, முழுகுவது, தொடுவது, தப்பித்துக் கொள்வது என்று ஒரே ஆரவாரமாக இருந்தது. தினமும் இப்படி ஆடிக் கொண்டிருந்தவர்கள்தான். ஆனால், இன்று வேளை சரியில்லையோ என்னவோ, நீல கை சோர்ந்து நீந்த முடியாமல் முழுகத் தொடங்கினான். காள பயந்துபோய் கரைக்கு வந்து கத்தத் தொடங்கினான். தொலைவில் சோமனுக்கும் அந்தக் கத்தல் கேட்டது. அவன் பாய்ந்து வந்தான். வரும்போது அவன் கால் இடறி விழுந்து, சட்டென்று எழுந்து வர நேரமாகிவிட்டது. இங்கு ஏரியின் மேல் பகுதியிலிருந்தவர்கள் ஓடி வந்தனர். ஒரு பார்ப்பன இளைஞன் ஓடி வந்து நீலனை இழுத்துவர முன்னால் பாயப் போனான். அவனுடைய பெரியவர்கள் சட்டென்று அவனைப் பிடித்து தடுத்தனர். ''அவன் புலையனில்லையா?'' என்று தடுத்துப் பயமுறுத்தினர். இளைஞன் குழம்பிப் போய் நின்று விட்டான். தொலைவில்

காலிடறி விழுந்த சோமனால் எல்லாவற்றையும் பார்க்க முடிந்தது; ஆனால், நடந்த சங்கதி என்னவென்று புரிந்து கொள்ள முடியவில்லை. நீல எல்லோருடைய கண் முன்பாகவே முழுகிக் கொண்டிருந்தான். கடைசி முறையாக முழுகியே விட்டான். சோம எழுந்து ஓடிவந்து சேரும்போது எல்லாம் முடிந்து போயிருந்தது. எல்லோருடைய கண்ணெதிரிலேயே அந்தச் சிறு பிள்ளை நீரில் ஒரேயடியாக மறைந்தே போனான். சோம எல்லாவற்றையும் பார்த்து கூக்குரலிட்டு அழத் தொடங்கினான். அவனுக்கு நீச்சல் வராது. அப்போது பார்ப்பன இளைஞன் துணிந்து நீரில் குதித்தான். மற்றவர்கள் அவனைத் தடுக்க முயன்றும் முடியாமல் நின்றனர்! நீலனின் உடல் என்னமோ மேலே வந்தது; ஆனால் உயிர்தான் பிரிந்து போயிருந்தது! அந்த பார்ப்பன இளைஞன் உடலைக் கிடத்திவிட்டு, தலையைக் கவிழ்த்துக் கொண்டு புறப்பட்டுப் போனான்! சோம பேச முடியாமல் வாயடைத்து நின்றான்.

சோமனுக்கு புலையப் பிழைப்பின் ரணம் எப்படிப்பட்டதென்று அப்போது முழுமையாகப் புரிந்தது. பிணத்தைத் தூக்கிக் குடிசைக்குக் கொண்டு வந்தான். ஒருநாள் முழுவதும், போலீசார் சோதனைக்கு வரும்வரை, அதை குடிசையிலேயே வைத்திருக்க வேண்டியதாயிற்று. பலர் பிணத்தைப் பார்க்க வந்தனர். சங்கப்பய்யா பண்ணையாருக்கு செய்தி எட்டியது. அவரும் வந்தார். சோம பிணத்தை வைத்துக் கொண்டு, குடிசையின் கதவை மூடிக்கொண்டு யார் கண்ணுக்கும் படாதவாறு உட்கார்ந்து கொண்டான். வெளியிலிருந்து யார் கூப்பிட்டாலும் சமாதானம் சொன்னாலும் அவனிடமிருநது பேச்சுமில்லை ஏச்சுமில்லை. பெள்ளி மட்டும் 'ஓ'வென்று அழத் தொடங்கினாள். ''அளுவாத... அளுதியானா இந்த புள்ளைய நீயே கொன்னுதின்ன மாதிரி'' என்று சோம ஆணை வைத்தான்.

அன்று இரவு போலீசார் வந்து சோதனை செய்துவிட்டுப் போனார்களாம். பிணம் யார் கண்ணிலும் படாமலேயே மண்ணுக்குள் புதைந்தது. மறுநாள் காலை சோம உடுக்கையை ஒரே கதியில் இடைவெளியில்லாமல் வாசித்துக் கொண்டே இருந்தான்.

## 17

வயதாகிக் கொண்டே வந்ததால் சோமனுக்குக் குடும்பமே சுமையாகி விடும் என்பதாலோ என்னவோ, சாவும் - தோல்வியும் சேர்ந்து அவனது சுமையைக் குறைத்து வந்தன. மனச்சுமை மட்டும் ஏறிக் கொண்டேயிருந்தது. 'இந்த வருசம் நீல போன வருசம் சனிய. வர்ற வருசம் யாரோட மொறையோ? தெய்வம் என்னெக் கூப்பிட்டுகிட்டிருந்தா எந்தத் தொந்தரவுமில்லை' என்று சோம தனக்குள்ளாகவே அடிக்கடி நினைத்துக் கொள்வான். அவன் இப்போது எந்த வேலைக்கும் வெளியே போவதில்லை. வீட்டிலேயே உட்கார்ந்து கொண்டு விநாடிகளை எண்ணிக் கொண்டிருந்தான். விருப்பப்பட்டால் உடுக்கையை வாசித்துக் கொண்டே உட்கார்ந்து விடுவான். நேரம், காலம் என்று அவனைப் பொருத்த மட்டில் எதுவுமேயில்லை. பெள்ளியும் பெரிதும் சோர்ந்து போய் எதிலும் பிடிப்பில்லாமலிருந்தாள். வேலைக்குப் போனால் போவாள், இல்லையென்றால் இல்லை. சாப்பாட்டைப் பொருத்த வரையிலும்கூட அப்படியேதான். மனம் சற்று லேசாக இருக்கும்போது, கொண்டு வந்த அரிசி மீந்திருந்தால் சமையல், சாப்பாடு; இல்லையென்றால் அதுவும் இல்லை. இன்னும் மீதியிருப்பவன் காள. பசியெடுத்தால் பண்ணையார் வீட்டுப் புழக்கடைக்குச் சென்று இப்படியும் அப்படியும் நடை போடுவான். எசமானி இரக்கப்பட்டு ஏதாவது மிச்சம் மீதியைத் தருவாள். அவன் அதை வாங்கித் தின்பான். தின்று மீந்ததை அக்காவுக்கும் எடுத்து வந்து கொடுப்பான். இப்படியே சில

நாட்கள் கழிந்தன. பெள்ளியின் மனது மறுபடியும் பழைய உற்சாகத்தைப் பெற்று லேசாகி வந்தது. ''அளுது தீத்துட முடியுமா? இன்னும் நாம அளறதுக்கு எவ்ளோ இருக்குதோ?'' என்று சொல்லிக் கொள்வாள்.

ஒன்றிரண்டு நாட்களிலேயே பலத்த மழை பெய்யத் தொடங்கியது. சங்கப்பய்யா தானே சோமனின் குடிசைக்கு வந்தார். வெளியிலிருந்தே, ''சோமா... உள்ள இருக்கிறயா?'' என்று கூப்பிட்டார். அவரது குரலைக் கேட்டவுடனே சோம எழுந்து வெளியே வந்தான். ''எப்படியிருக்கிறே?'' என்று அவர் கேட்டதும் ''என்னுமோ இருக்கிறே(ன்) எசமா(ன்)'' என்றான். ''சோமா... ஒடம்பு சுமாரா இருந்தா ஒடனே வந்து சேரு... என்னா?'' என்றார் சங்கப்பய்யா. சோமனால் அதிகமாக எதுவும் சொல்ல முடியவில்லை. ''ஆவட்டும்...'' என்றான்.

நீலனின் சாவுக்குப் பிறகு தறிகெட்டு ஓடிய அவனது மனம், இப்போது மறுபடியும் ஒரு நிலைக்கு வந்து பழையவைகளை அசைபோடத் துவங்கியது. தான் ஒரு விவசாயியாக ஆகவேண்டும் என்ற ஆசை இந்த மழை காலத்திலேயாவது ஈடேறியேத் தீரவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டான். 'வருகின்ற மழைக் காலத்தைப் பார்க்க நீ உயிரோடிருக்க மாட்டாய்' என்று அவன் காதில் யாரோ சொல்வதைப் போலவே அவனுக்குப் பட்டது. 'எல்லா வேலையையும் சீக்கிரம் சீக்கிரமாகச் செய்தாவணும. இப்ப ஆகாதது எப்பவும் ஆகவே ஆகாது' என்று மேலும் மேலும் அதையே எண்ணத் தொடங்கினான். இப்போதிருக்கும் பாதையில் வெறும் முட்கள்தான். சங்கப்பய்யனோட வீட்டு முன்னால் அவன் உயிரையே விட்டாலும் அவனது அந்த ஒரு ஆசை மட்டும் நிறைவேறப் போவதில்லை. 'தான் புலையனாக இருக்கிற வரையிலும் தான் ஒருக்காலும் விவசாயியாக முடியாது என்பது நிச்சயம்' என்ற எண்ணம் வந்த அதே நேரத்தில் குருவனின் நினைவும்

அவனுக்கு வந்தது. குருவன் மீது மறுபடியும் கோபம் ஏற்படுவதற்கு மாறாக - பொறாமை ஏற்படுவதற்கு மாறாக ''அவ(ன்) மாதிரியே நாமும் ஆயிட்டா என்னா?'' என்ற எண்ணம்தான் வந்தது. 'தன் குல தெய்வத்தை நம்பி தன் ஆசை கை கூடாதபோது, பாதிரிங்க தெய்வத்தை நம்பினாதான் என்ன தப்பு?' இந்த எண்ணம் தோன்றியதுதான் தாமதம் - ஒரு நிமிடத்தில் அது அவன் மனதில் வேர்விட்டு கிளைகள் பரப்பி பெரிய மரமாகவே வளர்ந்துவிட்டது. நீல இறந்துபோன நினைவும் அவனை விட்டு நீங்காமலேயேயிருந்தது. அப்போது நீலனைக் காப்பாற்ற முயன்ற பார்ப்பன இளைஞனைத் தடுத்த மேல் சாதியினரின் அந்த கருணையற்ற செயல், மறுபடியும் காட்சியாக பத்து மடங்கு அழுத்தமான வண்ணங்களோடு அவன் கண்ணெதிரில் காட்சி தந்தது. 'தான் மட்டும் ஒரு புலையனாக இல்லாமல் வேறு ஏதாவது மட்டசாதியாக இருந்திருந்தாலும் தன் நீல(ன்) பிழைத்துக் கொண்டிருந்திருப்பானோ' என்று தோன்றியது. ''தெய்வத்துக்கும் வேண்டாத சாதி, பொலைய சாதி'' என்று முனகிக் கொண்டான். ''தன்ன மாதிரி ஆளுங்கள இந்த தெய்வம் எதுக்காகப் படைக்கணும்? இப்போ உசிரை எதுக்கு இப்படிப் பிழியணும்?'' என்று முனகிக் கொண்டான்.

''இனிமே வாணாம், இந்த ஊரு தெய்வத்தோட சவகாசமே வாணாம்! இனிமே, தனக்கும் சிலுவக்கார சாமிதான்! மக(ன்) குருவன விவசாயம் பண்றவனா பண்ணின பாதிரிங்க சாமிதான் தனக்கும்'' என்பதாகத் தீர்மானித்து அந்த முடிவை மகளிடமும் சொன்னான். இந்தத் தள்ளாத வயதிலேயும் தாளாத நெலைமையிலேயும் விவசாயியாக ஆக வேண்டுமென்கின்ற பிடிவாதம் தன் தகப்பனுடைய மனதிலிருந்து மறையாமலிருப்பதை அறிந்து அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. இன்னொரு பக்கம், அவள் மனதும்கூட அண்ணன் குருவனைப் பார்க்கத் துடித்துக் கொண்டிருந்தது. 'அவனாவது பக்கத்திலிருந்தால்

செத்துப் போன தன் சகோதரர்களின் இடத்தை இட்டு நிரப்புவான்; தகப்பனின் தள்ளாத வயதில் அவனுக்குத் துணையாக இருந்திருப்பான்' என்று எண்ணத் தொடங்கினாள். 'ஆனால், கிருத்துவனான அவனோடு தாங்கள் மறுபடியும் சேர்ந்து கொள்ள வேண்டுமானால் அவனைப் போலவே தாங்களும் கிருத்துவர்களாக வேண்டுமே!' ''நமக்கு இனி எந்தத் தெய்வமானால்தான் என்ன?'' - என்றும் எண்ணிக் கொண்டாள். மறுவிநாடியே, பாழாய் போன மன்வேலனின் ஆசையும் வந்தது. அவனுடனான கள்ளக் காதல் வாழ்க்கையில் நாட்டமும் மறுபடியும் துளிர்விட்டது. சில சமயங்களில் இரவு வேளைகளில் கனவில், தான் மன்வேலனின் மனைவியாவேன் என்று கற்பித்துக் கொள்வாள். குருவனும் மாரியின் புருசனாகி விடவில்லையா?

தகப்பனின் அருகில் வந்து தயங்கிக் கொண்டே அவள், ''நாம இனிமே பாதிரிங்க மதத்துல சேந்துட்டா என்னா? அப்போவாவது உனுக்கு சொந்த நெலத்துல ஏரு புடிக்கிற பாக்கியம் கெடைக்குமே!'' என்று சொல்லும்போது, அவன் மனதும் அதே போக்கிலேயே எண்ணிக் கொண்டிருந்தது.

''எல்லாரும் கைவுட்டுட்ட பின்னால அதுவாவது நடக்கட்டும்'' என்றான்.

சோமனின் இந்த முடிவு இப்போது உறுதியாயிற்று. அவனைத் தடுக்க வேண்டிய பெள்ளியே அவன் எண்ணத்துக்கு ஆதரவாக இருந்தாள். 'அப்படின்னா, நாம இனி அந்த பாதிரிகிட்ட கேட்டு குத்தகைக்கு நெலத்த திடப்படுத்திக்கிட்டு வந்துடணும்' என்று முடிவு செய்து கொண்டான். அதே முடிவில், ''அப்பிடின்னா நா(ன்) அந்த பாதிரிகிட்ட போயிட்டு வரட்டுமா?'' என்று கேட்டான். ஆனால் பெள்ளியோ அவனது இந்த யோசனையை உடனடியாக ஏற்றுக் கொள்ளாமல் ''யப்பா, போனவங்க போயிட்டாங்க; இருக்கிறவங்க மேல

கோவிச்சுகிட்டேயிருந்தா எப்பிடி?'' என்றாள். சோமனுக்கு அவள் சொன்னது புரியவில்லை. பெள்ளியே மறுபடியும், ''யப்பா, நீ போயி குருவண்ணன ஏ(ன்) கூப்புட்டுனு வந்துடக் கூடாது? அவன் நல்லாருந்தா அவங்கூடவே நாமளும் இருந்துக்கலாமே. உ(ன்) ஆசையும் கூடி வந்த மாதிரி ஆயிடும் இல்ல?'' என்றாள்.

மகள் சொல்வதும் சரியென்றே பட்டது. இப்போது பாதிரியிடம் போவதற்கு மாறாக குருவனைப் பார்ப்பது என்று தீர்மானித்தான். இப்படி இவன் தீர்மானித்த அதே வேளையில் மன்வேலனும் வாசலில் வந்து நின்றான். அவன், ''சோம....'' என்று அழைக்கவும் தகப்பனும் மகளும் வெளியே வந்தனர். பெள்ளியின் இதயம் நடுங்கத் துவங்கியது. மெதுவாக அவள் குடிசையின் உள்ளே போனாள். சோம அவனைப் பார்த்து ''நீங்க எதுக்கு இங்க வந்தீங்க? உங்க கடனையெல்லாந்தான் அடைச்சுட்டமே! அதுவுமில்லாம வேறெந்த வேலையையும் பாக்கி வெய்க்கலயே!'' என்றான்.

''நான் அதுக்காக வரல. இந்த ஊருக்கு ஒரு வேலையா வந்தேன். ம்... அப்புறம் யாரோ சொன்னாங்க. உன் சின்ன பையன் செத்துப் போயிட்டான்னு... பாவம்... விசாரிச்சுட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்றான்.

''அய்யோ கடவுளே, நீங்க செத்தவங்க பேச்ச எதுக்கு எடுக்குறீங்க? எவ்ளோ நாளிக்கி நம்மகூட இருக்கணும்னு ரொணம் இருக்குதோ அவ்ளோ நாளிக்கி நம்மகூட இருந்தாங்க. அது முடிஞ்சிப் போனதும் அவுங்கபாட்டுக்கு அவுங்க... நம்ம பாட்டுக்கு நாம...''

''அதுவும் சரிதான்... எல்லாம் கேட்டுவந்த அளவுதான்... எல்லாம் கடவுள் கிருப...''

''...............''

''அதுசரி சோமா.... நான் வரும்போது கொக்கடம் வழியாத்தான் வந்தேன். உம்மகன் அங்க விவசாயம் பண்ணிக்கிட்டிருக்கிறது தெரியுமில்ல. அவன், 'உங்களையெல்லாம் பாக்கணும்போல இருக்குது... வரட்டுமா?'ன்னு கேட்டான். நான் ரெண்டொரு நாள்ல திரும்பிப் போவேன். ஏதாவது சொல்லணுமா?''

பெள்ளி உள்ளே நின்று பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள். குருவனின் பெயரைக் கேட்டதும் வெளியே வந்தாள். மன்வேல் அவளைப் பார்த்து சிரித்தான். பெள்ளியும் சிரித்தாள்; உடனே சிரிப்பை மறைத்துக் கொண்டு தலையைத் தாழ்த்தியவாறு கால் விரல்களால் தரையைக் கீறிக் கொண்டே, ''யப்பா... அப்பிடின்னா நீ போயி குருவண்ணன கூட்டினு வந்துடு. நாமொ ரெண்டு மூணு நாளு இங்க இருந்துட்டு அப்புறம் இந்த வூரு ரொணத்தத் தீத்துணு பொறப்புட்டுடலாம்'' என்றாள்.

மன்வேல் அவர்களின் மனப்போக்கைப் புரிந்து கொண்டு, ''சோம, உன் மகன்கிட்ட போயி நீயும் சேர்ந்துகிட்டு கொக்கடத்திலேயே ஏன் சொகமா இருக்கக் கூடாது?'' என்பது போலச் சொன்னான்.

''அதப்பத்திதான் நெனச்சினிருக்கிறே(ன்). இனிமே எங்குளுக்கு இருக்கிறதும் அவ(ன்) ஒருத்த(ன்)தான் ஊணுகோலு. அவங்கூட நாங்க சண்ட போடறதும் சரியில்லதான்.''

''ஆனா, அவன்கூட நீங்க இருக்கணும்னா, உங்க சாதிக்காருங்க எதுவும் சொல்ல மாட்டாங்களா?''

''கங்காணியாரே, நாங்களும் பாதிரி மதத்துல சேந்துடலாம்னு இருக்கிறோம்'' என்றாள் பெள்ளி. மன்வேல் சிரித்துக் கொண்டான். மறுநாளே சோம தன் மகனை அழைப்பதற்காகக் கொக்கடத்திற்கு போவதென்று தீர்மானித்துக் கொண்டான்.

# 18

மறுநாள் விடியற் காலையிலேயே பெள்ளி எழுந்து, பயணம் புறப்பட இருந்த தன் தகப்பனுக்காக, கஞ்சி காய்ச்சினாள். காட்டிற்கு சென்று அந்தக் கிழங்கு, இந்தக் கிழங்கு என்று சில கிழங்குகளைக் கொண்டு வந்து வேக வைத்து 'வழிக்குணவு' (கட்டுச்சோறு) செய்து கொடுத்தாள். அண்ணனுக்கு ஏதாவதொரு அன்பளிப்பு ஆசையாக கொடுத்தனுப்ப வேண்டுமேயென்று தீவிரமாக எண்ணிப் பார்த்தாள். எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை. கடைசியில் மழைக்காலத்திற்கென்று ஒரு மூலையில் கட்டிப் போட்டு வைத்திருந்த பலாக் கொட்டைகளைக் கொண்டு வந்து, நன்றாகச் சுட்டு, தோலுரித்து ஒரு இலையில் கட்டி ''இது அண்ணனுக்கு இருக்கட்டும்'' என்று தகப்பனின் கையில் வைத்தாள். சோம சாப்பிட்டு முடிந்ததும் அவளிடம் சொல்லிக் கொண்டு கிழங்குப் பொதியையும் 'வழிக்குணவை'யும் ஒரு கையில் எடுத்துக் கொண்டு, மற்றொரு கையில் ஒரு தடியையும் எடுத்துக் கொண்டு பயணம் புறப்பட்டான். அவன் பின்னாலேயே அவனது சோணி நாயும் புறப்பட்டது. பெள்ளியும் ''சோணி வருதே? வரட்டுமா?'' என்று கேட்டாள். உற்சாகத்திலிருந்த சோம, ''வரட்டும்'' என்றான். சோணியும் அவனைப் பின் தொடர்ந்தது.

பெள்ளி, தம்பி காளனை கீரை பறித்துவர அனுப்பிவிட்டு, மாடுகளை மேய்ச்சலுக்கு விரட்டிவிட்டு, தானும் பண்ணை வீட்டு வேலைக்குப் போகத் தயாராகிக் கொண்டிருந்தாள். அப்போது மன்வேல் தற்செயலாக வருவதைப் போல அங்கு வந்து நின்று, ''என்ன பெள்ளி, எப்படியிருக்கிறே?'' என்று கேட்டுவிட்டு ஒரு மாதிரியாக சிரித்தான். இம்முறை பெள்ளி சிரிக்கவில்லை. ''இருக்கிறேன் இப்பிடி'' என்று சலித்துக் கொண்டு மௌனமானாள்.

''உங்க அப்பன் இருக்கிறானா? கொகக்கடத்துக்குப் போயிட்டானா?''

''கொக்கடத்துக்குத்தான் போயிருக்காங்க.''

''வீட்டுல யாரு இருக்காங்க?''

''யாரும் இல்ல.''

மன்வேலனுக்குத் துணிவு பிறந்தது. பழைய கள்ளத் தொடர்பை மீண்டும் விரும்பித்தான் அவன் இங்கே வந்தது. இப்போது வீட்டில் பெள்ளி மட்டுமே இருந்ததால், அவன் ஆனந்தத்திற்கு அளவேயில்லாமல் போயிற்று. பெள்ளியின் அருகில் வந்து நெருங்கி நின்றான். பெள்ளியின் மனமும் மறுபடியும் நிலைகொள்ளாமல் தவிக்கத் தொடங்கியது. சற்றுநேரம் குழப்பத்தில் சிக்கித் தவித்தாள். மீண்டும் காதல் வேட்கையின் ஈர்ப்பு ஒருபுறம். தோட்டத்து நினைவுகள் மறுபுறம். மாறியிருந்த நிலைமை, காலம், இடமாற்றம் ஆகியவற்றின் அறிவு மற்றொரு புறம். அவளும் அசையாமல் மௌனமாகவே நின்றிருந்தாள். தன் முகத்தை உயர்த்தி அவனைப் பார்க்கும் துணிவு அவளுக்கு இல்லை. ஆனால், மன்வேலனுக்கு என்ன பயம்? அவன்தான் பலரின் குடும்ப வாழ்க்கையில் விளையாடி, இதே மாதிரி பிரச்சனைகளுக்குக் காரணமாக இருந்து பழக்கப்பட்டவன் ஆயிற்றே! கொஞ்சமும் தயங்காமல் அவளின் தோளைத் தொட்டு, ''என்ன, எங்கூட பேசமாட்டியா? கோவமா?'' என்று கேட்டான். பெள்ளி பேசாமலே நின்றாள். மன்வேல் மேலும் துணிவோடு அவள் கையைப் பற்றிக் கொண்டு குடிசைக்குள் நுழைந்தான். அவளும் தன்னை மறந்தவளாய் அவனைப் பின் தொடர்ந்தாள்....

மகன் குருவனைப் பார்க்கப் பயணம் புறப்பட்ட சோம, காலை வீசிப் போட்டு வேகமாக நடந்தான். அவனது குடிசையிலிருந்து எங்கே போவதாயிருந்தாலும் முதலில்

ஒரு குட்டித் தேவதையின் கோயிலைத் தாண்டித்தான் போக வேண்டும். அது பஞ்சுர்லி பூதத்தின் கோயில். அந்த வழியாகப் போகும் போதெல்லாம் அங்கே நின்று தரையில் விழுந்துக் கும்பிட்டுவிட்டு புறப்பட்டு போவதுதான் அவன் வழக்கம். வழிகாட்டியைப் போல அவனுக்கும் முன்னால் போகும் சோமனின் நாய் சோணியும் கூட பஞ்சுர்லி கோயில் வந்தவுடன் தானாகவே நின்றுவிடும். சோம வந்து தரையில் விழுந்துக் கும்பிட்டு எழுந்து நின்ற பிறகுதான் அதுவும் அவனுக்கு முன்னால் புறப்பட்டுப் போகும். இன்றைக்கும் கூட கோயில் வந்தவுடனே சோணி நாயும் வழக்கம்போல் நின்றது. சோமனும் தன்னையறியாமல் தடுமாறி நின்று முழங்கால்களை பழக்கத்தின் காரணமாக மடித்து ஊன்றி நின்றான். இதயம் சூடேறியது. 'தான் பாதிரி மதத்துல சேரப் போறவன். இதுக்குமேல பஞ்சுர்லிக்கு முட்டி போடுவதா?' - என்ற எண்ணம் தோன்றியது! கால்களை நிமிர்த்தி எழப் பார்த்தான். முடியவில்லை. பஞ்சுர்லி பூதம் தன் எதிரில் நிற்பதாகத் தோன்றியது.

''சோமா... மீசை நரைக்கிற வரைக்கும் என்னையே நம்பி என் பக்தனா இருந்துட்டு, இப்போ, சாகிறதுக்கு மூணு நாளைக்கு முன்னாடி, என்னை விட்டுட்டு, பாதிரி பின்னால போகப் போறியா?'' என்று கேட்ட மாதிரி இருந்தது. அவன் உடம்பு சிலிர்த்தது.

தலைமுறைத் தலைமுறையாக நம்பி வந்திருக்கிற தெய்வத்தை மறந்துவிட்டு, தான் இப்படியொரு அடாத செயலைச் செய்வது சரியில்லையென்று பட்டது அவனுக்கு. 'பாதிரி மதத்துக்காருங்க சாவறதில்லையா? சுகம் - துக்கம் ரெண்டுமே எப்பிடியோ ஒருவகையிலே கிருஸ்துவங்களுக்கும் வரத்தானே செய்யுது?' - என்பதைப் போன்ற எண்ணங்கள் அவனைக் குழப்பின. ஒருபக்கம் 'தான் நம்பிய தெய்வத்தை - பஞ்சுர்லிபூதத்தை - மறந்து போய்விட்டால், சாகிற வரைக்கும் அதோட

தொல்லையிலிருந்து தப்ப முடியாதே!' என்ற அச்சம் தோன்றியது. அங்கேயே நின்று யோசித்துப் பார்த்தான். கடைசியில் துணிவோடு, ''என்னவானாலும் சரி, இருக்கிறபடியே இருந்துட்டு, வந்ததப் பட்டுட்டுப் போறேன்!'' என்று எண்ணிக் கொண்டு குடிசைக்குத் திரும்பினான்.

அவன் வரும்போது குடிசைக் கதவு திறந்தே இருந்தது. நேராக உள்ளே நுழைந்தான். கண்ணெதிரில் மன்வேலனும் பெள்ளியும் ஒரே பாயில் நெருங்கி உட்கார்ந்து தங்களை மறந்து பேசிக் கொண்டிருந்தனர். அதைப் பார்த்ததும் அவனுக்கு உடம்பெல்லாம் பற்றி எரிந்தது. மன்வேலனும் பெள்ளியும் திடுக்கிட்டுத் துள்ளி எழுந்து நின்றனர். சோம இரண்டு நிமிடம் வரை அவர்களையே உற்று பார்த்துக் கொண்டிருந்தான். ஒருமுறை ஓங்கி மூச்சிழுத்துவிட்டு, கையிலிருந்த தடியை மன்வேலனின் மேல் வீசினான். அது மன்வேலனின் காலில் பட்டுப் பறந்தது. மன்வேல் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பாய்ந்து வெளியே ஓடினான். அங்கே நிற்காமல் கண்ணிமைப்பதற்குள் அந்தப் பகுதியிலிருந்தே தலைதெறிக்க ஓடி மறைந்து போனான். பெள்ளியை என்ன செய்வதென்று தோன்றாமல், சோம பாய்ந்து அவள் கையைப் பற்றினான். பெள்ளி வேர்த்து விருவிருத்து நடுங்கிப் போய் நின்றாள். அவனும் அப்படியே நின்று உன்மத்தனைப் போல அவளையே முறைத்துப் பார்த்தான். பிறகு அவள் கழுத்தை இரு கைகளாலும் இறுக்கிப் பிடித்து வெறி பிடித்தவனைப் போல அவளை முத்தமிட்டு, பித்தனைப் போல சிரிக்கத் தொடங்கினான். அவனது எக்காளச் சிரிப்பு ஓங்கி வரவர, பெள்ளியின் சர்வசலனங்களும் ஒடுங்கிக் கொண்டே வந்தன. கடைசியில் சோம அவள் கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளி குடிசையின் கதவை இழுத்துச் சாத்தினான். பெள்ளி எதிரிலிருந்த வெறுந்தரையில் உருண்டு விழுந்தாள். அங்கிருந்து எழுந்து நிற்கும் முயற்சிகூட இல்லாமல் அப்படியே கிடந்தாள்.

நடுப்பகலாயிற்று. காள வீட்டுக்கு வந்தான். உள்ளே போனால், சோம தடியைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, ''போ... ஒங்க அக்கா கூடவே நீயும் பேயிடு... எனுக்கு இனிமெ புள்ளைங்களே இல்ல...'' என்று கத்தினான். காள பயந்துபோய் வாசலுக்கு வந்தான். பயந்து பயந்து, ''யக்கா... யக்கா'' என்று கூப்பிட்டான். பெள்ளி ஒரு மரத்தடியில் விழுந்து கிடந்தாள். ஓடிப்போய் அவளைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தான். அவளை பேசவைக்க எவ்வளவு முயன்றும் பெள்ளி வாயைத் திறக்கவேயில்லை. அழுது அழுது அவனும் சோர்ந்து போய் அவள் பக்கத்திலேயே படுத்துவிட்டான். சற்று நேரத்தில் அப்படியே அயர்ந்து தூங்கியும் போய்விட்டான். மாலை நெருங்கியதும் சோம வெளியில் வந்தான். வெளியே விழுந்து கிடக்கும் பெள்ளியைப் பார்த்து ''இதபாரு... இது என்வூடு... நீங்க யாரும் உள்ள கால வெக்கக் கூடாது!'' என்று சொல்லிவிட்டு மாட்டுக் கொட்டகைக்குப் போய் எருதுகளை அவிழ்த்துவிட்டு கலப்பைக் காலைத் தூக்கிக் கொண்டான்.

பண்ணையார் நிலத்திற்குப் போய் நான்கு சுற்று ஆழ உழுதுவிட்டு திரும்பவும் எருதுகளை வீட்டிற்கு ஓட்டி வந்தான். கலப்பையைக் கழட்டிவிட்டு எருதுகளை ஏரிக்கரைக்கு ஓட்டிச் சென்று மேய்த்து, சோர்வு போக அவைகளின் உடம்பெல்லம் நீவிவிட்டு மீண்டும் வீட்டிற்கு ஓட்டி வந்தான். மாலை மங்கி வந்தது. மறுபடியும் எருதுகளை ஓட்டிக் கொண்டு போனான். பெள்ளிக்கு, 'எங்க?' என்று கேட்கும் துணிவு எழவில்லை. சொல்லப் போனால் அவள் தலைநிமிர்ந்து பார்க்கவேயில்லை. அப்படியே பட்டினி கிடந்து தன் தகப்பனிடம் மன்னிப்பு கேட்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்தாள்! தன்னை அவன் பாசத்தோடு வளர்த்த விதம், தானும்

அவனை அன்போடும் அக்கறையோடும் கவனித்துக் கொண்ட முறை எல்லாவற்றையும் நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

நடு இரவில் சோம மட்டுமே தனியாகத் திரும்பி வந்தான். வானத்து வெண்ணிலா மங்கலான ஒளியில் வீட்டு முன்புற வாசலை தெளிவில்லாமல் காட்டிக் கொண்டிருந்தது. அவன் வீட்டுக்கு வந்தது நிழலாகத் தெரிந்தது. வந்தவன் குடிசைக்குள் போய் உட்கார்ந்தான்.

இனி அவனுடைய உலகத்தில் பெள்ளி தென்படவே மாட்டாள்! பண்ணையாரின் ருணத்தைத் (நன்றிக் கடனைத்) தீர்க்க உழுதுவிட்டு வந்தான்; எருதுகளின் ருணத்தைத் தீர்க்க அவைகளை மேய்த்தாயிற்று; அவைகளின் நினைப்பை மறப்பதற்கு, அவைகள் கன்றுகளாக இருந்தபோது எந்தக் காட்டில் கண்டெடுத்தானோ அங்கேயே ஓட்டிச் சென்று விட்டுவிட்டும் வந்தாயிற்று. எஞ்சியுள்ள அவனது ஆசையென்றால் அது அவனது கலப்பையின் பாடுதான்... மீண்டும் வெளியே வந்தான். கலப்பையையும் நுகத்தடியையும் தரையில் போட்டு உடைத்துச் சுக்குநூறாக்கி, உடைசல்களை வாசலிலேயே குவித்து வைத்தான். மறுபடியும் உள்ளே சென்று சற்று நேரத்தில் வெளியே வந்தான். இம்முறை ஒரு கொள்ளியைக் கொளுத்தி எடுத்து வந்தான். அதைப் பார்த்த பெள்ளி கரகரவென்று கண்ணீர் சிந்தினாள். ஆனால், சோம மட்டும் வேள்வியொன்றை நடத்துகின்றவனைப் போல கலங்காமல் ஒரே சிந்தனையில் கம்பீரமாக இருந்தான். கண்ணிமைகள் கூட அசையவில்லை. குவித்து வைத்த ஏர்க்கலப்பையின் உடைசலுக்குத் தீமூட்டி அவை கொழுந்துவிட்டு எரிந்து சாம்பலாவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாம் முடிந்த பிறகு மறுபடியும் குடிசைக்குள் போய் உட்கார்ந்து கொண்டு, சிந்தனையில்

மூழ்கிப் போனான். 'எ(ன்) பெள்ளி... எனக்கே வஞ்சன பண்ணிப்புட்டாளே!' என்று எண்ணியெண்ணி மருகினான். கடைசியில், அவளது இளமை, தான் அவள் திருமணத்திற்கு ஏற்பாடு எதுவும் செய்யாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்த தப்பு, தனக்காகவே அவள் தோட்டத்திற்குப் போனது, தன் கடனை வேகமாகத் தீர்த்துவிட்டு வந்தது - எல்லா நினைவுகளும் வந்தன. ''பாவம்!'' என்று பரிதாபப் பட்டுக் கொண்டான். ''நான் அவ மாதிரி, பொண்ணா இருந்திருந்தா எ(ன்) கதி என்னாகியிருக்கும்?'' என்று கலங்கினான்... எல்லாம் ஒரு விநாடி மட்டுமே வந்து போன கருணைதான்! மறுவிநாடியே ''எனக்கு என்ன ஆனாதா(ன்) என்னா? எங்காலம் முடிஞ்சி போச்சி. யாரு என்ன பண்ணா எனக்கு என்னா? குருவ அப்பிடிப் போனான். பெள்ளி இப்பிடிப் போயிட்டா! காள இன்னும் எப்படியெல்லாமோ ஆவா(ன்)! யாரு எப்பிடியானா எனுக்கு என்னா?'' என்று தனக்குத்தானே சிரித்துக் கொண்டான். இதுவரை அவனிடம் இல்லாத ஏளனச் சிரிப்பு அது.

சரி... ஒருமுறை உடுக்கையை எடுத்துப் பிடித்துக் கொண்டு அடிக்கத் தொடங்கினான். அந்த ஆனந்தம் மற்றவர்களுக்குக் கிடைக்கக் கூடாது என்றோ என்னவோ, எழுந்து போய் கதவைக் கொஞ்சம் அழுத்தி மூடிவிட்டு வந்து தன் உடுக்கையை மீண்டும் அடிக்க உட்கார்ந்தான். அன்று அவன் உடுக்கையை வாசித்ததைப் போல அவனுடைய வாழ்நாளிலேயே என்றுமே வாசித்ததில்லை; இனியும் வாசிக்கப் போவதில்லை. அவன் வாசித்தது என்னவோ சிறிது நேரமேதான். ஆனால், உண்மையில் அது பிரளயத் தாண்டவத்திற்கான முழவு போல நீண்டு நின்று எதிரொலித்தது. சிறிது நேரத்தில், உடுக்கையின் 'டமடம்ம... டமடக்க...' ஒலி நின்றது; ஒரேயடியாக

நின்றுவிட்டது. மறுகணமே சோமனின் இதயத் துடிப்பான 'டமடம்ம... டமடக்க' ஒலியும் நின்றது. அதுவும் ஒரேயடியாக நின்றுவிட்டது.

திடீரென்று உள்ளேயிருந்த வந்த 'டம... டம்ம' ஒலி நின்று போகவே, என்னவோ ஏதோ என்று பயந்துபோன பெள்ளி கதவை நோக்கி ஓடி வந்தாள்; குறுக்காக எருதுகள் வந்து நின்றிருந்தன. காட்டிலிருந்து சோமனின் பின்னாலேயே அவைகள் திரும்பி விட்டிருந்தன. சோணி நாயும் வந்து நின்றிருந்தது. அவைகளைத் தள்ளிக் கொண்டு பெள்ளி குடிசைக்குள்ளே போனாள் - அரையிருட்டில் அவள் கண்டது - சோமனின் சமாதி நிலையைத்தான்!

பிடித்திருந்த உடுக்கை; ஓங்கிய கை; கண்களில் நிறைந்திருந்த ஆவேசம் - எல்லாம் இருந்தது இருந்தபடியே இருந்தன. ஆனால், சோம மட்டும் இல்லை!

“உழைப்பதற்கு மட்டுமே என்று ஒதுக்கப்பட்டு, ஒடுக்கப்பட்ட சாதியிலேயே மிகவும் கீழ்ச்சாதியில் பிறந்தவன் சோம. தலைமுறைகளாக கொத்தடிமைகளாக, உயர் சாதி பண்ணையாரிடம் கூலியடிமையாக மட்டுமே உழன்று உயிர் வாழவேண்டிய நிலையிலிருக்கும் அவனுக்குள்ளும் ஒரு ஆசை. கரடான ஒரு கையளவு துண்டு நிலத்தையாவது தனக்கென்று பெற்று உழுது பயிர் செய்து தான் ஒரு விவசாயியாக வேண்டுமென்று. சமூக அமைப்பு விதித்திருக்கும் பல்வேறு தடைகளையும் மீறி, அவனது நிழல் கூட தம்மீது பட்டுவிடக் கூடாது என்று அவனைத் தள்ளி வைத்திருக்கும் சமூகக் கட்டாயத்தையும் மீறி, தன் அடங்காத ஆசையை நிறைவேற்றிக் கொள்ள கனவு காண்கிறான். அந்தக் கனவு, கனவு நிலையிலேயே கருகிப் போகும்முன் அவன் குடும்பமே குலைந்து போகின்றது. இறுதியில் எஞ்சியிருப்பது....? அவனும் அவனது உடுக்கையும்தான்!.......”